43

உ

திருப்போரூர்ச்

# சந்நிதிமுறையும்

பிற நூல்களும்



ஸ்ரீ கந்தசாமி தெய்வத்தானம்

திருப்போரூர்

ACC. No. 25808

7915

உ

ஸ்ரீ சிதம்பர சுவாமிகள்

அருளிச்செய்த

# திருப்போரூர்ச் சந்நிதிமுறையும்

பிற நூல்களும்

A

79/5

உ

வேலுமயிலுந்துணை

ஸ்ரீ சிதம்பர சுவாமிகள்

அருளிச்செய்த

## திருப்போரூர்ச்

# சந்நிதிமுறையும்

மீனாட்சியம்மை கலிவெண்பா,
வேதகிரீசுரர் பதிகம், குமாரதேவர் நெஞ்சுவிடு தூது,
குமாரதேவர் பதிகம், பஞ்சதிகார விளக்கம்

ஆகியனவும்

குறிப்புரையுடன்.




கந்தசுவாமி தேவத்தானம்,
திருப்போரூர் :: செங்கற்பட்டு மாவட்டம்.

உரிமையுடையது] 1967 [விலை ரூ. 2-00

79/2



# பொருளடக்கம்

உ

திரு முருகன் துணை

திருப்போரூர் ஸ்ரீ கந்தசாமி தேவஸ்தான

பரம்பரை தர்மகர்த்தர்

அருள்திரு. சிதம்பர சிவஞான சுவாமிகள்

# ஆசியுரை

சித்திக்கு வித்தாகி விளங்கும் இச் செந்தமிழ் நாட்டில் முத்திக்கு வித்திட்ட முனிபுங்கவர்கள் பலருளர். அவர்கள் விளைத்த ஞானப்பயிர் உலகத்துயிர்கள் யாவற்றுக்கும் இருமைப் பயனையும் தரவல்ல சிறப்புடையது. அவ்வாறு ஞான போனக அமுதுதவிய பெருமக்களில் ஒருவரே நம் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் ஆவர். அவர்கள் இயற்றியருளிய அமிழ்தாம் தமிழினை ஆரா வேட்கையொடு பருகித் திருப்போரூர் முருகனின் அருளாம்பயனை மன்பதை பெறவேண்டுமென்பது இறைவனின் திருவுள்ளக் குறிப்பு போலும். அதனால் தோன்றியதே திருப்போரூர்ச் சந்நிதிமுறை ஆகும்.

இந் நூலினைப் பாட்டின் பொருளுணர்ந்து படித்து செல்வர் சிவபுரத்தில் யாவரும் எளிதில் சேரலாம். திருப்போரூர் முருகன் திருவருளைப் பெற வழி வகுக்கும் பான்மைத்தாய் 'சேரவாரும் சகத்தீரே' என சுவாமிகள் பாமர மக்களையும் தம் வசப்படுத்தி அருள் வழிக்கு ஆளாக்கும் திறத்தை இந்நூலில் யாண்டும் காணலாம்.

இந்நூல் செப்பமுற அமைதற்குரிய எல்லா முயற்சிகளையும் தம்முடைய இடையறு உழைப்பினால் உதவிய நல்லிசைப்புலவர் அம்பை. இரா. சங்கரனார் அவர்கட்கும்,

நன்முறையில் இந்நூலை அச்சிட்ட முருகன் பதிப்பகத் தாராகிய அன்பர் மு. நாராயணசாமி முதலியாருக்கும் எம் நல்லாசி என்றும் உரியதாகுக.

இன்னும் பல பெருமைகளுு மிக்குள்ள இந்நூலை யாவரும் வாங்கிப் படித்து அவனருளைப் பெற்றுச் சிறந் தோங்குவார்களாக. அதற்குத் திருப்போரூர் முருகன் இன்னருள் சுரந்து வாழ்வில் நல்வளம் பலவற்றையும் நல்குவானாக.

திருப்போரூர்
30—10—67.

சிதம்பர சிவஞான சுவாமிகள்

உ

சிவமயம்

வேலுமயிலுந் துணை

# பதிப்புரை

திருப்போரூர்ச் சந்நிதி முறையையும் சிதம்பர சுவாமிகள் அருளிச்செய்த ஏனைய பாடல்களையும் திருப் போரூர் ஸ்ரீகந்தசுவாமி தேவத்தான பரம்பரை தர்ம கர்த்தர் அருள்திரு சிதம்பர சிவஞான சுவாமிகள் தம் தேவத்தான வெளியீடாக வெளியிட வேண்டுமென்று திருவுளங் கொண்டருளினர்கள்.

அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் இந்நன்னு ளில் திருமுருகன் திருமுன்னர் அவன் புகழைப் பாடிப் பரவத்தக்க இந்நன்னூல் வெளி வருகின்றது.

திருப்போரூர்ச் சந்நிதிமுறை முதலில் ஏட்டு வடிவி லிருந்து பின் அச்சுவாகனமேறிற்று. ஜான்மர்டாக் என் னும் ஆங்கிலேயர் 1865-ல் அக்காலத்தில் வெளிவந்துள தமிழ் நூல்களையெல்லாம் ஒழுங்குபடுத்தி ஒரு அகராதி வெளியிட்டார். அந்நூலகராதியில் திருப்போரூர்ச் சந் நிதிமுறையும் இடம் பெற்றுள்ளது. 106 பக்கங்களைக் கொண்டதாய் நான்கு அணுவுக்கு விற்கப்பட்டுள்ளது என அவ்வகராதியில் குறிப்பு காணப்பெறுகிறது. ஆகவே 1865க்கு முன்னரே சந்நிதிமுறை அச்சுவாகன மேறிற்று. அது யார் பதிப்பு என்பது தெரிய வாய்ப் பில்லை.

பின்னர் அச்சிடப்பட்டு வெளியான சந்நிதிமுறைப் பதிப்புக்களில் ஒல்லும் வகையான் கிடைத்தவற்றின் விவரம் வருமாறு:—

1. காஞ்சிபுரம் சபாபதிமுதலியார் பதிப்பு; பிரபாகர அச்சகம், சிந்தாதிரிப்பேட்டை; (ஆனந்த வருஷம்) 1854; 112 பக்கங்கள்.

2. மர அச்சுப்பதிப்பு; மிகவும் சிறந்த பதிப்பு; 114 பக்கம். காலம் தெரியவில்லை.

3. வே. குமாரசாமி ஐயர் அண்டு சுப்பு அருணசலக் குருக்கள்; புதுவை லட்சுமி விலாச சாலை; 1871.

4. ஊ. புஷ்பரதச் செட்டியார்; கலா ரத்னகரம் அச்சுக்கூடம்; 1871 நவம்பர்; முதற்பதிப்பு.

5. பு. இ. பரசுராம முதலி; பரப்பிரம்ம அச்சியந்திர சாலை, சென்னை; 1881 அக்டோபர்; இரண்டாம் பதிப்பு.

6. ஊ. புஷ்பரதச் செட்டியார்; கலா ரத்னகரம் அச்சுக்கூடம்; 1885 செப்டம்பர்; மூன்ரும் பதிப்பு.

7. T. K. சுப்பராயச் செட்டியார் தம் உரையுடன்; ஸ்டார் ஆவ் இந்தியா பிரஸ், சென்னை; 1892; ஜூனில் முதல் பாகமும் ஆகஸ்டில் இரண்டாம்பாகமும் மூன்ரும் பாகமும் வெளியாயின. இவ்வுரை நூலில் முதல் இரண்டு பாகங்கள் 96 பக்கம் கொண்டது. இலண்டன் பிரிட்டிஷ் மியூசியத்திலுமுள்ளது என அங்குள்ள நூலகராதியிலிருந்து தெரிகிறது. இவர் முதல்பாட்டிலிருந்து மட்டுவிருத்தம் 'உவமையறு' என்னும் செய்யுள் முடிய 426 செய்யுள்கட்கு உரை யெழுதியுள்ளார்.

8. காஞ்சி ஆலாலசுந்தரம் பிள்ளை அவர்கள் உரையுடன்; மயிலை செந்தில்வேலு முதலியார் பதிப்பு; இந்து தியாலாஜிகல் அச்சகம், சென்னை; (விஜயவருஷம்) 1893;

இவர் மட்டுவிருத்தம் "மயக்கமிடர் காணு" முதல், நூல் முடிய 300 செய்யுள்களுக்கு உரை எழுதியுள்ளார். இவ்விருவருரையும் சேர்த்து 524 பக்கங்கள்.

9. அமரம்பேடு இரங்கசாமி முதலியார் சன்ஸ்; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை; 1927.

10. சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை; திரு. வி. உலகநாத முதலியார் மணிவிழா வெளியீடு; சாது அச்சுக்கூடம், சென்னை-14; 1941; சிதம்பர சுவாமிகள் இயற்றிய எல்லாச் செய்யுள் நூல்களும் ஞானியாரடிகள் (சந்நிதிமுறைக்கு மட்டும்) குறிப்புரையுடன் வெளியாயிற்று.

11. சைவ சித்தாந்த மகாசமாஜம், சென்னை; சாது அச்சுக்கூடம், சென்னை-14; 1948; சந்நிதிமுறை மட்டும் ஞானியாரடிகள் குறிப்புரையுடன்.

இவற்றுள் இரண்டாவதாகக் குறிப்பிடப்பெற்ற மர அச்சுப் பதிப்பு நூல்தான் மிகவும் போற்றத்தக்கது. சென்னை சைவ சித்தாந்த மகாசமாஜப் பதிப்புக்கள் இரண்டும் கூடியமட்டும் பிழையறப் பதிப்பிக்கப்பட்டும் கூட அவைகளிலும் பல பிழைகள் காணப்பெற்றன. அப்பிழைகளைக் காண உறுதுணையாகவிருந்தது அம் மர அச்சுப்பதிப்பேயாகும் ஒரு பழைய புத்தகக் கடையிலிருந்து இப்பதிப்பைத் தற்செயலாகச் சில ஆண்டுகளுக்கு முன்னர் வாங்கி வைத்திருந்தேன். திருப்போரூர்முருகன் திருஅருள் தான் அவ்வாறு அதனைவாங்கி வைத்திருக்குமாறு உள்நின்றுணர்த்தியதுபோலும். இந்நூலுள் கூடியமட்டும் பிழைகள் அறவேயில்லை என்று கூறலாம். ஏதாவது பிழைகள் காணப்பெறின் தெரிவிக்கின் அடுத்த பதிப்பில் அவை திருத்தப்பெறும்.

மேலும் திருப்போரூர்ச்சந்நிதிமுறையுடன் ஸ்ரீசிதம்பர சுவாமிகள் அருளியபாடல்கள் அனைத்தையும் இந்நூலில் சர்த்து வெளியிட்டிருக்கிறோம்.

இத்திருப்போரூர்ச்சந்நிதிமுறை பலமுறை பலபெரு மக்களால் வெளியிடப்பட்டிருக்கிறது. இருப்பினும் திருப் போரூர் கந்தசாமி தேவத்தானத்தின் சார்பில் வெளி யிடப்பெறும் திருப்போரூர்ச் சந்நிதிமுறைப் பதிப்பு இதுவே முதன் முறையாகும். அத்துடன் பல சிறப்பு களுடன் இப்பதிப்பு விளங்குவது யாவருக்கும் இன்பூட்டு வதாகும்.

இந்நூலை இற்றைக்கு ஏறக்குறைய முந்நூற்று ஐம் பது ஆண்டுகளுக்கு முன்னர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் திருப்போரூர் முருகப்பெருமான் மீது சிறந்த தோத் திரங்கள் அமைய உலகத்துயிர்கள்மேல் கொண்ட கருணைப் பெருக்கால் பாடியருளினார்கள். மதுரை மீனாட்சியம்மையின் அருள் வாய்க்கப்பெற்று தமிழ் இலக்கண இலக்கியப் புலமை சிறந்து விளங்க அதன் பலனால் போந்த அமுத இன்கவிகளிவை என்று சுருங்கக் கூறலாம். பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மாண வர் திருமுதுகுன்றம் குமாரதேவரைத் தம் ஞானாசிரிய ராகக்கொண்டு அவர்பால் பல ஞான நூல்களையும்கேட்டு அறிவு நிறைவுற்ற பெருமானார் ஸ்ரீசிதம்பர சுவாமிகள் ஆவர். அவர்கள் இந்நூலிற்கண்ட பாடல்கள் தவிர சாந்தலிங்க சுவாமிகள் அருளிய வைராக்கிய சதகம், வைராக்கியதீபம், அவிரோதவுந்தியார், கொலைமறுத்தல், ஆகிய நான்கு நூல்களுக்கும் காழி கண்ணுடைய வள்ள லார் இயற்றிய ஒழிவிலொடுக்கத்திற்கும் சிறந்த உரை இயற்றியருளியுள்ளார்கள். அவ்வுரைகள் யாவும் உச்சி மேல் வைத்துப் போற்றத்தக்க நிலையிலுள்ளன. சுவாமி

கள் மீனுட்சியம்மையின் திருவருள் தூண்டப்பெற்றுத் திருப்போரூருக்கு வந்து அங்கு மறைப்புண்டிருந்த திரு முருகன் ஆலயத்தைப் புதுப்பித்து விளக்கமுறச் செய் தார்கள். அத்துடனமையாது அப்பெருமானைப் பாட "சந்நிதிமுறை" எனும் பெயரிய அரிய பிரபந்தமொன் றினையே புதுப்படைப்பாக 726 பாடல்களால் பாடி யருளினுர்கள். தமக்கு அருள்செய்த மீனுட்சியம்மையை யும் தம் ஞானசிரியர் குமாரதேவரையும் தனி நூல் களால் பாடியருளினுர்கள். திருப்போரூர்ச் சந்நிதிமுறை யைப் பாடினல் திருவாசகம் போன்று மனத்தை உருக்கும் தன்மை அதன்கண் அமைந்திருத்தலை ஆன்ருேர் அறிவர். சந்நிதியில் முறையிடும் பான்மைத் தாதலின் உருக்கம் காணப்பெறுவது இயல்பேயன்ருே! ஸ்ரீசிதம்பர சுவாமிகள் தம் பாடல்களில் சமயக்கருத்து களை விளக்கியருளுந் திறத்தையும் பெருமான் பெருமை பற்றி எடுத்துக் கூறும் பாங்கையும் மக்கள் அறியாமை யால் அவனடி சேராதுழலும் சிறுமையின் தன்மையை யும் பல்வேறு முறைகளால் சிறப்புற விளக்கிக் கூறியுள் ளார்கள். பாமர மகனும் இதனைப் பாடினல் என்பு நெக்குருகி முருகன் வயப்பட்டு அன்பனுவது திண்ணம். "பாவெனப் படுவதுன் பாட்டு" என்று மணிவாசகப் பெருமானைச் சிவப்பிரகாசர் குறிப்பது போன்று திருப் போரூர்ச் சிதம்பர சுவாமிகளின் பாட்டையும் சிறப்பித் துக் கூறலாம்.

திருப்போரூர்ச் சந்நிதிமுறைக்கு மட்டும் அருள்திரு ஞானியார் அடிகள் குறிப்புரை சமாஜப் பதிப்பில் காணப்பட்டுள்ளது.மற்றைய நூல்களுக்கு அடியேன் ஒல் லுமாறு குறிப்புரை எழுதிச் சேர்த்துள்ளேன். ஸ்ரீசிதம் பர சுவாமிகளின் வரலாறும் விளக்கமாகத் தனியே இந் நூலில் .இடம் பெற்றுள்ளது. சமாஜத்தாரின்

அனுமதி பெற்று ஞானியாரடிகள் குறிப்புரை இந்நூலில் இடம் பெற்றுள்ளது. அதற்கு சமாஜத்தாருக்கு நன்றி. இந்நூல் பிழையின்றி நன்முறையில் வெளிவர உறு துணையாயிருந்தவர் இராயப்பேட்டை முருகன் அச்சக உரிமையாளர் உயர்திரு. மு. நாராயணசாமி முதலியார் ஆவர். அவர் திருப்போரூர் முருகனிடத்து ஆராக் காதலுடையவராதலின் அதன்காரணமாகவே இப்பதிப் பையும் நன்முறையில் அச்சிட்டுத் தந்துள்ளார். அவருக்கு என் நன்றி உரித்தாகுக.

தோன்றாத் துணையாம் திருப்போரூர் முருகன் அடி யேனை இந்நூல் வெளி வரற்காம் திருத்தொண்டிலுய்த்த தற்கு அவன்பேரருளை எவ்வாறு வழுத்த வல்லேன்! அதற்குச் சாதனமாய்த் தோன்றுந்துணையாயிலங்கும் திருப்போரூர் தேவத்தான பரம்பரை தர்மகர்த்தர் அருள்திரு சிதம்பர சிவஞான சுவாமிகளின் பெருங் கருணையை எவ்வளவு போற்றினாலும் தகும். இப்பதிப்பு வெளிவர அவர்கள் காட்டிய ஊக்கம் கூறுந்தரமன்று. அவர்கள் திருப்போரூர் முருகன் செந்தமிழ்க் கழக வாயிலாய் முருகன் பெருமைகளைப் பேசச் செய்தல், சமய விளக்கங் கருதிப் பல வெளியீடுகளை வெளியிட்டு அவ்வப்போது சமய ஆக்கப்பணி செய்தல் முதலிய பல அரும்பணிகளை ஆற்றி வருகிறார்கள். அவர்களுக்கு என் வணக்கம் என்றும் உரியது.

இந் நன்னூலை அன்பர்கள் யாவரும் ஒரு பாராயண நூலாகக்கொள்ளவேண்டும். நாள்தோறும் படிப்பதுடன் காலை மாலை இறை வழிபாட்டில் இந்நூலிலுள்ள பாக்களைப் பாடிப்பாடி உருகினால் அவனருள் பெறுவ துறுதி. சுவாமிகளே தங்கள் அனுபூதி வாக்கால் 'நோய் முதலிய எல்லாத் துயரமும் போம்' என்று கூறியிருக்கும்.

பொழுது அதற்கு மேல் எளியேன் ஒன்றும் இந்நூலைப் படித்தலாலாம் பயன்பற்றி மிகைப்படுத்திக் கூறத் தேவையில்லை. அன்பர்கள் யாவரும் இந்நூலை வாங்கிப் படித்து வாழ்வில் இம்மையிலும் மறுமையிலும் இன்னிலையைப் பெற்றுய்வார்களாக. அதற்குத் திருப்போரூர் திருமுருகன் திருவருளும் உறுதுணையாயிலங்க அவன் திருவடித்தாமரைகளையே இறைஞ்சி வணங்குகின்றேன்.

7-A/1, கோவிந்தன் சாலை,
மேலைமாம்பலம்.
சென்னை-33.
30-10-'67.

இன்னணம்
இரா. சங்கரன்



திருப்போரூர்
ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள்

உ

திருமுருகன் துணை

# திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் வரலாறு

(வித்துவான் அம்பை. இரா. சங்கரனார்)

சீர்மிகுத்தோங்கும் செந்தமிழ்ப் பாண்டி நாட்டின் தலைநகராய தென்மதுரைப் பதியில் இற்றைக்கு ஏறக்குறைய நானூறாண்டுகளுக்கு முன்னர் சங்கப் புலவர்கள் கால்வழியில் தோன்றியவர் நம் சிதம்பர சுவாமிகள் ஆவர். அவர் கருவிலேயே திருவாய்க்கப்பெற்று அங்கயற்கண்ணம்மையின் அருளையும் நிறைவுறக்கொண்டு தமிழிலக்கிய இலக்கணப்புலமையில்சிறந்துவிளங்கினார். அதனால் அவரை அக்காலத்துச் சிதம்பரக் கவிராயர் என்றே ஆன்றோர் பலரும் போற்றுவாராயினர்.

ஒருசமயம் சிதம்பரக்கவிராயரைப் பற்றியும் அவர் புலமைத்திறம் பற்றியும் அவிநாசிக்கருகில் ஓரூரின்கண் வதிந்த இரட்டியார் ஒருவர் கேள்வியுற்றார். அந்த இரட்டியார் நெடுநாள் பிள்ளைப்பேறின்றி இறைவனை வேண்டினவர். இறுதியாகப் பெருமான் திருவருளால் அவ்விரட்டியார் குமாரதேவரைச் சந்திக்கும் பேறு பெற்றார். குமாரதேவர் என்பவர் திருமுதுகுன்றத்திலுள்ள மணிமுத்தாற்றின் கரையின்கணிருந்த ஓர் அரசமர நீழலில் தங்கிப் பல்லாண்டுகளாக நிட்டைகூடியிருந்த முனிபுங்கவராவர். அவருடைய ஆசிரியர் கொங்குநாட்டு அவிநாசித் தலத்தில் வதிந்தவரும் சிவப்பிரகாசர் என்ற முனிவரின் திருவருள் பெற்றவருமாய சாந்தலிங்க சுவாமிகள் ஆவர். ஆறு திங்களுக்கொருமுறை குமாரதேவர் திருமுது குன்றிலிருந்து அவிநாசிக்குச் சென்று தம் ஆசிரியரை வழிபட்டு

B

வாழ்த்துப் பெறுவதை நியதியாகக் கொண்டிருந்தார். அம்மரபுப்படியே ஒருமுறை குமாரதேவர் அவிநாசிக்குச் செல்லும்பொழுது இடையில் ஓரூரில் தங்க நேரிட்டது. அவ்வமயம் தான் ஓர் இரட்டியார் தமக்குப் பிள்ளையில்லாக் குறையைக் குமாரதேவரிடம் விண்ணப்பித்துத் துன்புற்றார். குமாரதேவரும் இறையருளை நினைந்து திருநீறு கொடுத்தார். குமாரதேவரின் திருநீற்றுச் சிறப்பால் அந்த இரட்டியாருக்குக் குழந்தைகள் இருவர் தோன்றினர். அவர்கள் பள்ளிக்குச் செல்லும் பருவமுற்றதும் அந்த இரட்டியார் தக்க ஆசிரியரைத் தேடலானார். அவ்வமயமே நம் சிதம்பரக்கவிராயரைப் பற்றிப் பலர் கூறி அவரே தக்க ஆசிரியர் எனவும் சொற்றனர். அதனால் அவ்விரட்டியார் சிதம்பரக் கவிராயரை வரவழைத்துத் தம் குழந்தைகளுக்குத் தக்க ஆசானாய் அமர்த்தினர். ஒருசமயம் குமாரதேவர் தம் ஆசிரியராம் சாந்தலிங்க சுவாமிகளைக் காண அவிநாசிக்குச் செல்லும்போது இடையில் அவ்விரட்டியார் வீட்டில் தங்க நேர்ந்தது. அப்போதுதான் சிதம்பரக்கவிராயருக்கும் குமாரதேவருக்கும் முதற் சந்திப்பு ஏற்பட்டது. குமாரதேவர் சிதம்பரக்கவிராயரைப் பற்றிய சிறப்புக்களைக்காணவும் வாய்ப்பு ஏற்பட்டது. சிதம்பரக் கவிராயரின் கற்பிக்கும் தன்மையைக்கண்ட குமாரதேவர் அவரை ஆட்கொள்ளத் திருவருள் பாலித்தார். அதனால் குமாரதேவர் சிதம்பரக்கவிராயரிடம் சில வினாக்களைக் கேட்கலுற்றார். மிகத் திறமையுள்ளவராயிருந்தும் குமாரதேவரின் வினாக்களுக்குச் செவ்வனிறையிறுக்கும் ஆற்றலற்றவராய்க் காணப்பட்ட சிதம்பரக் கவிராயர் உடனே அடியற்ற மரம்போல் குமாரதேவரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தம்மையாட்கொண்டருள வேண்டினர். அதற்குக் குமாரதேவர் சிறிது இடை

வெளிகொடுத்து 'அதற்குள்ளாவது அவ்வினுக்களுக்குப் பதிலிறுக்க' என்று கூறி அவிநாசித்தலத்துக் கேகினர். அங்குத் தம் மாசிரியரை வணங்கியபின் திரும்புங்கால் அவ்விரட்டியார் வீட்டில் தங்கினர். அவ்வமயமும் அவ் வினுக்களுக்குரிய விடையைக் குமாரதேவர்கேட்க, சிதம் பரக்கவிராயர் தம் இயலாமையைக் கூறியதோடமை யாது தம்மையாட்கொள்ள மறுபடியும் வேண்டினர். குமாரதேவர் அருணேக்கம் பூண்டு மூன்றுமுறை முடியிலி ருந்து அடிவரைக் கவிராயரை நோக்கினர். அப்பார்வை விசேடத்தால் சிதம்பரக்கவிராயருக்கு அஞ்ஞான இரு ளகல அவ்வினுக்களுக்கு விடை தெரியலாயிற்று. உடனே அன்பு மீதூரப் பெற்றவராய்க் குமாரதேவ ரோடு சிதம்பரக்கவிராயரும் புறப்பட ஆயத்தமானர். அதுகண்ட குமாரதேவர் மீண்டும் அவிநாசித் தலத்துக் கேகினர். சிதம்பரக் கவிராயரும் அவர் பின்னர் தொடர்ந்தே சென்றனர். மறுநாள் காலை அவிநாசித் திருத்தலத்துக்கு இருவரும் வந்து சேர்ந்தனர். அவ்வ மயம் சாந்தலிங்க சுவாமிகள் ஒடுக்கத்தில் நிட்டைகூடி யிருந்ததால் புறத்தே யிருவரும் தங்கி அங்கு வேண்டிய தொண்டுகளை யாற்றிக் கொண்டிருந்தனர். பின்னர் சாந்தலிங்க சுவாமிகள் புறம்போந்தபோது குமார தேவரும் சிதம்பரக்கவிராயரும் சுவாமிகளின் திருவடி களில் வீழ்ந்து வணங்கினர். அவ்வமயம் குமாரதேவர், சிதம்பரக்கவிராயரை ஆட்கொள்ள வேண்டினர். சிதம் பரக் கவிராயரைக் கூர்ந்து நோக்கிய சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்துள் போந்து தாமியற்றிய வைராக் கிய சதகம், வைராக்கிய தீபம், கொலை மறுத்தல், அவிரோதவுந்தியார் என்னும் நான்குநூல்களையும் காழிக் கண்ணுடைய வள்ளலார் இயற்றிய 'ஒழிவிலொடுக்கம்' என்னும் நூலையும் எடுத்துக் கொடு போந்து குமார

தேவர் கையிற் கொடுத்து 'இவைகளுக்குச் சிதம்பரக் கவிராயரைக்கொண்டு தக்கவுரை எழுதச்செய்க' எனக் கட்டளையிட்டருளினார்கள். குமாரதேவரும் அந்நூல்களை வாங்கிச் சிதம்பரக் கவிராயரைக்கொண்டு மிகச் சிறந்த உரை எழுதச் செய்தார். சாந்தலிங்க சுவாமிகளிடம் மற்றொருமுறை இவ்விருவரும் வந்தபோது அவ்வுரையினைப்படிக்கக்கேட்டு சுவாமிகள் மிகமகிழ்ச்சியுற்றார்கள். குமாரதேவரைப் பார்த்து "நீ எமக்கு நல்ல ஞானப் புதல்வனாய் வாய்த்தது போன்று இவன் உனக்கு நல்ல ஞானப் புதல்வனாகக் கடவன்" என்று சாந்தலிங்க சுவாமிகள் அருள்பாலித்தார்கள்.

பின்னர் குமாரதேவரும் சிதம்பரக்கவிராயரும் திருமுதுகுன்றம் சென்றனர். அங்கு வீராகம சித்தாந்த முறைப்படி குமாரதேவர் சிதம்பரக்கவிராயருக்கு உபதேசம் செய்தருள்பாலித்தார். அது முதல் சிதம்பரக் கவிராயர், சிதம்பர சுவாமிகளானதோடன்றி நிட்டை கூடி இறையருள் நாட்டத்தில் மிகவும் பேரவாக் கொண்டு இருந்தார். ஒரு சமயம் சிதம்பர சுவாமிகள் நிட்டை கூடியிருந்தபோது ஒரு மயிலின் காட்சி புலப்பட்டது. அதனைத் தம் ஆசிரியருக்குச் சிதம்பர சுவாமிகள் விண்ணப்பித்தார். குமாரதேவர் தம் சீடரை நோக்கி "எமக்குத் திருமுதுகுன்றிலுள்ள பெரியநாயகியம்மையின் திருவருணோக்கம் வாய்த்தது போன்று உனக்கு மதுரை மீனாட்சியம்மையின் அருள் நிறைந்துள்ளது. அதனால் மதுரை சென்று மீனாட்சியம்மையின் அருள் செலுத்தியவாறு நடக்கக் கடவாய்" எனக் கட்டளையிட, அவ்வாறே சிதம்பர சுவாமிகளும் மதுரை நோக்கிப் புறப்பட்டனர். அங்கு அங்கயற்கண்ணம்மையின் அருள் வேண்டிச் சிதம்பர சுவாமிகள் தவம் கிடந்தனர். மீனாட்சியம்மை சிதம்பர சுவாமிகளுக்குத்

காய்ச்சல், காந்பிடிப்பு முதலிய பல நோய்களை ஏற்படுத்திச் சோதனை செய்தனர். அபக்குவிகளாய பலர் போலன்றி நம் சுவாமிகள் அம்மையின்மேற் கொண்ட உறைப்பான அன்பு மேலீட்டால் இந் நோய்களைப் பொருட்படுத்தாது அம்மையின் திருவடி களிணையன்றி வேறு யாதொன்றையும் சிந்தைசெயாது பச்சையறுகு மாத்திரமே உட்கொண்டு தவமியற்றினர். மீனாட்சியம்மை கலிவெண்பா என்னும் அருமை நூலை யும் பாடி அம்மையின் அருள் வேண்டினர். அம்மை யின் திருவருளும் சுரந்தது. இம்மைப் பிணியும் மறு மைப் பிணியும் நீங்குமாறு மீனாட்சியம்மை அருள்பா லித்தார். அத்துடனமையாது "இப்பதிக்கு வடபால் முப்பது யோசனை தூரத்திலுள்ள திருப்போரூர் சென்று அங்கு ஆறுமுறை சிறந்து விளங்கி மீண்டும் மீண்டும் அழிந்து போன அருமைப் பதி ஒன்றுண்டு. அது குமரனுறை பதியாகும். அதனை ஏழாம் முறையாகச் சிறப்புறச் செய்து என்றும் நிலைபெற்று விளங்க, வேண்டிய தொண்டுகளை மேற்கொண்டொழுகுவாயாக" என்று மயில் வடிவமாகவே முற்றோன்றியவாறு மீனாட்சி யம்மையார் தோன்றி யருள்பாலித்தார். அது கேட்ட சிதம்பர சுவாமிகள் சற்றுங் காலந் தாழ்த்தாது திருப் போரூர்த் தலத்துக் கேகினர். வழியில் திருமுதுகுன்றத் திற்குச் சென்று தம் குருநாதராம் குமாரதேவரைக் கண்டு அவரருள்பெற்றுத் திருப்போரூருக்கு ஏகினர்.

திருப்போரூர் செல்லும் வழியில் கிளியனூரில் செங் குந்த மரபில் தோன்றிய ஒரு நரை முதாட்டியாரைச் சிதம்பர சுவாமிகள் சந்தித்தார். அவ்வம்மையார் சுவாமிகளின் பசியைத் தீர்க்கக் கூழ்கொடுத்தார். பக்குவ நிலையைக்கண்ட சுவாமிகள் ஞானம்மையார் எனும் அம்முதாட்டிக்கு அருள் பாலித்தார். பின்னர்

பொம்மைய பாளையம் என்னும் பதிக்குச் சென்றூர். அங்கு சிறந்த முனிபுங்கவராய் எழுந்தருளியிருந்த பாலையசுவாமிகளைக் கண்டு அளவளாவினர். இம்மெய் யறிவுச் செல்வர்களிருவரும் எட்டு நாள்களாக வேறென் றிலும் சிந்தை வையாதவராய் மெய்ஞ்ஞானம் பற்றி அளவளாவிக் கொண்டிருந்தனர். அடுத்து அங்கிருந்து பிரியா விடைபெற்றுச் சுவாமிகள் திருப்போரூர் சென் ஞர்கள்.

அக்காலத்து, திருப்போரூரில் பார்க்கும் இடம் எங்கும் பனங்காடாகவே காட்சியளித்தது. வள்ளைக் கொடிகள் நிறைந்துள ஓர் ஓடையொன்று அவ்வூரருகே சென்று கொண்டிருந்தது. அங்குப் பிரணவ உருவில் சிறந்த மலையொன்றும் காட்சியளித்தது. அம்மலையின் சாரலின்கண் இருந்த வேம்படி விநாயகர் கோயிலில் சிதம்பர சுவாமிகள் முதன் முதலில் தங்கினர். பின்னர் பனங்காட்டுக்குள் சென்று திருக்கோயில் எங்கு அமைந் திருக்கலாம் என நினைத்தவராய்ப் பெருமானருளை வேண்டி நின்றூர். அவ்வமயம் பல்வேறு கிளைகளு டன் செழித்து வளர்ந்த ஒரு பெண் பனை மரத்தினடி யில் முருகப்பெருமான் திருவுருவத்தைக்கண்டு சிதம்பர சுவாமிகள் மகிழ்ந்தார். அத்துடன் தம் குருநாதராம் குமாரதேவரும் அங்குப் போந்து தம் மாணவர்க்குத் திருக்கோயில் முன்பிருந்த தன்மையினையெல்லாம் நன்கு புலப்படுமாறு காட்டியருளி மறைந்தார்.

அதுகண்ட சுவாமிகள் முருகப்பெருமானுரே குரு நாதர் திருவடிவுடன் போந்தருள் செய்தனர் என்று தெரிந்து அப் பெருமானருட்டிறத்தை வியந்து அப் பெருமானுறை திருக்கோயிலை முன் போன்று சிறந்து விளங்கத் திருவுளம் பாலித்தார்; கோயில் கட்டுதற்கு வேண்டிய முயற்சிகளை மேற்கொண்டனர். மக்களுக்குக்

காய்ச்சல், வயிற்றுவலி, பெருவயிறு, குடல்வாதம், குட்டம் முதலிய நோய்களைத் தீர்த்தல், அவரவர் மனக் குறைகளைப் போக்கல் போன்ற பல அற்புதச் செயல் களைச் செய்து மக்களைத் திருக்கோயில் கட்டுதற்காம் திருத்தொண்டில் ஈடுபடுத்தினர். திருப்போரூரிலும் அதனைச் சார்ந்த பலவூர்களிலுமுள்ள மக்கள் சிதம்பர சுவாமிகளை வணங்கி நல்வாழ்வு பெற்றனர். காலவாக் கம் என்னும் ஊரில் உள்ள முடவன் ஒருவனைத் திரு நீற்று விசேடத்தால் நன்னிலையுள்ளவனாக்கினர். ஒரு கண்ணிழந்த குயவன் சுவாமிகள் திருவடிகளை வணங்கி அருள் பெற்றுக் கண் வாய்க்கப் பெற்றான். அதனால் சுவாமிகளிடம் அளவுகடந்த அன்பு மீதூரப் பெற்று சுவாமிகளுக்குச் சிலவூர்களையே அன்புக் காணிக்கை யாகக் கொடுத்தனரெனின் அம்மக்கள் சுவாமிகள்மீது கொண்டுள்ள அன்புக்கு வேறுசான்றும் வேண்டுமோ? முன்னரே சுவாமிகளின் திருக்கருணை நோக்கினைப்பெற்ற கிளியனூர் அம்மையார் தாம் அரிதின் முயன்று ஈட்டிச் சேமித்து வைத்திருந்த பொன் ஒன்றினைத் திருக் கோயில் திருப்பணிக்கு ஈடுபடுத்த சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிக் கொடுத்தார். சுவாமி களும் அம்மையின் தலையன்பால் கொடுக்கப்பெற்ற அப்பொன்னைக் கொண்டு மூலத்தானச் சிகர வேலையை முற்றுப்பெறச் செய்தார்கள். சென்னைப் பாளையத்தா செட்டியார் என்பவர் இரண்டு பைகள்நிறையப் பொன் கொண்டு வந்து கொடுத்தார். அதனைச் சுவாமிகள் தம் கையால் ஏற்றுக்கொள்ளாது சிலநாள்கள் சென்று திருப்பணிக்குச் செலவிட அங்குள்ளாருக்குக் கட்டளை யிட்டருளினர். இவ்வாறு பல அன்பர்கள் துணையைக் கொண்டு சுவாமிகள் திருமுருகன் திருக்கோயிலை நன் முறையில் புதுப்பித்துப் பெருமானுக்கு வேண்டிய

பூசனைகள் யாவற்றையும் வழுவாது முறைப்படி நடை பெறச் செய்தார். சுவாமிகளே யந்திரத்தாபனம் ஒன்று அமைத்து மக்கள் குறைகளைப் போக்க வழி வகுத் தார்கள். ஒரு சமயம் சுவாமிகளிடம் நிறையப் பண மிருக்குமென்று நினைத்து அதைக்கவர சில கள்வர்கள் முற்பட்டனர். சிதம்பரஅடிகள் அருகில் அண்மியதுமே அக்கள்வர்களின் கண்கள் குருடாயின. அது கண்டு அக்கள்வர்கள் மிக அஞ்சியவர்களாய் சுவாமிகளது திருவடிப்போதுகளில் வீழ்ந்து வணங்கித் தங்கள் குற் றத்தைப் பொறுத்தருளுமாறு மன்றாடினர். சுவாமிகளும் அச்சிறியோர்கள் செய்த பெரும் பிழையை மன்னித் தருளினார்கள். பின்னர்ச் சுவாமிகள் கருணைமேலீட்டால் அக்கள்வர்கள் கண்களும் தெரிந்தன. அக்கள்வர்கள் பின்னர்ச் சிறந்த சீலர்களானமையோடு மாத்திரமன்றித் தாங்கள் மறவழியி லீட்டிய பொருள்கள் யாவற்றையும் திருக்கோயில் கட்டும் அறப்பணிக்கு ஈடுபடுத்தினர். இவ்வாறு வன்னெஞ்சக்கள்வரையும் திருத்தியாட் கொண்ட பெருமை சிதம்பர சுவாமிகளைச் சாரும்.

பின்னர் தாம் தங்குதற்கென ஊரின் புறத்தேயுள்ள கண்ணுவர் பேட்டையில் ஒரு கோயிலும் குளமும் எடுத்து ஆங்கிருந்தே முருகப்பெருமான் பூசனை முட் டின்று நடைபெற எல்லாவற்றையும் செய்து வந்தார். அவ்வாறு வழிபாடு நன்கு நடைபெறச் செய்ததோடு மாத்திரமன்றி வழிபாட்டிற்கு வரும் மக்கள் முருகனின் பொருள் சேர் புகழைப் பாடிப் பரவி வணங்குதற்காக அவன் சந்நிதியில் வழிபடுவதற் கேற்றவண்ணம் "திருப்போரூர்ச் சந்நிதிமுறை" என்னும் ஓர் அரிய தோத் திர நூலையும் இயற்றியருளினர். இத் திருப்போரூர்ச் சந்நிதிமுறையே தமிழ் கற்றோருக்கு ஓர் அருங் கருவூல மாய்த் திகழ்வது. இதன்கண் காணப்பெறும் உருக்கம்

கூறும் தரமன்று. இந் நூலிலிருந்து காணப்பெறும் பல அகச்சான்றுகளால் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமி களின் அருமை பெருமைகளை அங்கைநெல்லியென உணரலாம்.

சிதம்பர சுவாமிகள் தம் குருநாதராம் குமாரதேவர் மீது குமாரதேவர் பதிகம், குமாரதேவர் நெஞ்சுவிடு தூது ஆகிய இருநூல்களையும் இயற்றியருளினர்கள். மேலும் திருக்கழுக்குன்றத்து அமர் பெருமானும் வேத கிரீசர் மீது வேதகிரீச்சுரர் பதிகம் ஒன்று பாடியருளி னர்கள். அவ்வூரிலேயே கோயில்கொண் டெழுந்தருளி யுள்ள திரிபுர சுந்தரியம்மை மீதும் ஒரு பதிகம் பாடிய தாக ஆன்றோர் சிலர் கூறுகின்றனர். ஆனல் அப்பதி கம் இதுகாறும் கிடைக்க வாய்ப்பில்லை. மேலும் பஞ் சதிகார விளக்கம் என்னும் ஓர் அருமைச் சாத்திர நூலையும் சுவாமிகள் அருளி மக்களுக்கு ஞானபோனக அமுதூட்டினர்கள். கிளியனூரிலுள்ள ஞானம்மையார் என்னும் நரைமூதாட்டியாரின் வேண்டுகோளுக்கியைந்து "புணர்ப்ப தொக்க எந்தை என்னை" என்னும் திருவாச கப் பாட்டிற்கும் விரிவுரை யருளியுள்ளார்கள்.

ஒரு சமயம் பூவிருந்தவல்லியைச் சார்ந்த கோவூரில் வாழ்ந்த திரிபுராந்தக முதலியாரின் புதல்வரும் பம்மல் வில்வராய முதலியாரின் பெண் வயிற்றுப் பேரனுமாகிய சிவசங்கரனும் நோயுற்ற பிள்ளையை அவர் பெற்றோர் சிதம்பரசுவாமிகள் முன் கொண்டு வந்து நிறுத்தினர். அப்பிள்ளையைக் கண்ட சுவாமிகள் அதனை ஆட்கொள்ளக்கருதித் திருவருள் நோக்கம் பாலித்தார். சுவாமிகள் கடைக்கண்ணேக்கம் பட்டதுமே அப்பிள்ளையின் நோய் நீங்கியது. சிதம்பரசுவாமிகள் அப்பிள்ளையினைத் தம் மடத்திலேயே யிருக்கக் கட்டளை யிட்டார். அப்பெற்றோர்களும் சுவாமிகளின் ஆணைக்

குட்பட்டுத் தம் பிள்ளையை மடத்தேயே விடுத்துச் சென்றனர். சிவசங்கரரைக் கோயில் திருப்பணிகள் யாவும் குறைவற நடத்திவருமாறு பணித்துச் சிதம்பர சுவாமிகள் நிட்டைகூடிக் கண்மூடி மௌனியாகி இறைவனை வழிபடும் நிலையிலேயே பெரிதும் ஈடுபட்டிருந்தார்கள்.

திருவண்ணாமலையில் சோணாசலதேவர் என்னும் பெயரிய அருட்பெரியார் ஒருவர் இருந்தார். அவர் சிதம்பர சுவாமிகளைக் கண்டு வணங்க அவாவுற்றார். அவர் தினந்தோறும் திருவண்ணாமலையை வலம் வருவதைத் தம் குறிக்கோளாகக் கொண்டு முப்பது வயதுமுதல் தொண்ணூறு வயது முடிய இச்செயலை முட்டின்றிச் செய்து வந்தார். அண்ணாமலை தொழுது வினையை வழுவாது அறுத்த அம்முனிபுங்கவர்க்குத் திருவருள் சிதம்பர சுவாமிகளிடம் செல்லுமாறு உணர்த்தியது. அது தெரிந்த சோணாசலதேவர் திருப்போரூரை யடைந்தார்; சிதம்பர சுவாமிகளைக் கண்டார்; திருவடிகளில் விழுந்தார்; வணங்கினார்.

"எடுத்தசன னங்கடோறும் ஈன்றெடுத்த தாய்மார்
கொடுத்தமுலைப் பாலனைத்தும் கூட்டில் — அடுத்துவளர்
பன்னு கனைதயிலும் பாலாழி யுஞ்சிறிதாம்
மன்னு சிதம்பரதே வா."

நவகுணமு முக்குறும்பு நவைகள்மற் றனைத்துந் தீர்த்து
பவகுணஞ் சற்றுந் தாக்காப் பரமயோ கிகளாய் நின்ற
சிவகுணச் செல்வர் போற்றும் சிதம்பர தேவா என்றன்
அவகுணம் போக்கி ஆள்வ தையநின் கடன தாமால்

என்று பலவாறு பாடிப் பரவி வாழ்த்தினார். அதுகண்ட சுவாமிகள் அவருக்கு அருள் பாலித்தார்கள்.

ஒரு நாள் சிவசங்கர தேவரிடம் திருமுருகனுக்குச் சிறப்பு வழிபாடு ஆற்றக்கட்டளையிட்டுச் சிதம்பரசுவாமி கள், வழிபாட்டுக்குரிய பொருள்களுடன் தம் மடத்தி லுள்ள நிலவறைக்குட் புக்கனர். திருக்கோயிலில் பெரு மானுக்குக் கர்ப்பூர தீபாராதனை நிகழும்போது சிதம்பர சுவாமிகளும் அங்கு தோன்றி முருகப்பெருமானை வழி பட்டு அச்சோதியிற் கலந்து செல்வதைக் கண்ணுற்ற சிவசங்கர தேவரும் பூசகர்களும் அவ்வற்புத நிகழ்ச்சி யைக் கண்டு மகிழ்ந்தனர்; ஆடிப்பாடி யார்த்தனர்.

சிவசங்கரதேவர் உடனே திருமடத்துக்கு வந்தார். அங்கு சோணாசல தேவர் சிதம்பர சுவாமிகள் நிலவறை யுட்புக்கு சமாதி கூடின நிலையைத் திருவாய் மலர்ந் தருளினர். அதுகேட்ட சிவசங்கரதேவர்,

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

இக்கலி யுகத்தி லெழுந்தவென் குருவே
யின்பமே அன்பினுள் நிறைந்த
முக்கனி ரசமே முதிர்சுவை யமுதே
மூதறி வேமறைப் பொருளே
சர்க்கரை யொடுகற் கண்டென ருசிக்கும்
தயாளுவே தமியனேன் தனக்குத்
துக்கசா கரத்தைத் தொலைத்தருள் புரிந்தாய்
தூய!நீ எங்கொளித் தனையே.

என்று பலவாறு மனமுருகித் துதித்து அரற்றினர். அது கண்ட சோணாசல தேவர் சிவசங்கர தேவரின் ஆராமை யை ஆற்றி அவரைச் சிதம்பரசுவாமிகளின் பீடத்திருத்தி சுவாமிகளின் திருவுளக் குறிப்புப்படி சிதம்பரசுவாமிகள் நிட்டைகூடி சமாதியுற்ற வைகாசி பௌர்ணமி, அதற்கு

முன்னாள் பின்னாள்களிலும் சிறப்பு வழிபாடுகள் ஆற்றவும் சுவாமிகளின் தொண்டுகளை இடையீடின்றி நடாத்தி வரவும் சிதம்பர சுவாமிகள் கட்டளையிட்ட முறையை எடுத்துக் கூறியபின் திருவண்ணாமலை சென்று அவண் நன்னிலையுற்றார்.

சிதம்பர சுவாமிகள் முத்தியடைந்தது இற்றைக்கு 308 யாண்டுகளுக்கு முன்னராகும். அதாவது கி. பி. 1659 ஆகும்.

ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் கந்தப் பெருமானார் கருவறை, மகாமண்டபம், மூர்த்திகளின் திருவுருவங்கள், இயந்திரத்தாபனம் முதலியவற்றைத் திருக்கோயிலில் புதுப்பித்தார்கள்.

கண்ணுவர் பேட்டையில் கலைமகள் கூடம், ஒடுக்க அறை, நிலவறை, வேலாயுத தீர்த்தம், சுந்தர விநாயகர், வேலாயுதர் கோவில் முதலியவற்றை ஏற்படுத்தினார்கள். இப்பெருமானாரே தம் தவ வலிமையால் இத்திருக்கோவிலை மிகச் சிறப்புறச் செய்தருளினார்கள் என்று சுருங்கக் கூறலாம்.

---

# ஆதீன பரம்பரை வரலாறு

சிதம்பர சுவாமிகளின் பின்னர் இரண்டாவது பட்டத்துக்கு எழுந்தருளியவர் சிதம்பர சிவசங்கர சுவாமிகள் ஆவர். இவர்கள் தெய்வயானையம்மையார் சந்நிதி, அதன் முன்மண்டபம்முதலியவற்றை ஒரு நவாப் பின் துணைகொண்டு கட்டியருளினர்கள்.

அவர்களுக்குப் பின்னர் சிதம்பர முத்துக்குமார சுவாமிக்ள் மூன்ருவது பட்டத்துக்கு எழுந்தருளியிருந்தார்கள். அவர்கள், தம் காலத்து வள்ளியம்மையார் சந்நிதி, உற்சவ மூர்த்திகள் சந்நிதி முதலியற்றை ஏற்படுத்தினர்கள். சர்வ வாத்திய மண்டபம், கோபுரம் முதலியவற்றிற்கு அடிப்படை இட்டார்கள.

நான்காம் பட்டத்திற்குச் சிதம்பர சிவசங்கரசுவாமிகள் எழுந்தருளி அவர்களே சர்வவாத்திய மண்டபத்தைச் சிறப்புறக் கட்டி மேம்பாடு செய்தார்கள். மேலும் இரதம், பொன் மயில்வாகனம், பதினறுகால் மண்டபம் ஆதியனவும் ஏற்படுத்தினர்கள்.

ஐந்தாம் பட்டமாக சிதம்பர முத்துக்குமார சுவாமிகள் பீடமேறி வாகன மண்டபம், வேம்படி விநாயகர் திருக்கோயில் முதலியவற்றைச் சிறப்புறப் புதுப்பித்தார்கள்.

அடுத்து சிதம்பரத்தம்பிரான்சுவாமிகள் ஆரும்பட்டமாக ஆதீனப் பீடத்திலமர்ந்து ஆட்சி செலுத்தினர்கள். இவர்கள் காலத்துக் கடும் பஞ்சம் ஆதலின் எவ்விதத் திருப்பணியும் நடைபெற இயலாது போயிற்று

பின்னர் சிதம்பர சிவசங்கரத்தம்பிரான் சுவாமிகள் ஏழாம் பட்டத்திற்கெழுந்தருளி சர்வவாத்திய மண்டபத்தை மிகவும் வேலைப்பாடுகளுடன் திருப்பணி செய்தார்கள்.

எட்டாம் பட்டமாக சிதம்பர முருகேசத்தம்பிரான் சுவாமிகள் எழுந்தருளி ஆலயத் திருமதில், திருமடைப்பள்ளி, தளவரிசையாதியவற்றைக் கட்டி முடித்தார்கள்.

பின்னர் சிதம்பர முத்துக்குமார சுவாமிகள் ஒன்பதாம் பட்டமாகப் பீடமேறி திருக்குள நீராழி மண்டபம், பிரணவ மலையில் கருவறை, தூபி, மகா மண்டபம், அம்பிகை சந்நிதி முதலியன ஏற்படுத்தினர்கள். கொடிமரத்தைச் சுற்றி வட்டப் பந்தரை ஏற்படுத்தினர்கள். குடமுழுக்கு; மண்டலாபிடேகம் ஆதியவற்றையும் சிறப்புற ஆற்றினர்கள்.

பிறகு சிதம்பர சிவசங்கர சுவாமிகள் பத்தாம் பீடாதிபதியாக எழுந்தருளி கொடிமரத்துக்குச் செப்புத் தகடு பொதியச் செய்தார்கள். மடாலயத்தில் சிதம்பர சுவாமிகள் திருவுருவப் பிரதிட்டை செய்து பத்து நாள் திருவிழா நடத்த ஏற்பாடு செய்தார்கள். இவர்கள் 1903ஆம் ஆண்டு பரசிவத்தோடிரண்டறக் கலந்தருளினர்கள்.

அடுத்து சிதம்பர சிவப்பிரகாச சுவாமிகள் இவ்வாதீன பீடத்தை அலங்கரித்தார்கள். இவர்கள் காலத்துக் கண்ணுவர் பேட்டைப் பெரிய மடம் செப்பனிடப்பட்டது. 1927ல் இவர்கள் சிவலிங்கைக்கியமானர்கள்.

பின்னர் சிதம்பர சண்முக சுவாமிகள் பன்னிரண்டாம் பட்டமாக எழுந்தருளினர்கள். இவர் காலத்து,

திருக்கோயிலுக்கும் திருமடத்துக்கும் அன்பர்கள் உதவி கொண்டு செய்திருக்கும் திருப்பணிகள் கூறுந்தரத்தன வல்ல. நாற்கால் மண்டபம், கொடிமர வட்டக்கால் மண்டபம், யாகசாலை மண்டபம்; சிதம்பர சுவாமிகள் சந்நிதி மண்டபம், திருக்குளத்திருப்பணி முதலியவற்றை இவர்கள் செய்து முடித்தார்கள். 1958ல் இவர்கள் இறைவனோடிரண்டறக் கலந்தார்கள்.

பின்னர் சிதம்பர சிவப்பிரகாசசுவாமிகள் பட்ட மேற்றூர்கள். இவர்கள் காலத்து வெள்ளி அன்னவாகனம், முருகன் செந்தமிழ்க் கழகம் முதலியன ஏற்பட ஏதுவாயின. 1966ல் இவர்கள் பொம்மையபாளையம் பெரிய மடம் மகா சந்நிதான பீடத்தை அலங்கரிக்க வேண்டியிருந்ததாதலின், 11—5—66 அன்று தற்போதைய சிதம்பர சிவஞான சுவாமிகள் பதினான்காம் பட்டமாகப் பீடமேற்று ஞானச்செங்கோல் ஓச்சி வருகிறூர்கள். இவர்கள் சமய விளக்கப் பணிகளைத் தலையாயதாகக்கொண்டு தக்கார் மூலம் சமயப் பிரசாரம் செய்தும், வெளியீடுகளை வெளியிட்டும் அரும்பணி ஆற்றி வருகின்றூர்கள். கொடிமரம் புதுப்பித்தல், குடமுழுக்கு நடத்துதலுக்கு வேண்டிய ஏற்பாடுகளை மேற்கொண்டு வருகிறூர்கள். இவ்வுயரிய ஞான பரம்பரை நீடு சிறந்து ஓங்கி இவ்வுலகத்துக்கே மேலாம் மெய்ஞ்ஞானக் கொடையை வாரி வழங்க திருப்போரூர் முருகன் திருவருள் பாலிக்குமாறு அவனருளையே வாழ்த்தி வணங்குகின்றோம்.

வாழ்க சிதம்பர சுவாமிகள் திருமரபு.

---

உ

வேலுமயிலுந் துணை

# காப்பு

## நேரிசை வெண்பா

சமரபுரி மாநிம்பத் தண்ணிழற்பா லும்பல்
அமரர் தொழஇருந்த தன்றித் - திமிரமலம்
போக்கியெம துள்ளின்பப் பூரணமாய் எவ்விடத்துந்
தேக்கறிவு மாயிருந்த தே. க

உலகமெலாம் ஈன்றவொருத்திதனப் பாலுண்
டிலகு கவிதைமழை ஈசன் - நிலவு
புயமலைப்பாற் பெய்தசுகப் போரியில்வாழ் வானம்
புயமலர்த்தாள் என்முடிக்குப் போது. உ

---

ஆண்பாற் பிள்ளைக்கவியின்

## பருவம் பத்துக்கும் விவரம்

| | |
|---|---|
| காப்பு | இரண்டாந்திங்கள் |
| செங்கீரை | ஐந்தாம் திங்கள் |
| தால் | ஏழாந்திங்கள் |
| சப்பாணி | ஒன்பதாந்திங்கள் |
| முத்தம் | பத்தாந்திங்கள் |
| அம்புலி | பதினோராந்திங்கள் |
| வருகை | பன்னிரண்டாந்திங்கள் |
| சிறுபறை | இரண்டாம் ஆண்டு |
| சிற்றில் | மூன்றாம் ஆண்டு |
| சிறுதேர் | நான்காம் ஆண்டு |

---

உ

வேலுமயிலுந் துணை

# திருப்போரூர்ச்

# சந்நிதி முறை

# பிள்ளைத் தமிழ்

## வேம்படி விநாயகர்

அண்டகோ டிகளுடல் தந்தவுட லியாவையும்
அரியமறை முதலகலையும்
அக்கரமும் மெய்ப்பதமும் ஐங்கலையும் மந்திரமு
மானபத கதியும்வாக்கும்
மண்டியுண் டாகவரு குண்டலியொ டைஞ்சத்தி
மாமுகமெ னப்படைத்த
வள்ளிநா யகன்மீது பிள்ளையந் தமிழ்சொலஎன்
மதியில்நின் றருள்புரியுமால்
பண்டைமா மலதிமிரம் விண்டுபோ கக்கிரண
பானுகோ டிகளென்னவே
பழஅடிய ரககமலம் அகலாது நின்றொளி
பரப்பியா னந்தமுதவி
விண்டுவே முதலான அண்டர்மா முனிவர்நரர்
விக்கினம கற்றியாளும்
மேன்மைதரு போரூரில் நிம்பநீ ழற்குலவு
வேழமுகன் இருசரணமே. 1

# 1. காப்புப் பருவம்

## திருமால்

பூமேவு பொய்கைப் பொறிச்சிறகர் வண்டினம்
பொங்கரின் விருந்தயர்தரும்
போரூரின் முருகனைச் சீர்மேவு குமரனைப்
புனிதஞா னக்குரவனைக்
காமேவு கடவுட் பசுந்துணர் விரிந்துநறை
கடிமணத் தொடுபிலிற்றுங்
கண்ணகல் நிழலரசு சசிகணவ னுக்குதவு
கந்தவே ளைப்புரக்க
தூமேவு ஞானசத் திக்கடலின் மொண்டுசிற்
சொலிதசத் துவப்பொருப்பில்
தோமற இவர்ந்துலக மெங்கும் பரந்துயிர்த்
தொகைவகைப் பயிர்கள்தழையத்
தேமேவு மதுரம் பழுத்தொழுகு மென்மொழித்
திருமின் கலந்துமிளிரச்
செய்யபே ரருள்மாரி பொய்யாது பொழிகின்ற
செங்கட் கருங்கொண்டலே. 1

## சதாசிவம்

காரென வாருயிர் மீதரு ளேபொழி
கண்ணனை விண்ணவனைக்
கந்தனை யெந்தையை வந்தனை யன்பர்
கடும்பகை கொன்றவனைச்
சீர்சம ராபுரி யாளனை மாளுறு
தேவர்ம ளனையோர்
சின்மய ரூபனை நன்மையெ லாமுறு
சேயினை யருள்புரிக

ஓர்வரி தாமுயி ரியாவையும் நேர்வினை
ஒத்தும லப்பகைபோய்,
ஒண்சுக மேவிட ஐந்தொழில் தந்திடும்
உத்தம சிற்பரமாய்ச்
சேருரு வாயரு வாயிரு வகையுஞ்
செறிபொரு ளாய்நிறைவாய்ச்
செம்முகம் ஐந்தொடு செம்மையில் நின்றருள்
செய்தச தாசிவமே. 2

பராசத்தி

விடயவா வாரகஞ் சொருபவா வாரக
மெனப்பகர் விதங்களாகி
விரிமலக் கங்குலுயிர் விடயஞா னத்திநெடு
மிகுசொருப ஞானத்தையுந்
தடையதா கச்செயத் தனுவாதி நாலையுந்
தருமாயை யறிவினாலுந்
தண்ணருட் பேரறிவி னாலுமத் தடைவிடுந்
தகுபரையை யஞ்சலிப்பாம்
அடலினொ டெழுமவுண ருடல்வேறு கூறுபட
அல்கைவே தாளபூதம்
ஆடப்பெ ருங்கூகை கூவப்ப ருந்துநிழல்
நீடச்சி வந்தவடிவேல்
நொடியிலே வியகுகனை நெடியமால் மருகனை
நிகரில்போ ரூர்முருகனை
நுணியகூ ரறிவுகொடு கருதுவோ ரமுதமென
நுவலுமோ ரருள்புரியவே. 3

விநாயகர்

பகவதி கரவணை மிசைதுயில் பயிலும்
இகலறு குமரனை யினிதருள் புரிக
அகரமும் உகரமும் மகரமு மாகித்
திகழுறு பிரணவ மெழுசிறு களிறே. 4

## திருநீறு

சோதி மகரக் குழைசெறிசுந்
தரத்தோ ளீரா றுடையானைச்
சுருதி யிரைக்குந் தண்டையந்தாள்
துணையென் முடியிற் பொறித்தானை
மாது வளருஞ் சமரபுரி
வாழ்வை வானோர் சிகாமணியை
வடிவே லரசை மயிலரசை
வந்து புறங்காத் தளித்திடுமால்
ஆதி பகவன் ஞானவடி
வழலிற் பூத்து நித்தியமாய்
அணிந்தோர் தமக்கு வசிகரமாய்
அருந்தி னோர்கட் காரமுதாய்
நீதி யறியும் பசுமலத்தை
நீக்கு மொருநற் குறிகாட்டி
நிகழ்பே ரின்பக் கடலூட்டி
நின்ற புகழ்வெண் திருநீறே. 5

## உருத்திராக்கம்

அரிய மனமும் அறிவரிதாய்
அருவாய் நிறைவா யிருந்துமுனர்
அமரர் திரிபு ரஞ்செய்துறை
அறையக் கேட்டு முக்கண்வழிக்
கரிய களச்செம் புயல்கருணை
பொழியப் பெருகுங் கடற்பிறந்து
கருதும் அடியார் பவக்கடலைக்
கடத்தும் மணியைத் துதித்திடுவாம்
பெரிய தவத்துக் குறுமுனியெம்
பெருமான் செவிவாய் மடுத்தருந்தப்
பிறங்கு ஞான மொழிநறவு
பெய்யுங் குமுத வாயானைத்

தெரியல் நறுமா முகைகுறமான்
திளைக்கும் முலைக்கோ டுழவலருந்
திருமார் பகனைச் சமரபுரிச்
சேயைப் புறங்காத் தளித்திடவே. 6

பஞ்சாக்கரம்

கருதரிய பலவுயிர்கள் பந்தனைக் கார்க்கடற்
கரையிவர வருகலனை யன்பருட் காட்சியை
அருமறையும் அறிவரிய அஞ்சுகப் பேற்றினை
அரியசிவ ஸூரியபெயர் ஐந்தினைப் போற்றுதுங்
குரவுகமழ் குறவனிதை கொண்கனைக் கார்த்திகை
குடமுலையின் அமுதகடல் உண்டகத் தேக்கனைத்
தருணகும ரனையினிய தண்டலைச் சீர்ப்பொலி
சமரபுரி தனில்நிலவு கந்தனைக் காக்கவே. 7

திருமகள்

பொற்குவடு பத்துநூ றிலகுமுடி தொறும்இரவி
பூணெனக் கொண்டுமதியம்
பொழிநிலவு வெள்ளத்தின் மிசைமிதந் தழகுசெறி
புண்டரிகம் மண்டு புயலை
அற்புதத் தொடுகொண்டு மிளிரஅப் புயல்நடு
அரும்புநால் வகைமலரொடும்
அஞ்சோதி மினலொன் றிருந்தென இருந்தொளிர்
அணங்கினை நினைந்துதொழுவாம்
எற்செறி திருப்பரங் குன்றுஆவி னன்குடி
இரும்பொழில் திருவேரகம்
ஈறில்சீ ரலைவாய் விளங்குபழ முதிர்சோலை
என்னுமறை புகழ்பதிதொறுங்
கற்குவடு தொறுமினிய நற்சமர புரியும்உறை
கடவுளைக் கடவுளரெலாங்
கைம்மலர் குவிக்கஇரு கால்மலர் படைத்தவொரு
கந்தனை யளிக்கவென்றே. 8

சரஸ்வதி

நெய்தலங் காடுமிரு காவிபொரு வள்ளையும்
நிகழ்குமிழும் முகைமுல்லையும்
நிறைநறைக் குமுதமுந் தொடியுடைத் தோன்றியொடு
நேர்கன்னி காரமுகையும்
எய்தரிய நூபுரக் கமலமுஞ் செறிகடவுள்
எகினம்வெள் ளைக்கமலமீ
தேர்பெற்ற மறைமுதல கலைசொற் றிருந்தெனை
இருந்தவளை யஞ்சலிப்பாங்
கைதையங் கானமும் புன்னையங் கானமுங்
கானல்நெய் தற்கானமுங்
கடிமணத் தொடுநறவும் மகரமுந் தந்திலகு
கல்யாண மாமறுகென
மைதவழ் பொழிற்புளினம் மலிகயற் புலவையும்
வளைஅலவ னுறுபசியையும்
வாரா தகற்றியொளிர் நெய்தலஞ் சமரபுரி
வருகுகனை யருள்புரியவே. 9

பலதேவர்

எண்திசை யோர்வசு எண்மர்கள் வயிரவர்
எண்மர் மருத்துவரும்
ஈரிரு மூவரும் ஓரொரு பதின்மரும்
ஈரறு சூரியரும்
அண்டர் வியாழன் அடும்புய வீரர்
அலர்ந்த சரோருகமேல்
அந்தண னேரெழு மங்கையர் சோமனும்
வந்தரு ளேபுரிவார்
தண்டையு நீடு சதங்கையும் நீளொளி
தங்கிய கிண்கிணியுந்
தாளிணை மாமலர் மீதினி லோசை
தழைந்திட வந்துமையாம்

ஒண்தொடி கொஞ்ச இருந்து குறங்கில்
உவந்தாள் கொங்கையமு
துண் டருள் கந்தனை யஞ்சம ராபுரி
ஒண்கும ரேசனையே. 10

## 2. செங்கீரைப் பருவம்

மும்மையுல கெங்கும் பரந்தொளி பரப்பிடும்
முதற்பரை யெடுத்தணைத்து
முதருட் புனிதநீர் நிறைய ஆட் டிப்பெருமை
மொய்த்தநித் திய ஆடையால்
மெய்ம்முழுதும் ஒத்தியிரு வேறற்ற அத்துவித
வெண்ணீ றணிந்துமிளிரும்
வீறுபூ ரணநிலப் பொட்டுமிட் டுப்பெரிய
மெய்ஞ்ஞான தீபதட்டால்
அம்மருவும் ஆலத்தி சுற்றிமற் றிச்சையுட
னுஞா னங்கிரியையென்
றருள்செவிலி யாயரங் கருகிலுற ஆரு
ற கன் றசிவ வாரியிலெழுஞ்
செம்மையா ரமுதம்பு கட்டவள ருங்குழவி
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு குமரசர வணமுருக
செங்கீரை யாடியருளே. 1

அஞ்சக் கரப்பரத் தொட்டிலிற் சதுர்வேத
மானவட மொருநாலையும்
ஆதியுடன் இச்சைஞா னங்கிரியை நாமமுற்
றருள்வளர்ந் தொளிர்சத்திகள்

தஞ்சக் கரங்கொடு பிடித்தங் கசைத்திடத்
தகுபரையும் ஆதிசிவனுந்
தாமுள மகிழ்ந்துறச் சோமனென நிலவுபொழி
தவளயா னைக்கடவுளும்
விஞ்சக் கரம்புனையு முதல்வர்பதி னொருவரும்
விபுதர்களும் அரிபிரமரும்
வேணிமுனி வரரும்அருள் ஞானமுனி வரராதி
வியனுலக ரும்பரவவே
செஞ்சக் கரப்பரிதி யெனநிலவு போரூர
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு குமரசர வணமுருக
செங்கீரை யாடியருளே. 2

குஞ்சிமுடி யுற்றசெஞ் சுடிகையா டச்செவிகொள்
கோலக்கு தம்பையாடக்
குமுதமென அமுதொழுகும் இதழ்களா டக்கரங்
கொண்டபொற் றொடிகளாடக்
கஞ்சமல ரைப்பொருவு நயனமா டக்கடி
தடத்தரை வடங்களாடக்
கருதரிய முத்தியின் புதவுசீ றடிமருவு
கனகநற் றண்டையாட
அஞ்சுவடி வத்தசுரர் திண்டாட அரிபிரம
ராதிசுரர் கொண்டாடநீள்
அகிலசர அசரங்கள் நின்றாட எண்டிசையொ
டண்டபகி ரண்டமாடச்
செஞ்சரவ ணப்பொய்கை மஞ்சமிசை நிலவும்இறை
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு குமரசர வணமுருக
செங்கீரை யாடியருளே. 3

ஐந்தொழிலு மெனதிவைக ளாகுஞ் சிருட்டிமுத
லானமுத் தொழில்சடத்தும்
அறிவிடத் தோரிரண் டும்வினைக் கீடாய்
அவற்றையுயி ரறியாமையால்
முந்திவரு தன்னையும் பிறரையுங் கருதிநனி
முதிர்விழைவு வெகுளிமருவி
முன்னுசுக துன்டங்கள் மன்னியிரு வினைமேவி
மூடப்பி றப்பிலாழும்
பந்தமுறு முயிர்சுதந் திரமிலி சடம்பாச
மானகரு விகள்முழுதுமே
பகருமற் றவைநடத் திடுமொருவ னினிவை
பகுத்துன் சுதந்திரமறச்
சிந்தனைசெய் பந்தமறு மென்றெனக் கருள்குரவ
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு குமரசர வணமுருக
செங்கீரை யாடியருளே. 4

வேறு

காம விடத்தால் மாமயல் கொண்டே நொந்தேனைக்
காருணி யத்தால் வாவென வந்தாள் தந்தோனே
தீமை யிழைத்தேழ் வாரிதி சென்றே நின்றேனைச்
சீரருள் பெற்று ரார்கரை தந்தா ளெங்கோனே
மாமல முற்றே தோமுறு நெஞ்சேன் உய்ந்தார
வாய்மொழி நறறேன் நீமிசை யிந்தா என்றியுஞ்
சேம நிதிப்போ ரூரிறை செங்கோ செங்கீரை
தேவர் தமக்கோர் மாமணி செங்கோ செங்கீரை. 5

வேறு

களவறு ஞானிக ளுளமலர் மீதி லெழுந்தா றுந்தேனே
கடையனை மேவிய மலமற வோர்குரு என்றே வந்தோனே
அளவறு சூரிய ரெனமயி லேறி யுவந்தா ருங்கோவே
அகமுக மாயொரு சுழிமுனை சேர்பவ ரங்கே யுந்தேவே

இளநில வாள்நகை யுறுகுற மாதை யிலையர்தா ளூர்தோளா
எழிலடி யார்முத லினவரு மேநசை கொண்டா ருந்தாளா
தெளிவுறவேயென தகநிறைபேரொளிசெங்கோசெங்கீரை
திகழ்சம ராபுரி முருக சடானன செங்கோ செங்கீரை. 6

மகபதி சக்கிரி மலரயன் நத்திய
வண்சே ருங்காவே
மலமறும் முத்தர்க ளெனும்அளி சுற்றிய
தண்சூ ழும்பூவே
இகலறு மெய்த்தவ முழுதையும் உற்றவர்
எண்கூ ரும்பேறே
எழிலருள் பெற்றுயிர் மயில்கள் களிக்க
எழுந்தா ருங்காரே
ககனசு ரர்க்கொரு துணையென நெட்டயில்
கொண்டே நின்றோனே
கடவுள் மடப்பிடி தனஇணை தைத்தொளிர்
திண்தோள் மொய்ம்போனே
திகழ்மதி யொத்தொளிர் சமரபு ரிக்கிறை
செங்கோ செங்கீரை
செறிதய வுற்றவ ரிதயபு ரிக்குக
செங்கோ செங்கீரை. 7

குவளைப் பிழிசெங் குமுதப் பிழிகோ கனகப் பிழிகூடிக்
கோதறு சேதக மாகிக் கூனற் கொழுவுழு சிதைதொறுந்
தவளத் தரளத் தொடுபிழி ஊறல்த தும்பக்கடைசியர்தந்
தண்ணகை யொடுமித ழுறவொ ருஞ்சம ஞமென வுட்சினவிப்
பவளக் கடிகைப் பேரணி சரிதிகழ் பங்கய மென்கையாற்
பணிலத் தரளத் திரளைத் திடரிற் பழனக் கரைதரவே
திவளுற் றிடுதுண் டீரநன் னாடா செங்கோ செங்கீரை
சீரூர் போரூர் வீரம யூர செங்கோ செங்கீரை. 8

புள்ளுங் கிளியும் மயிலும் குயிலும்
பொன்னஞ் சிறையனமும்
பொருகோ டரமுங் கரியுந் திரியும்
பொங்கர்ப் புதுமலர்வாய்க்
கன்னும் விள்ளும் இருளிழி பிழியுங்
கனிவகை யின்சாறுங்
காலாய் மடுவாய் ஆருய் ஓடிக்
கடல்புக எதிரேறித்
துன்னும் மகரம் புயலின தகடு
துணித்துச் சலமேவிச்
சுடர்வான் மகரஞ் சாடிக் கங்கை
துளைந்து திரும்பிவருந்
தெள்ளும் வளமுள தொண்டைநன் ளுட
செங்கோ செங்கீரை
சீருர் போருர் வீரம யூர
செங்கோ செங்கீரை. 9

ஓதிம சாலம் மேதியி னங்கள்
உழக்கப் பேரேரி
ஒள்ளிய கமலப் பள்ளியை விண்டங்
குயர்தண் டலையேறத்
தாதவிழ் தண்டலை ஞிமிறுகள் விரைசெறி
தடமலர் மீதேறத்
தடநீ ராடிய மடவார் வெருவித்
தண்ணதி நீரேறக்
கோதறு நதியுறை வாளைகள் தாவிக்
குளிர்வயல் மடையேறக்
குலவிய மடைதவழ் குடவளை பதறிக்
கொழுவிய கமுகேறத்
தீதற வொளிர்தரு தொண்டைநன் ளுட
செங்கோ செங்கீரை
சீருர் போருர் வீரம யூர
செங்கோ செங்கீரை. 10

## 3. தாலப் பருவம்

கறையின் றெளிரு மதிமுகத்துக்
கரும்பன் னரும் ஆடவருங்
கலவித் தேறல் அயின்றயின்று
களித்துத் தருக்கி விளையாடும்
நிறையுஞ் சோமச் சிலைத்தகடு
நிரப்பிக் குலிசத் தூணிறுத்து
நிலைகொண் டரிய நவமணிகள்
நிகழும் மாழைத் தகம்புநிரைப்
பொறைகொண் டிலங்கும் பலமாடப்
புனிதக் கொடிகள் கற்பகப்பூம்
பொங்கர்க் குறுந்தாள் நறுமுகையிற்
புடைக்குந் தோறும் மடலவிழ்ந்து
தறையில் நறையின் பெருக்கூற்றுஞ்
சமர புரியாய் தாலேலோ
தமரக் கடலைக் கடைந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ. 1

மகரப் பரவை யளறுபட
மாயைத் திறமார் கிரவுஞ்ச
வயமால் வரைசெந் தூளியெழ
மதமா முகத்துச் சினத்தவுணன்
அகலக் குலிச வரைதகர
அரிமா முகன்பே ராயிரவாய்
அருஞ்சோ ரிகள்நின் றலையெறிய
அண்ட கூடந் தொடுஞ்சூதம்
இகலற் றலறி விழஅசுரர்
எவரும் பதறிக் குடியோட
இலங்கும் அமரர் கலங்காமல்
எழில்வா னுலகங் குடியேறத்

தகமைச் சுடர்நெட் டிலைவடிவேல்
தடக்கை யெடுத்தோய் தாலேலோ
தமரக் கடலைக் கடைந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ. 2

மூல நிலத்தி லதோமுகமாய்
முகிழ்த்து விழி இன் பொடுதுயிலும்
மூரிப் பாம்பைக் கால்அனலை
மூட்டி யெழுப்பி நிலம்ஆறுஞ்
சீல மொடும்போய்த் தரிசித்துச்
செழுமா மதியி னமுதகடல்
தேக்கி யகத்தங் கசைவறுமோர்
தெய்வத் தவத்தோர் உளவிழியிற்
காலுந் தீப மினல்பந்தங்
கடிகூர் விறிசு கதிர்மதிபோற்
காட்டு மொளியா யிவையாவுங்
கடந்தாங் கழிவில் பேரொளியாய்ச்
சால விளங்கும் விந்துவெனுந்
தடமா மயிலோய் தாலேலோ
தமரக் கடலைக் கடைந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ. 3

வேறு

காரார் திசைமலி போரார் களிறு
கலங்கிப் பிளிறிடவே
கனக நிறத்துத் திருகு மருப்பிற்
கனிசின மெரடுமோதிப்
பேரா யிரமுடி யுரகன் நெளிக்கப்
பின்போய் முன்னோடிப்
பேசரு வடவரை குலவரை திசைவரை
பெயரும் படிதாவிப்

பார்சூ ழேழ்கடல் குமுறத் துள்ளிப்
பனிவா னகம்மோதிப்
பகரரு கோளகை சாடிப் பீடுறு
படிவரு தகருடையோய்
தாரார் பொழில்சூழ் போரு ரிறையே
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 4

அமரர் தமக்கன் றொருநாள் இரணிய
அணிவட வரைமீதே
அறைதரு மும்மா யையினூ டுருவி
அகண்டா காரமதாய்த்
திமிர மகற்றிய முச்சுட ருக்கொளி
செய்கா ரணவொளியாய்த்
திகழ்தரு புவன சராசர முழுதுஞ்
செறிபூ ரணவெளியாய்க்
கமையுறு மனவா சகமொடு காயங்
கண்டள விடவருநின்
காட்சியை மாட்சிமை பெறமுன் காட்டிய
கண்ணே யாவர்க்குந்
தமரென நிலவிய சமர புராதிப
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 5

கோளகை தடவிக் குடைபல நீடக்
கொடியெண் திசைமுடக்
கோதறு பேரணி சூரியர் மறையக்
கொழுவிய வெயில்வீச

நீளிய சாமரை வீசப் பேரிகள்
நீள்கட லேமெனவே
நின்று முழங்கத் தெய்வத நகரில்
நிரம்பும் அரம்பையர்தாம்
வேளை மருட்டு விழித்தொழில் கைத்தொழில்
வேறு காநடன
மிட்டு வரப்புய லொத்தவன் முதலவர்
மெய்ச்சிவ ரச்சுரர்கைத்
தாளம தொத்தவெள் ளானையி லுற்ருேய்
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 6

தென்னங் காவைச் சூழப் பூகத்
திரளவை புடைசூழத்
தேமா வினமற் றவைபுடை சூழச்
செறிதரு பலவின் இனம்
மின்னும் மவைபுடை சூழப் பெருவா
ழைக்கா டவைசூழ
மிளிர்கன் னற்கா டவைசூ ழப்புனல்
மிகுநெற் பணைமருதம்
மன்னுஞ் சூழற் பொன்னம் பூமியில்
வானவர் வந்திழிய
மவிசோ பானம் போல விளங்கிய
வளனெடும் இளமாழைத்
தன்னந் திகழ்சா ரற்போ ரூர
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 7

செங்கட் சிறுமின் னொளிர்வன மேதிச்
செழுமே கங்குழுமித்
திகழ்தரு வரைமிசை கனைகுர லொடுதீம்
பால்சொரி வெள்ளருவி
வெங்கட் பணிமணி யின்குவை கழைமணி
வெண்குவை பொங்கொளிசேர்
வியன்நீ லக்குவை யொடுமுச் சங்கநல்
வேணியெ னும்படியே
துங்கப் பேரலை கொண்டு வரன்றித்
துண்ணென் றிழியொலியாற்
றுடியடி வரைமுழை தோறுங் கண்படு
சோலைச் சாரலெலாந்
தங்கப் பொடியே மிளிர்போரூர
தாலோ தாலேலோ
சண்முக முக்கட் பண்ணவர் குருபர
தாலோ தாலேலோ. 8

வேறு

கஞ்சனை யன்று முனிந்து சிவந்தருள்
கையாய் தாலேலோ
காமனை வென்றவர் தோளிலு லாவிய
காலாய் தாலேலோ
மஞ்சன் மகன்கன வின்சொல் வழங்கிய
வாயாய் தாலேலோ
மஞ்சள் வடஞ்செறி குஞ்சரி கொங்கைகொள்
மார்பா தாலேலோ
விஞ்சுறு மன்பினர் பந்தனை கொன்றொளிர்
விழியாய் தாலேலோ
வேடுவர் மங்கையு ளங்குடி தங்கிய
மெய்யாய் தாலேலோ

தஞ்சென வந்தவ ருஞ்சிடு சமர
புராதிப தாலேலோ
சரவண பவனே குரவணி தருசண்
முகனே தாலேலோ. 9

குண்டைச் சமணக் கரிகளை யடுகோ
ளரியே தாலேலோ
கும்பத் திடுமென் பைத்திரு விற்றரு
குழகா தாலேலோ
பண்டைத் தமிழ்நக் கீரன் சிறைவிடு
பண்பா தாலேலோ
பச்சைக் கொடிகச் சுப்பொரு கலசப்
பாலா தாலேலோ
மண்டைத் தலையிற் பலிநசை கொண்டவன்
மைந்தா தாலேலோ
வாரணம் ஐந்து கரங்கொடு தழுவிய
வாகா தாலேலோ
தண்டைத் தாளுந் தோள்களும் அழகிய
சதுரா தாலேலோ
சரவண பவனே குரவணி தருசண்
முகனே தாலேலோ. 10

---

## 4. சப்பாணிப் பருவம்

பொருநைநதி யிற்படிந் திளமரக் காவிற்
புகுந்துசந் தப்பொங்கரிற்
புக்குமண நாறுதென் றற்குழவி விளையாடு
பொதியப் பொலங்குவட்டில்
திரையெறியு மணியாழி யங்கையி லடக்கியஞ்
செந்தமிழ்க் கடல்விரித்துத்
திறமையுடன் உரையுமொரு குறுமுனி யகத்தினுள்
திமிரமற மறைமுடிவெனும்

அருளொளி பரப்புஞா னக்கொழுஞ் சுடர்வைத்த
ஆருனனக் கொண்டலே
அன்பர்வாய் வண்குமுதம் விண்டுதண் தமிழ்நறவ
மாரவெழு மொருமதியமே
தருணவுமை முககமலம் மலரவரு பரிதியே
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 1

அலைகட லிடைப்பெரிய மகரமீன் நீர்கிழிய
அம்பிற் கடிந்தேகுமா
ரவுயர்த் திடுகொடிக் குருகுலக் கோமகன்
அடற்படைக் கடலுடையவே
சிலைவலிய வாகுவல யப்புயப் பற்குனன்
தேர்கடவி வெற்றிவளைவாய்ச்
செம்மலரில் வைத்துமறு மன்னர்செவி செவிடுறச்
செல்லிடித் தொனிமுழக்குந்
தொலைவறு பசுங்கதி ரெறிக்கும்மர கதநிறச்
சுந்தரப் புயன்மருகனே
சுருதிமுடி வாசனத் துறைபரை முலைக்குடஞ்
சொரியமுத வாரிநாறுந்
தலைமைபெறு செங்குமுத வாயனே தூயனே
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 2

ஈராறு பரிதியி ராறுமே ருதயத்
திருங்குழை சுமந்தபுயமும்
ஈரெட்டு வெண்கலைகள் மேவிக் களங்கமுய
வின்றிச்செ முஞ்சுடர்விடும்

ஓராறு மதியமீ ராறுதெய் வக்கமல
ஒண்மலர் மலர்ந்தபடியே
ஒற்றுமை பெறக்கொண்டு நிற்றல்போ லத்திகழும்
ஒளிவிழி சிறந்தமுகமுஞ்
சீரார் படைக்கலக் கமலமும் மார்பமுஞ்
செய்யதண் டைத்தாளுமென்
திமிரமற எனதகங் குடிகொண்டு மீளாது
திகழ்வீடு தருகுரிசிலே
தாரார் சடைப்புனிதர் பாலாகு கக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 3

நனவில்வரு கனவிற் சுழுத்தியிற் பொறிகரண
நற்புருட னிற்பகுதியும்
நவில்கால பரமதில சுத்தமா யையும்விண்ணின்
நண்ணுபூ ரணமாயதோர்
உனலருவி யோமத் திருஞ்சுத்த வித்தைமுதல்
ஒருமூ வகைக்கருவியும்
ஒருபரம துரியத்து விந்துவும் மிளிர்விசுவம்
உண்டதிசை யுயர்நாதமும்
வினவலுறும் உபசாந்தம் அதனில்மா மாயையும்
மிகுசொருபம் அதனிலிருளும்
விள்ளுமென வுரைசெய்தென் உள்ளமலம் அகலஅருள்
விழிவழிப் பொழியுமுகிலே
தனபதியை எலுவனென வுளமகிழும் அரன்மதலை
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 4

குலிசக் குழுச்கலவு பூனதக் கிம்புரிக்
கோடுநா லுடையவெள்ளைக்
குஞ்சரக் கும்பமிசை கொட்டல்போ லச்சிவன்
குவவுப் புயங்கொட்டல்போல்
மலைபெற்ற பைம்பிடிப் பாலுண்டு முத்தமிழ்
மதம்பொழியு மந்தராளின்
மன்னுதத் துவமசியின் மும்மைப் பதங்களை
வகுத்தறி வுறுத்துமுறைபோற்
கலகப் பிணக்குடைச் சமயப் பெரும்பறவை
கடியுமொரு கருவியதுபோற்
கருதரிய பதிமுதல் திரிபொருளும் நிசமெனக்
கைக்குறிப் பறிவித்தல்போல்
தலைமைத் தமிழ்ச்சங்கம் அளவிட்ட விரககுக
சப்பாணி கொட்டியருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக
சப்பாணி கொட்டியருளே. 5

கன்னன் திருத்தங்கை முலையமுத கடலுண்டு
களஞான வரையிவர்ந்து
கருதரிய சுரர்முதற் பயிர்கள்தழை யப்பெருங்
காரவுண மாசுணமெலாந்
துண்ணென் றுளஞ்சுறுக் கிட்டுமூரி யச்செழுஞ்
சுடர்விடுந் தாரைநெடுவேற்
சோதிமின் மின்னியெழு தீபச் சிகைப்பொருவு
சுடிகைக் கொடிப்பேரிடி
எண்ணெண் திசைக்களிறு பிளிறிட இடித்துமுறை
இன்னருட் பொழியுமுகிலே
இசைமுழவு பேரிகை வலம்புரி முழக்கமுடன்
எழில்மங்க லச்சும்மையுங்

தண்ணந் துறைப்பரவை யோடிகலு போரூர
சப்பாணி கொட்டியருளே
தகைமைபெறு குறவள்ளிதன் விழியிணைகள் குடிகொள்புய
சப்பாணி கொட்டியருளே. 6

மரகதப் பந்திநிறை பைங்கிரண மண்டலம்
வழங்குகுழை முகமதிகளும்
மாணிக்க மணிராசி யிளவெயிற் றிசைவீசு
மகுடநீ டியமுடிகளுங்
கரகதிர்ப் பகலெனச் சுடர்விரித் தொளிர்வயிர
கடகநிரை செறிதோள்களுங்
கறையகலு மதிமண் டலங்களென நித்திலங்
கதிர்விடு மதாணிமார்புந்
திரகதச் செக்கரின் நிறத்துகில் மருங்குலுந்
திப்பியத் தலநவமணித்
திரண்மண்டு தண்டையங் கமலமுந் திகழவிச்
சித்திரப் பைஞ்சிறைமயிற்
குரகதத் தினைநடவி யடியவர்க் கருள்முருக
கொட்டியருள் சப்பாணியே
கூரு ரயிற்கிறைவ போரூர் நகர்க்கதிப
கொட்டியருள் சப்பாணியே. 7

வேறு

உடலிற் குடர்நீ ளக்கொடு சென்றுவ
ணத்திரள் வட்டமிட
ஒள்ளிய செல்வப் பிள்ளைகள் பற்பல
உயர்பட் டம்விடல்போற்
கடலிற் படுகுரு திப்பெரு வெள்ளங்
கட்குழி சிறுபலபேய்
கடிஅதள் மூடிய பேரிகை முழவு
கரங்கொடு கரைகாண

மிடலுற் றிடுபிண மாமலை தோறும்
வியன்பேய் களியாட்டம்
இட்டா டத்தலை வட்டா டக்கடு
வெஞ்சூர்க் குலமுழுதுங்
கொடுமைத் திறமும் அறவேல் விட்டவ
கொட்டுக சப்பாணி
கொற்றவ நற்சம ரப்பதி யுத்தம
கொட்டுக சப்பாணி. 8

வேறு

ஆடகத் திரள்மதிலும் மேல்நிலைச் சிகரிகளும்
ஆணிமுத் தொளிர்மேடையும்
ஆழிதத் தலைபொருவு பீடுடைக் கொடிகள்பல
ஆடுபொற் குடமாடமும்
நீடுதெற் றிகளுமணி சூளிகைச் செழுமனையும்
நேர்செலுத் தியதேர்களும்
நீர்நிறைத் திடுகுடமும் வாழைநற் கமுகினமும்
நீள்நிலைப் பலதேர்களும்
சேடுறத் திகழ்மகர தோரணப் பலமறுகு
தோறுமுத் தமிழோர்களும்
சீர்மறைத் தலைவர்பரி பூரணத் தவரளகை
யாளனெத் தவர்யாவருங்
கூடிமொய்த் தொளிர்சமர மாநகர்க் கொருமுதல்வ
கொட்டியருள் சப்பாணியே
கூடலிற் செழியன்அழல் கூன்அறப் புரியும்இறை
கொட்டியருள் சப்பாணியே. 9

வேறு

தீதறு கற்பக நற்றரு வுற்ற செயக்குலி சப்பாணி
சேடளுடற்றுயில் பச்சைநிறத்த செருச்செய்வளைப்பாணி
போதிடை யுற்றுல கத்தை யளித்த புதுக்கர கப்பாணி
பூசுரர் நற்றவர் கற்றவ ரேத்து புவித்தலம் உற்றுூர்கள்

மூதணி கைக்கம லத்தொ டுவப்பு முகக்கம லப்போது
மூட விரிக்க வுதித்த மதிக்கதிர் ஒத்தெழு மெய்த்தேவே
கோதறு நற்சம ரப்பதி யுத்தம கொட்டுக சப்பாணி
கூர்கொளயிற்படை யுற்றகரத்திறை கொட்டுகசப்பாணி.

## 5. முத்தப் பருவம்

கயல்கொக் குடும்பின் சிரசுகளுங்
கரிக்கோ டேன முடக்கோடுங்
கழையுங் கரும்புங் கமுகினமுங்
கதலி சாலி கடிக்கமலம்
புயனத் தாதி தருமுத்தம்
புனலிற் கனலிற் புடவியினிற்
பொன்றும் பொதியிற் கேழொளிபோம்
பொருந்தும் விலையுண் டவைவேண்டேம்
இயல்புற் றென்றுன் அழிவிலதாய்
என்றும் புதுமை தருமொளியாய்
எவர்க்கும் மதிக்க அரிதாகி
இருந்து மிகுந்த மதுரமெலாம்
முயல்வுற் றளிக்கும் நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முகுந்தன் மருகா சமரபுரி
முருகா முத்தந் தருகவே. 1

சந்தங் கமழ்மந் தாரலத்தேர்
தருக்கோ டிவர்ந்து பொறிஅளிகால்
தளைக்கு முருக்கு நாண்கழைக்கோ
தண்டங் குழைத்து வளைத்தேற்றி
இந்தங் கவிகை யமுதகிழல்
ஈயக் குயில்கள் விருதூத
இசைவா ரிதிப்பே ரிகைமுழங்க
இருள்மால் களிறுஞ் சுகப்பரியுங்

கந்தங் கமழுங் குழற்படையுங்
கடவுள் வசந்த னெடுசூழக்
களித்து வருவோ னெளித்தேகக்
காட்சி தருகட் டழகுடையோய்
முந்துந் தவத்தோர் பணிசரண
முதல்வா முத்தந் தருகவே
முகுந்தன் மருகா சமரபுரி
முருகா முத்தந் தருகவே. 2

பெருகுங் கருணை சுரந்தொழுகும்
பிராட்டி பசும்பொற் குடத்தமுதும்
பிறங்கும் அறுவர் ஈராறு
பெரிய குரும்பை யொழுக்கமுதுங்
கருகுஞ் சகரர்க் கருள்புரிந்து
கடலின் அகடு கிழித்தொழுகுங்
கங்கைப் பெருந்தாய் ஆயிரமாங்
கனிவாய் முத்த மிடுமமுதுங்
குருகின் சிறையும் பிறைக்கொழுந்துங்
கூடத் திகழ்செஞ் சடைப்பெருமான்
குமுதத் திருவாய் முத்தமிடக்
கொழிக்கும் நறவும் மோனசுக
முருகுந் ததும்புங் கனிவாயால்
முத்தந் தருக முத்தமே
முகுந்தன் மருகா சமரபுரி
முருகா முத்தந் தருகவே. 3

வேறு

பனியிற் குறிய துளிதூற்றும்
பரவைத் தரங்க மெடுத்தெறிந்த
பணிலத் திரளும் இரசிதப்பூம்
பணிச்செப் பேய்ந்த முரண் இளமும்

நனிமுற் றியசூல் உளைந்துசொரி
நளிவெண் தரளத் திடர்தோறும்
நவைதீர் பவள வண்டல்வரை
நடுவும் படவர் மடமகளிர்
இனிதுற் றிவர்ந்து பனைப்பாளை
இருந்த கலச மதுவருந்தி
இணர்க்கே தகையும் புன்னைப்போதும்
எடுத்து முடித்துக் களித்தாடும்
முனிவர் குழாங்கள் புகழ்போரூர்
முதல்வா முத்தந் தருகவே
முத்தார் கொத்தே அறுதிவரு
முத்தா முத்தந் தருகவே. 4

வேறு

பூனத மாழைக் கிண்கிணி பலவும்
பொலிவொடு கணகணெனப்
புனிதத் தண்டையி னொலிகல கலெனப்
பொற்றொடி நிரையதிர
மேல்நகும் அரைவடம் ஓசை தழைந்திட
வியன்நவ மணிமாலை
விரவி யலம்பக் குண்டல மொளிவிட
மிளிர மணிச்சுடிகை
யான முடப்பட மாயிர முந்தன்
னாடத் தளர்நடையிட்
டம்மை செவிக்கின் சுவைபெற மழலை
அரும்பிழி சொரிவாயால்
மோன சுகந்தரு ஞானப் பிள்ளாய்
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. 5

இருண்மைப் படலங் கெடநுங் குஞ்சுடர்
எழின்மா ணிக்கவரை
ஈரைந் துடனக் கிரிவந் தீரா
றிணைவுறு பரிசதெனக்
கருடத் துவசனும் அறிவரி யானணி
கடகத் தோள்தழுவிக்
கறையறு முழுமதி யொருபத் தொன்று
கலந்து மகிழ்ந்துறல்போல்
அருள்மொய்த் தொழுகு முகத்தொடு முகம்வைத்
தழகிய மழலைசொலி
ஐய னுளங்களி பொங்குற முத்தம்
அடிக்கடி தருவாயால்
முருகுற் றெழுநீ பத்தொடை யழகா
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. 6

பூவே பூவிற் பரிமள மேயப்
பூநிறை சுவைநறவே
பொங்குங் கடலே கடலி லுதித்தெழு
புனிதத் தெள்ளமுதே
காவே காவிற் கொஞ்சும் பஞ்ச
வனக்கட வுட்கிளியே
கண்ணே கண்ணுறு பாவாய் பூவாய்
கனியே கனிரசமே
தேவே தேவர் சிரோன்மணி யேயென்
சீருயி ரேயுயிரிற்
செம்பொரு ளேயரு ளேமுழு மணியே
மணியிற் றேசிகமே

மூவா மறையே மறையின் பொருளே
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே 7

ஆடக நன்கத் தரியால் வேளுக்
கம்பு திருத்துவபோல்
அலவன் குறுமுள் தாள்கொடு குவளையொ
டம்புய இதழ்கிள்ளும்
ஓடையில் நீடுங் கவையடி மேதிகள்
உறுகுட மடியில்வரால்
உகள யடிக்கடி முட்டக் கன்றென
உள்ளிச் சொரிவெள்ளம்
பீடுறு மாலைச் சாடிகொ ளாதெழு
பிரச வெளத்துடனே
பெருகிக் கதலியின் மஞ்சளொ டிஞ்சி
பெருங்கழை செஞ்சாலி
மூடி நிறைக்குந் தொண்டைநன் னாடா
முந்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. 8

மாலைப் பொழுதிற் பெடையொடு சிறையளிவனசக்கோயில்புக
வளர்மதி யமுத கரங்கொண் டிதழ்வா சக்கதவதுமூடக்
காலைப் பரிதி கரத்தா லந்தக் கதவு திறந்துவிடுங்
கடிமல ரேரிப் பெருமத கெழுநீர் கதிர்வயல் புகளதிர்போஞ்
சேலைச் சினைபடு களிறு துரத்தச் செறிநில விறிசெனவே
சிறறிக் கன்னற் காடு முறிப்பத் தேன்முத் தொடுசொரியும்
முளிச் சுதைநிகர் பாலிநன் னாடா முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக முத்தந் தந்தருளே. 9

வேறு

சிமயம் மொய்த்தொன் றிமய வெற்பன்
தவப லப்பைம் பிடியனள்
செறிக ளிப்பண் புறவு ரைக்குஞ்
சிலசொல் கற்குஞ் சிறுகிளாய்
அமர ருக்கும் முனிவ ருக்கும்
அடிய வர்க்கும் அமுதமே
அவுண ருக்குஞ் சமண ருக்குங்
கொடிய வர்க்கும் அனலமே
குமுத நற்பங் கயம்மு ருக்குங்
குலிகம் மிக்குஞ் சுதைநருக்
குலவு கற்கண் டிவையி ருக்கும்
இதழ ளைப்பைங் குழவியே
சமர நற்செம் பதிய ருக்கன்
தருக முத்தந் தருகவே
தணிகை வெற்பன் சரவ ணத்தன்
தருக முத்தந் தருகவே. 10

---

## 6. வருகைப் பருவம்

விரைநறுங் குழலினர் கொங்கைப் பெருங்குவடு
மிகுதடக் கடலுழக்க
வெள்ளைவா ளைக்களிறு கொள்ளுசூல் முகில்பிளிறி
விள்ளக் கிழித்தஃதுறு
திரைதருங் கந்திக் குடக்கமுத் தறமோதி
நெட்டிலைக் கதலி சாடி
நீடுகன் னற்கா டொடிந்துப் பொறிச்சிறைய
நீலவண் டுதுகஞ்சத்

திரளொடும் பணைமண்டு நெற்றூ ளுடைத்திடச்
செறிதரள முகிலாதியிற்
சிந்தப் பெருஞ்சோதி யுடுமண் டலத்தினில்
திகழ்கின்ற மருதவேலி
மருவியம் புகழ்கொண்ட சமரபுரி தனில்நிலவு
மஞ்ஞைவா கனன்வருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. I

பொன்னஞ் சிறைப்பேடை அலனங் களிப்போடு
புனலாட நிழல்கண்டுதன்
புகலாவி யின்சேவ லுடனூடி மாலையம்
பொழுதிற் கரந்துறைதரத்
துன்னுறு மடற்கேத கைத்துணரை வெள்ளிதழ்த்
தூயகஞ் சக்குழுவினைச்
சுரிமுகச் சங்கினைத் திரையெறியு நித்திலத்
தொகுதியைச் சூலிப்பியைப்
பன்னுநா ரைத்திரளை நாடிப் பசும்புனைப்
பஞ்சரத் திடைகண்டுதன்
பவளவா யதின்வாய் மடுத்தரு கணைத்துப்
பரிந்ததனின் முனிவகற்றி
மன்னுந் தருக்கொடு திளைக்குநெய் தற்சமர
மாநகர்க் கிறைவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 2

குழையளவு தாவடி செலுங்கயற் கட்கவுரி
கொஞ்சிவிளை யாடுகிளியைக்
குழகர்வே ணிப்பிறைத் தோணிமிசை வைத்தலை
கொழித்தகங் கையில்விடுத்தும்

உழைவெருவி யுகளவெம் புலியதளை ஆனனத்
துறவைத்து நகைகொட்டியும்
ஒளிர்மணிச் சுடிகைமுட வுப்படத் தரவத்தை
உலர்தலை முழைக்கண் உய்த்தும்
இழைபொருவும் ஆமையோ டதில்அறலை மொண்டெரி
அவித்தரி மருப்புவில்லுக்
கெண்தோள் தயங்குபுரி நூல்நாண் வளைத்திட்
டெழிற்கரத் திடைபிடித்து
மழைபொருவு களன்மடியில் விளையாடு குகசமர
மாநகர்க் கிறைவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 3

மேருப் பொருப்பையொரு தண்டெனக்கொண்டும்எழு
வேலையை யுறிஞ்சிவிட்டும்
விரிசக்ர வாளகிரி யொருவாகு புரியாக
வெவ்வலித் தோளிலிட்டும்
பேருற்ற கயம்எட்டும் எட்டுநா கங்கொடு
பிணித்துச் செவிக்கணிந்தும்
பெரியபுவ னப்பொறைக் கமடம தெடுத்துப்
பிறங்குசில் லெளவிடுத்துஞ்
சீருற்று விளையாடு பூதக் கணத்தொடுஞ்
சென்றுசூர் வேட்டை யாடுஞ்
சேவகப் பெருமாளென் ஆவியுட் பெருமாள்
செயத்தேவர் முனிவர்பெருமாள்
மாரிப் புயற்கருணை பொழிகின்ற போரூர
மாயூர குகவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 4

அளகுபல முட்டைதன் சிறைகொண் டணைக்குமா
றண்டரா சிகளைத்தும்
அகலப் பெருஞ்சிறையில் விகலப் பொருட்போல்
அடக்கிவைத் தும்விடுத்துங்
களவகல வருசுத்த மாயைவெளி முழுதுங்
கடந்தொரு கணத்தில்வந்துங்
கலிசுவே தத்திலெழு சலராசி தந்தூழி
காலஅழல் வெருளிதந்தும்
புளகமெழு மெய்ச்சிறை யடித்துப்பிர சண்டப்
பொருங்கா லளித்துநச்சுப்
புழையெயிற் றுரகன்மணி யிரவிதந் துஞ்சிறைப்
பொருவில்நிழல் மதியளித்தும்
வளமையுடன் நடனமிடு மாயூர போரூர
மாவீர குகவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 5

பூதம் புலன்பொறிகள் கரணங் குணம்பகுதி
புகலரு கலாதிசுத்தம்
பொருவிலிரு மாயையுங் காணவரும் ஆணவப்
பொங்கிருளு முடுருவியே
பேதங் களைந்துயிர்ப் போதங் கலைந்துகலை
பேசொணு நேர்மை வெளியாய்ப்
பேரா யிரங்கோடி சூரியரும் மட்கப்
பிறங்கியெழு ஞானவொளியாய்
ஏதங் கடந்துட் புறம்பாகி யாவைக்கும்
இன்பபரி பூரணமதாய்
இலகருட் சத்தியே சத்தியா கக்கையில்
எடுத்தஞா னச்சேவகா

மாதங் கனங்கள்மும் மாரிபொழி போரூர
மாயூர குகவருகவே
மலிபுவன முழுவதுங் கிடுகிடென நொடியில்வலம்
வருகந்த வேள்வருகவே. 6

வேறு

கருத்தே புகுந்து கதிகாட்டுங்
கண்ணே வருக மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக கருணைபொழி
காரே வருக ஆனந்தப்
பெருக்கே வருக யாங்கள்பெறும்
பேறே வருக மறைசொல்கிளிப்
பிள்ளாய் வருக பிறங்குதெய்வப்
பெருமாள் வருக குறமடந்தை
தருக்கே வருக மிடியகற்றுந்
தருவே வருக மன்பதைக்கோர்
தஞ்சே வருக எமையளிக்குந்
தாயே வருக பவப்பிணிக்கு
மருத்தே வருக சமரபுரி
வாழ்வே வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல் வருக வருகவே. 7

வட்டாட் டாகு மெங்கள்பவ மாற்ற வருக பொறிவேழம்
வணக்க வருக மனமாவை மாய்க்க வருக மலச்சிறையை
விட்டாட் கொண்டு மெய்ஞ்ஞானம் விளக்க வருக வியனருளே
மேலீ டாக்கி யெங்குநிறை மிளிர்பே ரின்பந் தரவருக
தட்டா திருந்த சிவமென்றார் தானென் றிளைக்கும்மயலகற்றித்
தானே யதுவா யதுதானாய்த் தயங்கு மோனந் தரவருக
மட்டார் சோலைச் சமரபுரி வாழ்வே வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான வள்ளல் வருக வருகவே.

வேறு

உயிருள் மருவு திமிரம் இரிய ஒளிரும் அளவில் பரிதியே
உததி பொருவு கருணை யமுதென் உளனு ளுதவும் மதியமே
இயலின் மதுர முழுதும் அறியும் இசைகொள் பெரிய புலவனே
இரவு பகலும் நினையும் அடியர் இதய நகரின் அரசனே
கயிலை யிறைவர் மகிழ வொருசொல் கழறு பரம குரவனே
ககன சுரர்கள் முடிகள் தடவு கமல சரண கடவுளே
மயிலின் முதுகில் உதய குமரன் வருக வருக வருகவே
மகிமை தழுவு சமர புரியன் வருக வருக வருகவே. 9

அறைய அரிய கருவி யடவி யருக வொழுகு நதியமே
அறிவில் சமய அரிகள் வெருவி அலற முடுகு சரபமே
நிறைகொள் பரம சுகமெய் யடியர் நினைவி லுதவு பிரமமே
நிகழும் அயனும் அறிய அரிய நிமல வொளியுன் மதுரமே
கறைகள் இரிய எனது மனது களுலி நிலவு புணரியே
கலக வினைவ லனலை யடுநற் கருணை பொழியும் எழிலியே
மறைகள் குலவு கமல சரணன் வருக வருக வருகவே
மகிமை தழுவு சமர புரியன் வருக வருக வருகவே. 10

---

## 7. அம்புலிப் பருவம்

மானை ஆகந்தழுவு வாய்இவனும் உமைதந்த
மானை ஆகந்தழுவுவான்
வனைசடைக் கங்கையலை தவழ்குழவி நீயதின்
மடித்தலக் குழவி இவனுங்
தேனனைய மொழியறுவர் மகிழவரு வாய்இவன்
திகழுமவர் மகிழவருவான்
சிவனடியும் முடியும்நீ யறிதிமற் றவைஇவன்
சிறுவிரற் சுட்டியறிவான்

சோனமழை யெனஅமுது பொழிகிரணன் நீ இவன்
சுககருணை யமுதுபொழிவான்
துன்னிருள் கிழித்தெழுஞ் சோதிநீ யிவனடியர்
துகளிருள் கிழித்தசோதி
யான இம் முறைமைகொடு நீநிகர்தி யான்மகிழ்ந்
தம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 1

சுரர்சிலர்க் கமுததவி நீதேர்வை கதியமுது
தொல்லுயிர்க் குதவிநிறைவான்
தோமுறு களங்கன்நீ யிவனடியர் கனவினுஞ்
சொல்லுறு களங்கம்அறியார்
உரஅரவி னுக்குநீ வெருவுவாய் அஃதுமிவன்
ஊர்பரிக் கொருகவளமாம்
உலகைவலம் வரவுனக் கொருதினஞ் செல்லும்இவன்
ஒருநொடியி லோடிவருவான்
இரவினுக் குரியவொளி நீயிவன் அகம்புறத்
தெக்காலும் மிக்கவொளியான்
எய்துதண் ணளிசிலர்க் குடையைநீ யனைவர்க்கும்
இவனெண்ணு தண்ணளியினன்
அரன்முத லெவர்க்குமொரு குரவனிவ னுதலால்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 2

மயிலும்அயி லுங்கொண்டு வன்பகை தணிக்கலாம்
மலரடித் தோணிகொண்டுன்
மாருத பவசலதி யேழுங் கடக்கலாம்
வானுலகு தொழவாழலாம்

வெயிலொளியும் நிகரலவெனப்புகல மெய்ஞ்ஞான
மிக்கவொளி பெற்றுய்யலாம்
வீடகத் துலையா திருந்தமு தருந்தலாம்
மிகுதுகட் சிறைகடியலாங்
குயிலனைய மொழியார் முகத்தினுக் கொப்பெனக்
கூறுத பெருமையுறலாங்
கொடியகய நோயகன் றெப்பொழுதும் ஓல்காத
குலிசமென வடிவுபெறலாம்
அயிலைமுள ரிக்கரங் கொண்டசே வகனுடன்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 3

கஞ்சா தனத்தனைச் சிறையிடுவன் முத்தமிழ்க்
கவிஞனைச் சிறைவிடுப்பன்
கடியகுன் றடுவன் இருள் கடியுங் குணக்குன்று
கனகும்ப னுக்கருளுவன்
எஞ்சாத கடலழித் தரிவைமுரு காளன்
றிசைக்கஅருள் வாரிதருவன்
இகலவுணர் கனைகட் டடைந்தகட வுளரெனும்
இரும்பயிர் தழைப்பவைப்பன்
நஞ்சாய சமணர்கழு வேறவிட் டடியர்நா
டோறுமீ டேறவருவன்
நவைதழுவு புத்தன்முடி யிடறியழ லடும்என்பை
நனிமங் கைக்கிணைசெய்வன்
அஞ்சா திருந்திடே லிவன்வெகுளி கொளுமுனம்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 4

முக்கணு யகனரிய திருநுதற் குறுவியர்வின்
முரிவட வையினுதித்தோன்
முதண்ட கோளகை கிழித்தெழுந் தாயிர
முகந்தோறும் வெகுளிபொழியத்
தக்கன்மக சாலையுட் புக்கியங் குறைகின்ற
சதகோடி தேவரையெலாஞ்
சாடிக் கொழுங்குருதி யாடிப் பெருந்தூளி
யாடித் தருக்கியாடி
மிக்கவுள துடலமொரு கறியாக மாநிலம்
மிகுத்தபே ரம்மியாக
மேன்மைதரு பாதவெங் குழவிகொ டரைத்தனன்
வியர்வினு லவனையுதவும்
அக்கடவுள் கட்கனல மிக்குழவி நீவிரைந்
தம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 5

விரவுபல அண்டங்க ளிவன்உட்டை யெனவைத்து
விளையாடு பைங்கழற்காய்
விரிகருவி யாருறு மிவனேவல் தலைகொண்ட
வீறாழி யக்காரராம்
பொருவரிய இருமாயை யிவனுளம் நினைத்தபடி
புரிகின்ற தாதியர்களாம்
பூரணத் திரஞான வாரியெழு சுவையமுது
போசன மிவன்தனக்கே
கருதரிய மறைநாலு மிவனர சிருக்குமொரு
கதிர்மணிச் சிங்கஅணையாம்
ககனசுரர் அனைவரும் இவனைப் பணிந்துகை
கட்டும் பெருஞ்சேனையாம்

அரிபிரம ரிவனுக் கமைச்சராம் ஆதலால்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 6

மேகசா லங்களென நீலக் கலாபம்விரித்
துவிச்சித்தி ரகிரிபோல்
விண்டுவினை மேவியோர் சண்டநா கத்தனை
விடுத்தவனை வேலைமூழ்கப்
பாகுவா ரிதியளறு படமொண்டு சிவலோக
பரியந்த மேவிநின்று
பரமனுல கும்பரந் தாமனுல கும்பரி
மளிக்கின்ற கமலனுலகும்
போகமலி கற்பகா டவிநீழல் வாழ்வேபொ
லிந்தபுரு கூதனுலகும்
புகருலகு மதியுலகு கதிருலகு பூவுலகு
பொங்கப் பொழிந்துமீளும்
ஆகிறைவர் பின்வருந் தோகைஇறை தன்னுடன்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே. 7

புலன்மறுகு பொறியையுறு கமடமென வுட்கொண்டு
பொருமுக் குணங்கள்வென்று
பூரகம் இரேசகந் தாரக மெனுந்தொழில்
புகன்றகா விற்பயின்று
கலகமறு நடுநாடி சென்றுமுச் சுடர்களின்
கதிர்மண் டலங்கடந்து
கணபண டவியுரகன் முடியிற் றுளக்கம் அறு
கம்பத்தின் அசைவற்றுளோர்

மலஇரவு விடியமிகு துறவுணர்வு நலசயறுதல்
மலிகுணக் குன்றின்முடிமேல்
மன்னுஞா னக்கதிரெழுந்தொளி பரப்பமா
ருதுதச நாதமுழுதும்
அலகில்பவ துயிலறக் கூவுசே வலனுடன்
அம்புலீ யாடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன்
அம்புலீ யாடவாவே.

வேறு

கானவர் குலமட மானை மணந்த
கடம்பன் கரைபொருநீர்க்
கஞ்சச் சரவண அணைமிசை தனில்நனி
கண்துயில் சிறுகுழவி
ஆனவுன் மனைவி வளர்த்திடு மகனிவன்
அம்மான் உரலோடே
அன்றனை திருடிக் கட்டுணி இடையன்
அனையுஞ் சிறுவாலே
ஊனமில் அத்தன் பித்தன் இவற்கென்
றுன்னி யிருந்துவிடேல்
உலக சராசர மிவன்முத் தொழில்விட
வுண்டோ கண்டிலையோ
வானவர் சேனை பதியுடன் ஆடிட
வாஅம் புலிவாவே
மலிசம ராபுரி முருகன தருகே
வாஅம் புலிவாவே. 9

குறுமுன் தாள்நெட் டிதழ்வெண் கமலக்
கோயி லிருந்தவள்தன்
கொழுநன் தொழில்தந் திடவோ பச்சைக்
கொண்டற் கிணைசெயவோ

தருகண் சிறுகண் தழைசெவி வெள்ளைத்
தந்திக் கரசுறையுந்
தருநிழல் தரவோ துருவ னிருக்குந்
தங்கக் கிரிதரவோ
பிறவிப் பகையைத் தெறவோ தண்கலை
பிரியா தருள்தரவோ
பேசரும் மறுவில ரியாவரு நிற்கப்
பேரரு ளேதறியேம்
மறுவுற் றுளநினை வாவா என்றனன்
வாஅம் புலிவாவே
மலிசம ராபுரி முருகன தருகே
வாஅம் புலிவாவே 10

---

## 8. சிறுபறைப் பருவம்

கனகருவ டெனநிலவு வீரவா குத்தலைவர்
ககனமுக டளவும்இரதக்
கணமணி முழக்குங் கவுட்குழி திறந்துபாய்
கலுழிமத கரிமுழக்கும்
மனகதியி னைப்பொருவு குரகத முழக்கொடு
வயப்பூத கணமுழக்கும்
வால்வளை முழக்கும்அதி பேரிகை முழக்கும்அகல்
வானவர்கள் முடிமுழக்கும்
பனகஅணை துயிலுமவன் முதலினோ ருபயதிசை
பல்லாண்டு சொலுமுழக்கும்
படிறவுண மாசுணக் குருமெனச் செவிபுகப்
பண்டுசூர் வென்றசதுரா
தினகரனை நிகர்சமர புரியிலுறை குமரவேள்
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. 1

குடமுழா வாணன்ஈ ராயிர கரங்கொண்டு
குமுகுமென வேமுழக்கக்
கொண்டலின் நிறக்கடவுள் முழவொலி முழக்கவிரி
கோகனக மாளிகையினன்
தடமருவு கைத்தாள நற்றேனி முழக்கஅந்
தமருகத் தொனிமுழக்கத்
தாரளி முழக்கமறை நூபுர முழக்கவிரு(து)
ஆள்கள்தா ளம்முழக்க
அடல்நதி யிரைக்கமணி யரவுக ளிரைக்கஉமை
அலறமுய லகன்நெளிவுற
ஆடக மணிச்சபையின் நாடகம் இழைத்துமைக்
கன்புசெயு மின்பவடிவோன்
திடமருவு குமரனே சமரபுரி முருகனே
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. ௮

ஆறுசம யக்கடவுள் வேறுவே றின்றியான்
ஒருவனே யங்கங்கிருந்
தன்பர்க்கு முத்திதரு வித்தெள் று யாவர்க்கும்
அறிவித்த வதனமணியே
வீரசுரர் துஞ்சவெஞ் சிறைவிண்டு வானவர்கள்
வின்வாகத் தமுதருந்த
வெற்றிமுர சன்றுனது சேனைவா ரிதியிடை
வியப்புற முழங்குமுறைபோல்
மாறுபடு காமாதி வெம்படைகள் துஞ்சிட
மலச்சிறை கழன்றுஞான
மாவின் ணகத்திருந் தானந்த அமுதெனது
வாய்மடுத் துண்ண அறிவில்

தேறுமறை நாதமென நினதுமுவ ரிக்கரச்
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. 3

கட்டைமுள் தழுவுதாள் நெட்டிதழ் முடுத்தசெங்
கமலநான் முகனகினமுங்
கவுத்துவ மணிப்பணியொ டம்போரு காடவி
கலித்தபச் சைப்பன்றியும்
மட்டுலவு சீர்பாதம் இன்றளவு கண்டிலா
வானவனு மோரொருவரை
வழுவருஞ் சரியாதி வருவித்து வீடுதரும்
வணைதமிழ்க் காழிமேவி
எட்டுணையும் அறிவரும் அனந்தசீ வரைவதுவை
என்றுபெய ரிட்டழைத்தங்
கிரும்புண்ட நீரில் திரும்பாத வீடுதரும்
இனியகவு ணியர்விளக்கே
திட்டமொடு வரமுதவு சமரபுரி முருகவேள்
சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே. 4

வெளியில்வளி யசைவற்று நின்றவா றமலஉளம்
மிளிர்பரத் திலயமாகி
மெய்த்தவ மிழைப்பவர்க் ககல்வான நதிநீர்
வியன்தொளைக் கரநிமிர்த்தங்
களியொடுங் கரிமொண்டு குண்டிகை நிறைப்பஅல
வற்பகைக் கவிகள்தாவி
அங்கற் பகக்கனி கொணர்ந்துவந் திக்கஅனு
தினமுமவ ரறையும்மறைநூல்

கிளிகள்பயி லக்ககன கந்தருவர் வந்தமுத
கீதநா தம்முழக்கும்
கிளர்சந்த னப்பொங்கர் மலிசாரல் கயிலையங்
கிரிவார வளங்கர்க்கும்
தெளிவுதரு சமரபுரி தனில்நிவவு குமரவேள்
சிறுபறை முழக்கியருளே
செற்கலப மயில்முதுகி னுதயசின் மயதூய
சிறுபறை முழக்கியருளே.

வேறு

புகர்படு தொண்டை கிமிர்த்துச் சிகிவாய்
பொருவக் கரிமதியிற்
பொங்கமு தள்ளிப் பிடிகளி பெருகப்
போழ்வாய் வழியூற்றி
மகவுடு தடவும் பொழில்படு முகில்வாய்
மணிநீர் திணிதரளம்
வாரி யிறைத்துக் கற்பக நற்குழை
மலர்நறை சொரிதரவே
நகர முறித்துக் கயமுனி பருவாய்
தந்தப் பிடிநுதலைத்
தைவந் தருகி லணைத்து மணத்திடு
சண்பக மலர் துயிலுங்
குகைபடு சாரற் போரூ ரிறையே
கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்தவ ளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. 6

அலைகடை முடைகது வியதளிர் வடிவத்
தாய்ச்சியர் மத்தொலியும்
அங்குட மடிமுலை விம்மிக் கன்றுவி
ஆன்நிரை கத்தொலியும்

கிளைபடு தொளைவழி விரல்விடு தொறுவர்கள்
கீதக் குழலொலியுங்
கேழ்செறி காலைக் கோழிகள் முறைமுறை
கிட்டிக் கூவொலியும்
விளைதரு தளவந் தளிபல விளரி
விளக்கிய சீரொலியும்
விடியற் காலைக் கடலைப் பொருவ
மிகுத்தெழு மாமுல்லைக்
குளமலி கண்ணன் தருபோ ரூரிறை
கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்தவ ளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. 7

கிளிமொழி புகல்வார் கீதம் பயில்வார்
கின்னரி வாசிப்பார்
கேழ்கலன் அணிவார் மாலைகள் புனைவார்
கிளர்மயில் நடமிடுவார்
அளிசுழல் பூம்பந் தெறிவார் குங்குமம்
அள்ளியி றைத்திடுவார்
ஆடவர் புயவணை மீதிற் றுயில்வார்
அழகுப ணிக்கருள்வார்
களிறிடை வருவார் சிவிகையில் வருவார்
கவனப் பரிவருவார்
காமன் இல் வருவார் மாமன் இல் வருவார்
கஞ்சன் இல் வந்தருள்வார்
குளிர்தமிழ் புனைவார் நிகழ்போ ரூரிறை
கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்தவ ளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. 8

உதடு கடந்த நெடும்பலும் உள்குழி
கணும்எக் கியவயிறும்
ஊரர வங்கள் நெளிந்திடு செவிகளும்
உளநெட் டைப்பலபேய்
கதமெரி வெம்பசி யற்றனம் என்று
களிப்பொடு கைகொட்டக்
ககனர்க் கரசிகல் அற்றனம் என்றணி
கடகத் தோள்கொட்ட
மதமலி யவுணரு ளம்பறை கொட்டிட
வானவர் நகரியெலாம்
மன்னிய வீரப் பேரிகை கொட்ட
மணிக்குடர் உதிரநிணங்
குதிகொளும் வெற்றிச் சத்தி தரித்தோய்
கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்தவ ளர்த்தவ
கொட்டுக சிறுபறையே. 9

வேறு

மரகத மணிக்குவடு தழைசிறை விரித்துரகன்
மணிமுடி நெளிக்கஇருமூ
வளமுள முடிப்பவள வரையினை யெடுத்துநட
மிடலென மயிற்பரியின்மேல்
அருள்விழி கொழிக்கமுக மதிநில வெறிக்கநினை
அடியவர் களிக்கவருவோய்
அமணர்கள் பிதற்றுகலை யலைகடல் முழக்கம்அற
அருமறை முழக்கமுறையே
இருமதுரை யிற்பெரிய நதிவிடு திருப்பதிகம்
எதிர்செல வெடுத்தபெருமான்
இருளென மலைக்கும்மல மறவுன தடிக்கமலம்
எனதுபுன் முடிக்கண்அருள்வோய்

செருவலி முழக்குநிசி சரர்கெட வுருத்தஇறை
சிறுபறை முழக்கியருளே
செழுமணி மதிற்சமர புரியிலுறை சிற்பரம
சிறுபறை முழக்கியருளே. 10

---

## 9. சிற்றிற் பருவம்

தேமாங் கனியின் அடுப்பமைத்துத்
திகழூன் கழிந்த வலம்புரியிற்
செந்தே னுலைப்பெய் தரவீன்ற
செழுமா மணிவெங் கனல்மூட்டிப்
பூமா தளையின் விதையரிசி
புகட்டிச் சமைத்துக் கதலிமடற்
பொங்கப் பிழியும் அதன்கனியும்
பொருந்த அளவிக் கறியட்டுக்
காமா தவிப்பூம் பந்தரிடைக்
கயற்கண் ஆயம் இழைத்த வண்டல்
கருதும் புவன கோடியெலாங்
கரந்தும் படைத்துங் காக்குமொரு
சீமான் உனக்கோ ரிலக்கோசொல்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 1

அங்கைத் தலத்திற் குண்டகழ்நீர்
அடக்கு முனிவர் ஏறனையான்
அகத்தின் ஞான விளக்கேற்றும்
அடிகேள் பவள விளக்கவியேல்
செங்கண் திரள்மெய் யுடையோற்குச்
செழுங்கற் பகத்தின் நிழல்தருவோய்
செந்தேன் துளிக்குங் குருந்தநிழல்
தீக்கேல் மேன்மேற் புடைத்தெழுந்த

கொங்கைச் சுமையோ டருங்களபங்
கூடச் சுமந்து வாடுமிடைக்
கொம்பர் அரம்பை மடமகளிர்
குலவச் சிதையா வீடளித்தோய்
திங்கட் கிரண நித்திலப்பூஞ்
சிற்றில் சிதையேல் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 2

விதையாயிருக்கும் ஐந்தெழுத்தும் வேதாகமமும்முத்தமிழும்
விளங்குஞ் சரியா திகணான்கும் விருமியமெய்ச் சிவபதமுஞ்
சிதையா தரிக்குந் திருநீறுஞ் சோதி நயனத் திருமணியுந்
நகன்றீர்பத்திவிதிநெறியின்தொடர்புஞ்செடிநீர்மெய்யடியார்
இதையாலயத்தைப் பிரியாக்கிருள் தீர் ஞானமணிவிளக்கும்
இலங்கு மவுனந் துளும்பாத இன்பவளனுஞ் சந்ததம்முன்
சிதையாதளிக்குமோரிறையே சிறியேஞ்சிற்றில்சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 3

மறையின் சிரமெய் வாச்சியமும்
மருவுங் கருவி யாரூறின்
வயங்கு முடியிற் பேரருளும்
வானோர் முடியின் நறுந்தொடையுங்
கறைகொள் மிடற்றோன் திருப்புயத்துக்
கடியா ரிதழிச் செந்தாருங்
கவுரி கருணை நறவுபொழி
கண்ணென் கமலத் தண்மலரும்
அறையுந் தணிகை மலைச்சுனைக்குள்
அலரும் மலரும் மணக்குமுன
தருஞ்சீ ரடிசிற் றிலிற்புழுதி
அளவி மணப்பத் தகுமோதான்

சிறைவண் டோகைக் கிறையோனே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 4

அடியார் நிமலத் திருவகத்துள்
அன்பு பொறுமை யவாவறுத்தல்
அடுப்பாங் கமைத்து மலக்காட்டத்
ததிக ஞானக் கனல்மூட்டி
மடியா திருந்த வுயிர்க்கலசம்
வழிய அருட்பே ருலைவார்த்து
மாறுப் பெருமைச் சிவானந்த
மதுரச் சோறு திளைப்பொங்கி
விடியாச் சீவ போதஇருள்
வீய மவுனச் சுடர்விளக்கு
விளக்கி யிருந்த படியிருந்து
மேலாஞ் சிற்றில் விளையாடுஞ்
செடிதீ ரகத்தோர் புகழ்வாலை
சிறுவா சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 5

ஆறு வதன தாமரைகள்
அலரு மதுரச் சுவைமடுவே
அடியார் இதய தாமரையுள்
அரும்பி மாறுப் பரிமளமே
வீறும் அமரர் கணஞ்சூழ்ந்து
வியப்ப மூனைத்த முழுமதியே
வெவ்வா ளவுணக் கருங்கடலை
விழுங்கி யெழுந்த வடவனலே

மாறு படுபுன் சமயவன
 மலைத்து முறித்த மதகளிறே
 மாயாப் பிறவிக் கனலவிய
 வளருங் கருணை பொழிகாரே
தேறு முயிருட் பூரணமே
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே
 தேரூர் வீதிப் போரூரா
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 6

கரியின் கோடும் அகில்திரளுங்
 கடிச்சந் தனமுங் கழைமணியுங்
 கடுவூற் றிருந்த தொளையெயிற்றுக்
 கடுங்கண் அரவின் முழுமணியும்
விரியுந் தரங்கக் கரங்கள்கொடு
 விரவிக் கொழித்து நிலங்கிழித்து
 வேலை புகுதப் பாதலத்தில்
 மிளிரும் இராச வுரகபடம்
பரியும் மணிகள் நீர்கதுவல்
 பரிதி யுருவம் பலஎடுத்துப்
 பரமா னந்தக் கடல்படிவான்
 பரிந்து மூழ்கித் தவஞ்செயல்போல்
தெரியும் பாலித் திருநாடா
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே
 தேரூர் வீதிப் போரூரா
 சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 7

தருவிற் படரும் வல்லியெனத்
 தருமா டவரை மடவார்கள்
 தழுவப் புயத்தின் மலைக்கோடு
 தைப்பத் தெரியல் முகையுடைந்து

முருகுற் றெழுந்து துகில்நனைக்கும்
முரிச் சுதைமா ளிகையிழைத்த
முதிரும் பதும ராகவொளி
முழுமீன் திகழும் அகல்வானப்
பருநித் திலவெண் பந்தருக்குப்
பவள நெடுங்கால் பலநாட்டும்
பண்பா மதியம் பந்தர்நடுப்
பால்வெண் தரளப் புஞ்சமெனத்
தெரியும் பாலித் திருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 8

கமலக் களைசெந் நெலிற்களையுங்
கடைச்சி மகளிர் வளையொலியாற்
கயல்போய்க் கரும்பை வளைத்தொடிப்பக்
கவித்த கொழுஞ்சா றொழுகுவழித்
தமரக் களிவண் டொழுங்கேறல்
சம்ப ராரி நாணேற்றுந்
தனுவைப் பொருவ மலரோடை
தருக்கு மவன்தூ ணியைநிகர்ப்ப
நிமலக் கமுகின் கூடப்பணில
நிலவுக் கவிகை தனையேய்ப்ப
நெடுமா ளிகையின் மகளிர்அவன்
நேரும் ஞாயிற் படையேய்க்குந்
திமிலப் பாலித் திருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 9

அருணன் தபனஞ் செவ்விளநீர்
அகற்றப் பசும்பொற் புரவியினைப்
பரும்பும் பொதும்பில் துயில்முகில்நீர்
ஆற்றக் கமுகு குடைநிழற்றக்
கருவின் இருந்து நிமிர்ந்துதலை
கவிழ்க்குஞ் சாலிக் கதிர்கற்றைக்
கவரி மருங்கின் காலசைப்பக்
கடிச்சண் பகங்கள் மணம்வீசத்
தருண வாழை யாலவட்டஞ்
சந்தப் பொதியக் காலெறியத்
தரணி யிதயங் களிசிறப்பத்
தயங்கு மணித்தேர் மெலச்செலுத்துந்
திருவெண் பாலிச் செழுநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 10

---

## 10. சிறுதேர்ப் பருவம்

மதுகரம் புக்கிடற விரைநறுங் குறியமுகை
வாய்விண்டு மடல்மடக்கி
மதுமாரி பொழிகின்ற தொங்கல்ஆ கண்டலன்
வயத்தொடுந் தேருருட்ட
விதுகரமும் மட்கவோ ராயிர கரங்கொண்டு
வேலையிருள் அள்ளியுண்டு
வெற்பின்முடி யெழுகடவுள் சூர்மகற் கஞ்சாது
வியன்மணித் தேருருட்டக்
கதமெரிச் செங்குஞ்சி வெண்பற் பசுங்கட்
கரும்பேய்கள் அவுணருடலக்
கார்வரை யுருட்டமால் அட்டதிசை தனதானை
கைக்கொள்சக் கரமுருட்டச்

சிதைதரு பெருந்தே ருருட்டுபோ ரூரிறைவ
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 1

மறுகுவெளி யெறியுங் கடுஞ்சிறைப் புலிநக
வளைத்துண்ட வெண்டலைச்செம்
மாமுது குடைக்கருடன் மீதிவர்ந் தொளிபெருகு
மரகத நிறக்கடவுளும்
முறுகெரி கடுக்குஞ்சி கைப்பவள வாய்வெண்மை
மொய்த்தசிறை விள்ளாஅடி
மூதோதி மத்திவர்ந் தாரண முழக்குநா
முண்டக மனைக்கடவுளுங்
குறுகியிரு புறனும்வர நடுஇடைப் பைஞ்சிறைக்
குரகதங் கடவியடியார்
குறைகளைந் தாறுமதி வதனவழி கருணைபொழி
கொண்டலே யண்டர்அரசே
சிறுகிடைப் பெருமுலைத் தேவகுஞ் சரிகணவ
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 2

பாததிகி ரியுமெலும் புப்பெரும் பலகையும்
பகர்நாடி யுருவாணியும்
பரியமரு மத்தட்டும் அரியசீர்க் கூவிரம்
படிறுசெறி பொறியாடியுங்
காதல்தரு குஞ்சிக்கொ டிஞ்சியும் பலமொழி
கவித்தபல் லியராசியுங்
கணமொடு மலிந்தவுட லெனவுரை தரும்பெரிய
கடுவேக முடையநானு

பேதமுறு தேர்கள்மீ தாருயிர்ப் பிளையைப்
பிறங்கிட விருத்திவெற்றிப்
பேசரு மனப்புரவி கட்டிவினை வடவழிப்
பெருமநின் னருள்வலவனால்
நீதற நடத்திடச் செய்தகும ரேசனே
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 3

உலகினொடு சரஅசர மெவையுமாய் ஒன்றினொடும்
ஒருபற் றிலாதபொருளாய்
உறுமறிவை யறிவிடத் தெழுகின்ற சிற்றிசைவில்
உயிருலகு மயவில்பரமும்
இலகுமவை யெங்ஙன மெனிற்கருதும் அறிவொன்ற
தெழுநினைவு சுட்டுபொருளென்
றிவையோ ரிரண்டையும் இணைத்தும் பிரித்தும்
இயக்கிவரு பொருளொன்றுமாங்
கலகமுறும் அந்தநிலை வின்றுகின் முப்பொருளு
மின்றுபர கதியுமிதுவே
காணென்று கடையேனை வாவென்று முடிமீது
கஞ்சமல ரடிதரித்தென்
சிலைமனங் கனிசெய்த குமரசற் குரவனே
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 4

ஒருபொரு ளிடத்தினிற் சச்சிதா னந்தமுடன்
உருவநா மமுமுள்ளதென்
றுரைதந்து முன்னர்பின ருண்டாய் விளங்கியுறு
பிரியமா யுளமூன்றுமே

மருளிரிய வருமெய்ம்மை யுருவநா மம்பொய்ம்மை
வன்பழுதை யுரகவுருவின்
மாறு தறிந்திடுதி பின்பழுதை நன்று
மதித்தவர்க் கரவின்மையின்
இருளறும் பிரமமே நிகழுமற் றொருபொருளும்
எதிரிட் டிலங்காதென
ஏழ்பிறவி வாரிதியி லாழுமெனை வாவென்
றெடுத்தருள் அளித்தகுரவா
தெருளுறுங் கலைமுனிவர் பரவுபோ ரூர்முருக
சிறுதே ருருட்டியருளே
சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி
சிறுதே ருருட்டியருளே. 5

வேறு

வடவைக் கனலென வுதரக் கனல்மிக
மண்டப் பசிவிஞ்சி
மண்டையின் மூளையை யளையென முதுபேய்
வாரி விழுங்கஅதின்
புடையிற் சிறுபேய் கெஞ்சிக் கெஞ்சிப்
பொருமி யழத்தேர்கள்
புணரிக் கலனிற் குருதிக் கடலிற்
போகக் காகநிற
மிடறற் றுடு கவந்தக் குழுவினை
விரிதலை முதுகூளி
வெங்கள நாடக சாலையி லாட்ட
வெகுண்டெழும் அவுணர்கணத்
துடலைக் கறியின் அரைத்தெழு தேரன்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 6

கவைதரு குறுமுள் தாள்ஞெண் டருகுறு
கண்டற் கரியெயிறு
காணென வெண்முகை யுண்டாய் விண்டது
நாலுந் துகளள்ளி
நவையறு பெடைஞெண் டுக்குத விப்பகல்
நள்ளிருள் அளைமனைவாய்
நண்புறும் அஃதொடு புக்குக் கொண்டல்
நறுங்குறு துளிவீசத்
தவநனி குளிரான் உளையக் கடல்தன்
தண்திரை வண்கையால்
தரளக் கதவும் பவளக் கதவுந்
தந்தம் மனைமூடும்
உவமையில் நெய்தற் போரு ரிறைவன்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 7

பசுமைப் புல்லிச் செந்நிற வல்லிப்
பங்கே ருகமீதும்
பால்பாய் தாரு டடுக்கும் மடல்குலை
பரியுங் கதலியினும்
நசையுற் றிடுகள் தேறல் பானை
நறும்பூ கத்திடையும்
நவைதீர் ஈர்வாள் நெட்டிலை முண்டக
நகுவெண் துணர்தோறுந்
திசையுற் றருமணம் வீசுபுன் னைகஞ்
செறிபுளி னத்திடையுஞ்
சினைவளை மதியமு தத்திரள் சிந்துஞ்
செய்தியின் மணிசொரியும்

உசிதக் கல்வியர் சூழ்போ ரூரன்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 8

தரளவெண் மணியுஞ் சங்குந் துகிருந்
தடவாள் வாய்முரனும்
தண்திரை யெறியும் வண் கட லிடையே
தந்திக் கனகோடு
நரை தரு கவரியும் நாவியும் அகிலும்
நற்சந் தக்குறடும்
நாடரு திரையால் உந்திப் பலநதி
நண்ணுறல் பண்ணுறவே
இருநில முழுதா ளரையர்க் கங்கங்
கெய்திய நிருபரெலாம்
ஏர்திறை யிட்டங் கவனு ளடங்கி
இருந்திடு முறைமானும்
உருமலி நெய்தற் போரு ரிறைவன்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே.

வடவரை யோரா யிரமுழை தோறும்
வருங்கொடி மினலெனவே
வாடரு கவர்நா நீள விதிர்த்திடு
மாசுண ராசனையே
கடகரி யெட்டுஞ் சென்னி கவிழ்த்துக்
கால்கள் மடித்திடவெங்
கடுவே கத்துட னேடிக் குத்திக்
கதிர்செறி புஞ்சமெனப்

படமுடி தாழ எடுத்துத றிப்பர
தத்தின் நடித்திடுமோர்
பருமயில் கடவும் பவளக் குன்றே
பால சமுத்திரமே
உடலுறு முயிர்கட் கினிதரு ளமுதம்
உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற் கருமைக் குமரன்
உருட்டுக சிறுதேரே. 10

ஆ ௧0௧

---

# 11. அலங்காரம்

—: ★ :—

காப்பு

முக்கட் பவள மலைவந்த தேனை முராரிதங்கை
பக்கத் தெடுக்கும் பரிமளப் பூவைப் பருமயிலோற்
கொக்கத் துணைவந்த வுத்தம தேவை யுயர்பொருளைச்
செக்கச் சிவந்தநன் மால்யானை யைச்சிந்தைசேர்க்குதுமே.

நூல்

பூமேவு நாபனும் நான்முகத் தோனும் புரந்தரனுந்
தாமேவு வாழ்வும் அதிகார மும்பெறத் தார்புனைந்த
கோமேவுவேல்கொண் டவுணரை மாய்த்த குமரனெங்கோன்
தூமேவு தாள்மலர் போரூரி லென்முடி சூடினனே. 1

தெய்வப் பிடிவந்து சேருந் துகிர்க்கிரி செந்தளிர்போல்
மெய்வைத்த வள்ளிக் கொடிபடர் தாரு வியனுலகிற்
சைவப் பயிரை வளர்க்குந்தண் மேகந் தகைமைசெறி
செய்வைத்த வேல்கொண்டு போரூரி லென் றம்கெழ்தெய்வமே.

கருதார் புரங்கொன்ற சேவக னூர்க்குங் களிப்புறவே
ஒருதா ரகப்பொரு ளோதிய வாவுன தன்பரைப்போல்
தருதா ரணிசொலும் நாயேனும் அன்புளந் தானுளனோ
விருதாசெஞ் சேவற் சமரா புரிவரு வேலவனே. 3

சிற்றறி வொன்று நினைப்போடு நித்திரை சேர்ந்தியங்கு
மற்றிவை நீங்கி லதுதா னெவைகளு மாகிநின்ற
அற்றமில் பேரறி வூடே கலந்திடு மாயவிதே
பற்றறு முத்தியென் றுன்சம ராபுரிப் பண்ணவனே. 4

எல்லார்க்கு மேலவன் நீயென் றறிந்துனை யேத்தியன்பாய்ப்
பொல்லாக் கருமலந் தீர்ந்தான் பொதியப் புகழ்முனிவன்
சொல்லாற் புனைதொல் நக்கீரன் சாத்தித் துனிகடந்தான்
நல்லார்க்கு நல்லவ னேசம ராபுரி நாயகனே. 5

தோட்குங் குமரக்குங் கோக்குழை மாதர்க்குந் தொல்லைமத
வேட்கும் உளங்குலைந் தேனைவி டேல்விண்டு மாமலர்க்கை
வாட்குங் கொடிய மருப்பார் மகிடன் வலைப்பிலுரு
தாட்கொண் டருளுகண் டாய்போரி வாழும் மயிலவனே. 6

அண்டஞ் சராசரம் எண்திசை யாவும் அளித்தவளுங்
கண்டங் கரிய சிவனுந் தமஅங்க ரங்களின்மேல்
மண்டன்பின் ஏந்தி முறைமுறை தந்து மகிழ்மதலாய்
தொண்டன் பெனக்கு முளதோதென் போரிச் சுராபதியே.

கொங்கணர் ஆரியர் ஒட்டியர் கோசலர் குச்சரராஞ்
சிங்களர் சோனகர் வங்காளர் ஈழர் தெலுங்கர்கொங்கர்
அங்கர் கலிங்கர்கன் னடர் துருக்க ரனைவருமே
தங்கள்தங் கட்கிறை நீயென்பர் போரிச் சரவணனே. 8

மான்கூட் டிறைச்சிசெந் தேன்தோய்த் தருந்தும் வன சரர்மான், கூன்கோட் டிளம்பிறை நெற்றிக்கும் வேலிணைக் கூர்விழிக்குங், கான்கூட்ட மாமலர்க் கூந்தற்குங் கொங்கைக்குங் காதல்கொண்டோன், தேன்கூட்டம் வாழ் பொழிற் போரூர னென்குரு தேசிகனே. 9

கோக்குஞ் சரமத னாற்றந் தவிர்த்துக் குலநரந்தந்
தேக்கும் புழுகு மணம்வீசும் போரியெர் தேவன்செவ்வேள்
நோக்கும் விழியருள் போக்கும் பிணியினை நூபுரத்தாள்
காக்கும் பவம்புக வொட்டா தெமக்கென் கவலைநெஞ்சே

ஆயன் குழலிசை கேட்கும் பணாமுடி யாடரவம்
வாயையங் காந்து மணிகா லுதல்வள்ளல் பாடல்கொண்டு
தூய கொடைகொடுத் தாங்குறும் போரிச் சுராதிபனை
நாயக னைக்கும ரேசனை நாடுவர் ஞானிகளே. 11

இடமுறச் சூழும் முழைதோறும் நாகம் எரிபுரையும்
படமணிச் சென்னி யெடுத்தாள்தன் மங்கலப் பந்தரிலே
சுடர்மணித் தண்டினைச் சூழ விளக்கிட்ட சோதியொக்கும்
தடவரைப்போரிச் சரவண நாயகன் தஞ்செனக்கே. 12

பிடிபார்த் தலற எயினச் சிறார்கள் பிரிந்தகன்றைக்
கொடியாற் பிணித்ததன் மேலேறி பாடுங் குளிர்பொழில்சூழ்
அடிவாரப் போரிப் பதிவே லவனைவந் தண்டினனென்
குடியார்க்கு நல்ல கதிவாய்த்த தென்றனைக் கொண்டனனே. 13

தோகை நடித்திட வேடச் சிறாருழைத் தோற்பறையை
நாகப் பறித்துலர் வாகைநெற் றாற்கொட்ட நாடியளி
ஓகை தரும்பண் ணிசைபாடுஞ் சந்தன வொண்பொழில்சூழ்
மாகர் தொழுந்திருப் போரூரன் தாளென் மதிவிழியே. 14

மேகங்கள் சூற்கொண்டு சாரற் படிந்து மிகக்குமுற
நாகங்கள் கோடிறப் பாயத் தெறித்த நகைத்தரள
மோகந் தருங்குற மின்னார்கள் மேலுற மொய்த்தெதிர்பார்த்
தாகந் தடவிய போரூர்க் குகனென் னருட்டந்தையே. 15

வரைமுத் தொளிரும் பளிக்கா டரங்கின் மயில்நடித்தல்
புரையில் சசிமண் டலத்தாடல் மாதர் புரிவதொக்கும்
விரவுற்ற சாரலம் போரூர் விசாகன் விரைமலர்த்தாள்
உரையற் றுணர்வற் றுயரின்ப மாகிய வுள்ளொளியே. 16

பளிக்கறை யூடு தருக்குழைப் பாயலிற் பள்ளிகொண்டே
களிக்குறு மாகந் தருவார்தங் கீதமுங் காரையினால்
விளக்குறு மேனிலத் தோகையர் கீதமும் வேறறவே
விளக்க லுறார்திருப் போரூரன் அன்பர்தங் கேண்மையனே. 17

கருநாகத் தொண்டைக் கயமுனிக் கூட்டங்கள் கல்லுச்சில்லுப்
பொருநாசிக் கேழ லுடனாடுஞ் சாரலம் போரிச்செவ்வேள்
இருபாத தாமரை யேத்தி வணங்கியென் நாளுநினைந்
தொருவா திருந்திலை நெஞ்சேயென் வீணி லுழன்றனையே. 18

அகிலேந்து நல்ல முகிலேய்ந்த கூந்தல் அரிவையர்தம்
நகிலேந்தும் ஆர வடம்போல் அருவி நகந்திகழும்
முகிலேந்தும் மாடநம் போரூர்க் குகன்பத முண்டகத்தைத்
தகிலேந்து நெஞ்சினர் மேல்மத வேளெய்யத் தானஞ்சுமே. 19

மதுவார்த் திடுகடம் போலே மயக்குறு மாதரையோர்
கொதுகாக் கருதுறுங் காலமுண் டோர்கொடி யேன்றனக்கே
விதுவாற் சலந்தருங் கற்சுனை யூடு விளங்குபிடி
சதுராக் குடைந்து விளையாடும் போரிச் சரவணனே. 20

அள்ளித் தெளித்தன்ன கள்ளிவெந் நீழ லணுகுழைதான்
நள்ளிப் புனலெனப் பேய்த்தேரை நாடி நலிவதுபோல்
உள்ளிப்பொய் வாழ்வினை யூர்தொறுஞ் சென்றுழலாதெனையாள்
வெள்ளிப் பொருப்பினன் மைந்தாதென் போரியில் வேலவனே.

முடைமாற முல்லை குழல்சூடும் ஆய்ச்சியர் முதலைதான்
கடைதோறும் ஆரத்தின் மார்பில் தெறித்திடக் கன்றதுள்ளும்
புடைபாய் உழுவை குமுறமென் றிங்கிலப் போரியெங்கோன்
படைவேல் துணையுண் டெமக்கொரு நாளும் பயமில்லையே.

பூவையுங் கோவும் அசுணமும் நாகமும் பூம்பொறிக்கான்
சேவலுஞ் சித்திரம் போற்கேட் டுறங்கச் சிறார்ப்பொதுவர்
தூவருந் தீங்குழ லோசை வளர்க்கின்ற தொல்லைமுல்லைத்
தேவருந் தேடும் பொருள்போரி வேலன் திருவடியே. 23

கட்டான் சிரம்பி யகவிதழ் கீண்டெழு கஞ்சமுடன்
முட்டா டுவைத்திட மேதி தெறித்தொளிர் முத்தையன்னப்
புட்டான் சினையென்ற லைக்கின்ற போரிப் புனிதச்செவ்வேள்
மட்டாருஞ் சேவடி தொட்டா லெமக்குநல் வாழ்வுளமே.

மடுப்ப மயக்கிடை சொண்டேகு நெஞ்சினை மாற்றியென்னை
எடுப்ப துனக்குக் கடனைய னேயெழில் கூர்பழனத்
துடுப்பு முகக்கொழுச் செல்கின்ற சீதையி லூறியநீர்
கடுப்ப வனசப் பிழியூறும் போரியன் காங்கெயனே. 25

பச்சைக் குடைதிருப் புந்தகைப் பாசடை யூடுருவ
மெச்சக் கடைசியர் சேல்பாயும் போரி விசாகனெங்கோன்
கொச்சைச் சிறியனை யிந்நாளும் பண்ணிய கோகனகத்
தச்சற் கினியெனைப் பண்ணக் கொடானிது சத்தியமே.

விருந்தண்டு பின்னைக் குபசாரஞ் செய்யும் விதத்தினைத்துப்
பொருர்தஞ் சரோருகத் தேனுண்டு முத்தமிழ் போரியிலோர்
மருந்துண்ட தன்பெயர் செவ்வே ளஃதென் மலப்பிணியுந்
திருந்து முடற்பிணி தன்னையும் போக்கிடுஞ் சித்தமிதே.

தண்டா மரையில் அளப்பே டுறவது தன்னருகே
வெண்டா மரையிரண் டாலுதல் வாணிக்கு வெண்கவரி
கொண்டார வீசுதல் போலுறும் போரிக் குகனிருதாள்
கண்டாலும் இன்பக் கடல்வந்து கோக்குங்கருத்தினையே.

உண்டுமின் டக்கஞ்சம் விண்டதண் தேன்சிந்த வால்வளைகள்
கண்டயின் றின்புறும் போரூர் முருகன் கழலிணைக்கே
தொண்டவர் தின்புற வோர்பாத தாமரைத் தூளென்சென்னி
கொண்டுவந் தேன்மலம் விண்டேன் பரகதி கூடினனே.

கன்னிய ராடிக் கழித்தகத் தூரி கயல்மணக்கும்
மன்னிய வாவி திகழ்சம ராபுரி மாமயிலோன்
பொன்னியல் மின்னினித் தாளையுந்தோளையும்போற்றவையேல்
உன்னிய யாவு முறுநெஞ்சமேயுண்மை யுண்மையிதே. 30

வள்ளைக் கொடிச்செவி சைவலக் கூந்தல் வனசமுகந்
தெள்ளூற்ற நீலக்கண் ணம்பற்செவ் வாய்திக ழுந்திகிரிப்
புள்ளுக் குயமன்னப் பேட்டு நடையுடைப் பொய்கைமங்கை
நள்ளத் திகழ்கின்ற போரூர் விசாகனை நாடுள்ளமே. 31

கருப்புத் திரளை யறுத்துச் செறித்த கனைசகட
மருப்புப் பகட்டைக் கழையால் உழவர்கள் மாறுதொறும்
விருப்புற்ற முத்துத் தெறித்தொளிர் சாளர வீடுபுகுந்
திருப்பெற்ற போரிக் குகன்தா ளறிஞர்க்குத் தித்திக்குமே.

கரண்டம் அடிக்கடி நீர்மூழ்கி யாங்குக் கயலெடுத்தே
மருண்டமென் னேக்கியர் முன்காட்டல்நுங்கண்மலர் விழிக்கு
வெருண்ட கயலன் றிதுபார்மி னென்று விளம்பலொக்குந்
தெருண்டவர் சூழ்திருப் போரூரின் தேவர் சிரோமணியே.

காளைச் சலப்பெயர் நாயின மூழ்கக் கயமடுவில்
ஆளைப் பகட்டுறும் வாளைப் பகட்டினம் அம்பினிற்போய்ப்
பாளைக் கமுகின் மிடறறப் பாய்ந்துநெற் பண்ணைபுகுங்
கேளொத்த போரிக் குகனன்ப ரேயென் கிளைஞர்களே.

கருக்கடல் நாயடி யேன்புகு தாவகை காத்துமுத்திப், பெருக்குறு மின்பத் திருத்துகண் டாய்பெரு நீர்க்கரை யின், வருக்கை வெடித்தெழு செஞ்சாற்றுச் சேற்றில் வழுக்கிநத்துக், குருக்கொளும் முத்துமிழ் போரூர்ச் சடானனக் கோக்கொண்டலே. 35

வீட்டின்ப நாடி யிருப்போர் தமக்கும் விடயசுக
நாட்டங்கொண் டாங்கவர் போலிருப் போர்க்கும் நலனுறவே
காட்டும் உவமைய தாக்கொக்கு நீர்மடைக் கண்ணிலகுந்
தீட்டும் புகழ்கொண்ட போரூரன் வேல்சுரர் தேவதையே.

வாவிக் கரைக்கமு கேய்கொக்கு நீழல் வயங்குதெண்ணீர்
தாவிக் கயலதைக் கண்டே வெருவுதல் தன்கனவின்
மேவுற்ற காட்சி நனவிற்கண் டானின் விளங்கலுறும்
பூவிற் றிருத்திகழ் போரூர்க் குகன்பதம் போற்றுள்ளமே.

பச்சை நிறத்த நிறைநீர்க் குடங்கள் பலசுமந்தே
உச்சியி லுற்ற கதிரோனுக் கீயு முயர்ந்துளதெங்
கெச்ச மறச்செறி போரூர்ச்செவ் வேலை யிறைஞ்சிநினைப்
பிச்சனெஞ் சேயடு கின்றனன் பாரென்பிர தாபத்தையே.

சாறூற் றெழுந்து கணுவுடைத் தோடுந் தழைக்கரும்பை
விறேற்று வாழைக் குலையொடு மாசினி வீழ்ந்தொடித்துச்
சேருக் கியவயற் போரூர் முருகன்நந் தீதகற்றிப்
பேருக் கருணைசெய் தேநெஞ்ச மேதரும் பேரின்பமே. 39

பவளக் கொடியிற் பிணித்தூசல் புன்னையிற் பார்வைமயற்
குவளைக்கண் கற்கு மடமாத ராடவக் கோடரும்பைத்
தவளத் தரள மழைபோ லவர்மெய் தனிற்சொரியுந்
திவளுற்ற போரிக் குமரேசன் என்குல தேவதையே. 0

வல்லைத் துரந்த முலைநுனை மாதர் வளையெறியப்
பல்லைத் திறந்துறு மிக்கவி தாலப் பழமிருக்கு
தொல்லைத் திருத்திகழ் போரூர்க் குகன்பதஞ் சூடும்சென்னிக்
கில்லைப் பிரமன் துயருறக் கீறும் எழுத்துக்களே. 41

காடைக் கொதுங்கிடப் பார்ப்புகள் வெள்ளை வனசங்கள்மேல்
தேடிப் பெடையனந் தன்பா லளைத்துறை நீதில் நெய்தல்
நீடத் திகழ்கின்ற போரூர் விசாகன் நிமலபதம்
நாடிக் களிப்பவர்க் குண்டோ துயரெனும் நாமங்களே.42

செக்கர்க் கிடையின் உடுக்கூட்ட மென்னத் திரைகளினால்
தொக்கப் படுந்துகிர் வண்டலின் மீது சுரிமுகங்கள்
கக்கப் படுமுத் தொளிருந்தென் போரியிற் காங்கெயனைப்
பக்கத் துடன்பணி வாரவ ரேசுக பாரணரே. 43

வண்டனை யாகொண்டு கண்ணாகும் பூங்குழல் மாதரையே
கண்டனை யாயினுங் காலமுண் டோகடை யேன்றனக்கே
ஞெண்டினங் கேதகைத் தாதரித் துணைடறல் நீடுபொய்கைத்
தண்டுறை ஞெண்டுடன் ஆடிடும் போரிச் சரவணனே.44

சந்திர காந்த மணிமாடத் தூடுதன் சாயைகண்டோர்
பைந்தொடி மாது தலைவனை டுடப் பரிந்தவனே
சுந்தர ஆடி நிழற்காட்டி யின்புறு சொற்புகலுஞ்
செந்திருப் போரிக் குகனைக்கண் டார்க்குணடு சித்திகளே. 45

ஏதங் கருதினர் செல்மினென் றேயும் இதங்கருதும்
போதஞ் சிறந்தவர் வம்மினென் றேயும் புகல்வனபோல்
வாதஞ் செறியக்கொடியாடும் போரி வரதன் தண்டை
நாதங்கள் யோகியர் யோகினிற் காண்குறு நாதங்களே.

தேரூர் இரவி வலவன்கை மீது செழுங்கொடிகள்
ஏராகத் தாக்குத லெங்கோன் அயிலொளிக் கெய்துமுன்கோல்
நேரோசொல் நில்லென்று போரூர்கைக் கொணடு நிறுத்தலொக்
சீருரும் இங்க ரேகயி லாயந் தெளிந்தவர்க்கே. [குஞ்

மனப்பரி சோர இறுமாந்து நாவி மதம்பொழியுந்
தனக்களிற் றன்ன முருகா குகாஎன்று தானுரைப்பப்
புனக்கிளி கற்கின்ற போரூர் இறையைப் புகழ்ந்தவரைச்
சினக்கனல் காமக் கனலும்விட் டோடுந் திசைப்புறனே.

மதிகொண்ட பூச்சக்ர வாளக் குடையின் வருநிழற்கீழ்த்
துதிகொண்ட யானைப் பிடர்மேல் வருமச் சுகந்தனிலும்
நதிகொண்ட பேரன்பி னற்போரி வேலனை நண்ணியின்பக்
கதிகொண்ட மேலவர் கால்தலை தாங்கல் கனசுகமே. 49

அளகா புரியன்ன பட்டணத் தேசுதை யால்வனைந்த
களவார் முகில்படி மாடத்தி னூடு களித்தலினும்
புளகா டவியெழ மெய்ப்போரி வேலனைப் போற்றியுய்வார்
வளவார் புறந்திண்ணை வைகுத லேதமில் மாசுகமே. 50

உள்ளக் கவலை யெலாமொழிந் தேன்ஒழி யாதுசெய்யுங்
கள்ளக் கருமங்கள் யாவும்விண் டேன்கலை வாணியுடன்
வள்ளக் கமல மலர்மாது தந்தருள் வாழ்வடைந்தேன்
தெள்ளத் தெளிந்தனன் போரூர் முருகனைச் சேவைசெய்தே.

பூதர விற்கொண் டவுணரை மாய்த்த புராரிமைந்தன்
ஆதர வாலணிப் போரு ரிருந்திங் கவனருளாற்
சீதரன் நன்மரு காமுரு காஎன்று செப்பினன்பின்
தாதரம் போலுறுந் தீவினை யாவுந் தணந்தனவே. 52

வட்டாடல் போலப் பிறப்பதுஞ் சாவது மாக்கியென்றும்
ஒட்டாரஞ் செய்கின்ற மாயை புணர்த்தும் உரைவொட்டா
தட்டாவ தானஞ்செயுஞ்சீ வரைப்பொய்மை யாயிருத்தும்
கட்டாணி யானமுத் தேசம ராபுரிக் காங்கெயனே. 53

ஆள்வேட்டம் ஆடும் அயில்விழி மாதர் அமைகடந்த
தாள்வேட்ட புன்னெஞ்ச மேயதி சீவரைச் சூழ்ந்துகொண்டே
வேள்வேட்டம் ஆடுவ தாங்கேகல் போரி விசாகன் இரு
தாள்வேட்டு நாடுதி மேல்வீட்டின் இன்பந் தழைத்துறுமே.

ஆறு சமயருந் தம்மிலொவ் வாதிங் கலைவதென்னே
தேறும் அறிவின ரெல்லாம் அறிந்துந் தெளிந்திலரே
பேறு தருந்தெய்வம் யாவைக்கும் யான்பெருந் தேவனென்றே
வீறு முகங்கொண்டு போரூர் முருகன் விளங்கியதே. 55

மற்றவர் நிற்கமெய்ஞ் ஞானிகள் வம்மின் வகுத்துரைக்கேன்
உற்றது கேண்மினெம் போரூர் முருகன் உயர்கதியை
நற்றமிழ்க் காழிவந் தெண்ணிலி யோர்க்கு நயந்தளித்தான்
கொற்றம் அவனதல் லாலெவர்க் குண்டினிக் கூறுமினே.

சரும்பாற்செய் வேலி சரும்பார்க்கும் போரியங் காங்கெயன்
திரும்பாச் சுகந்தரு வீடீவ தற்குஞ் சிறப்புடனே [போல்
பெரும்பாற் றிருத்தரு பெற்றிக்குந் தேவர் பிறரிலையென்
றரும்பாற் கடற்றயின் றோன்செய்யி னூடுகை யிட்டனனே. 57

வேதனெங் கேயவன் தாதையெங் கேவிண்ணின் மன்னுபுரு
கூதனெங் கேமிகு தேவரெங் கேகுறை யாததவப்
போதரெங் கேயற மாதியெங் கேதிருப் போரியில்வாழ்
நாதனெங் கோனவ ரைப்போலச் சூரையும் நாடிடிலே. 58

திருநீல கண்டம்வெந் தீவினை தீண்டப் பெறுஎனவே
கருநீல கண்டனைப் பாடி யடியரைக் காத்தவன்எம்
உருமே லிருந்த பிணியையும் மாற்றுவன் உண்மைநெஞ்சே
இருநீல வாவிநம் போரூ ரனைப்பணிந் தேத்துவையே. 59

அஞ்ஞானத் தாலடி யேன்பிழை செய்யினு மாரருள்சேர், மெய்ஞ்ஞானத் தாய்பொறுத் தாட்கொள்ள வேண்டும் வியன்மறைதேர், செஞ்ஞானத் தார்புகழ் போரூர் முருக செகமுயிராம், பொய்ஞ்ஞானக் கூட்டத்துக் குட்புற னாகிய பூரணனே. 60

புரங்கொன்ற தேவெள்ளி மாமலை நீலப் புயமலைமேல்
உரங்கொண் டெடுத்தவன் ஈரைந்து சென்னியும் ஊடுறவே
கரங்கொண்ட வாளியி னாலெய்த மாயன் கனமருகா
திரங்கொண்ட போரி முருகாஎன் தீவினை தீர்த்தருளே.

நெஞ்சைக் கலக்குறுஞ் சேலோ ரிரண்டுடை நேரிழையார்
வஞ்சக் கலவிமெய் யென்றே மயங்கினை வன்னெஞ்சமே
துஞ்சற்கும் வந்து பிறத்தற்கும் ஏதது சொற்கதிசேர்த்
துஞ்சற்கு நீதிருப் போரூர்க் குகனை யுறப்பணியே. 62

கொலையாதி செய்தவ ராயினும் அன்பு குணம்பொறுமை
இலையாம் உளத்தின ராயினும் போரி யிசைந்தகுண
மலைபோ லிருந்த வடிவே லனைவந்து வாழ்த்தினரேல்
தொலையாமெய்ஞ் ஞான மடைவார்முன் மேவுந் துயரிலரே.

இமையாக் கருங்கண் முலையானை மாதரை யெண்ணியெண்ணிச்
சுமையாகப் பாவஞ் சுமக்குநெஞ் சேயிது துன்புகண்டாய்
சமையாதி யாறும் உடையோர்க்கு வீடு தரும்பெருமான்
நமையாட்கொள் போரிக் குமரேசன் சேவடி நாடின்பமே.

சடையாம் பவளக் கொடிபடர் பேரின்ப சாகரத்தே
கடையா தெழுந்த சுகவா ரமுதினைக் கஞ்சம்ஒன்று
புடைதோன்றும் உந்திப் புணரி மருகனைப் புண்ணியனை
மிடைதீரப் போரியிற் கண்டேன் கதியின்ப மேவினனே.

மேருப் பொருப்பினைச் சென்றே வியன்அண்ட கூடமுட்டுஞ்
சூரப்பொருப்பைத் தொளைத்தவை வேலவன் றங்கன்எங்கோன்
போரிப் பிரான்எம் பிழைபொறுத் தாலன்ன பூதலத்தே
யாரிப் படிபொறுப் பார்சொல்க நீயிங் கறிந்துள்ளமே.

அண்டப்பரப்பினைக் கண்டோர் கொடிவரும் ஆய்ந்தபச்சைக்
கொண்டற் சிறைப்பெரு மாமயி லோன்குகன் எங்கள்ஐயன்
தண்டைத் திருப்பதம் போரூரில்வானவர் தம்முடிமேல்
தொண்டர்தம் பேர்முடி மேல்மறை மேலென்றுந் தோன்றிடுமே.

தரைபகச் சீத்துத் திசையதி ரச்சிறை தான்புடைத்தே
எரிநிறச் சென்னி நிமிர்த்து வளைத்தெண் புலிநகவாய்
விரைவுறத் தோன்றத் திறந்தூழி மேக மெனத்தொனிக்கும்
பொருகொடிச் சேவலன் போரூர ரினும் புண்ணியனே.

நதிபிறை கொன்றை செறிசென்னி மூன்றுகண நான்குபுயந்
துதியிரு தாள்நிகர் மாணிக்க வெற்பைத் தொடர்ந்துபடர்
கதிதரு பச்சைக் கொடிதோன்றும் இன்பக் கனிஅளகை
அதிவளம் மேவிய போரூரில் வந்தெமையாட்கொண்டதே.

நன்மை நினைத்துன் திருவடி சேர நயக்குமென்னைப் [ன்
புன்மைநினைத்துளங்கொண்டேக கொர்ந்தனன் பொய்மையினே
மும்மை யழிக்குறும் இன்பன்நம் போரி முருகப்பிரான்
செம்மை யளிக்கும் நினைவினி வேண்டுஞ் சிறியனுக்கே.

அவுணக் கருங்கடல் செங்கட லாக்கு மணிநெடுவேற்
சிவனுற்ற தோட்கிரிச் சேவகன் றன்னைச் செழுங்கொடிக்காற்
கவனுற்ற கைக்குற மானைத் திருடிய கள்வன்தன்னைக்
குவடுற்ற சாரலம் போரியி லேகண்டு கொண்டனனே.

கோலக் கருங்குயி லேமயி லேயென்று கொஞ்சுமலை
வாலைப் பருவமின் தந்தருள் ஆனந்த மாமுகிலைச்
சோலைப் புயல்மலர்த் தேன்பொழி போரிச் சுராதிபனை
மாலைக் கடந்த மனத்திற்கண் டார்க்குண்டு வாழ்வுகளே.

நீரிற் கயலெனக் கண்ணீர் துலங்கிநெஞ் சைக்கவற்று
நாரிச் சமனையும் நம்புவ ரோநல னேகொடுக்கும்
போரிப் பதியெங் குமரேசன் தாட்கன்பு பூண்டுநித்தஞ்
சீரிற் பெரிய கதிமேவி யின்பஞ் செறிபவரே. 73

சூரன் கிளைகளைந் தெண்ணிலி தேவர் துயர்களைந்து
வீரஞ் சிறந்த நவவீரர் முன்னவன் வேலையில்மேய்ந்
தாரம் புயல்துயில் போரூர் முருகன் அருளெனக்குச்
சீருங் குணமும் மருவுந் தவமும்நற் செல்வமுமே. 74

இருகோட் டொருமதி சூடும் பிரான்மகிழ்ந் தின்புறவே
திருகோட்டு போதம் உரைசெய்த தேசிகன் செங்குழையாற்
குருகோட்டி மாதர்விளையாடும் போரிகைக் கூப்பினரைப்[மே.
பொருகோட் டெருமையன் கண்டாலும் அஞ்சிப்புறஞ்செல்லு

ஆரணன் நாரணன் இன்னமுங் காண்டற் கரியபரி
பூரணந் தோன்றிய பூரண னேதிருப் போரியில்வாழ்
காரண னேயொரு நாள்நீ யளித்த கரையில்சுக
பாரணம் என்றருள் வாய்கடை யேற்கெம் பரம்பொருளே.

மெய்வேடம் பூண்டவர்க் குள்ளும் புறனும் விளங்கும் பிரான், பொய்வேடம் பூண்டனன் என்றாலுங் காத்தனை பூங்கணையால், எய்வேட னுல்வருந் தாதெனை யாளினி யேய்ந்ததினை, கொய்வேட மானை மணந்தோய்தென் போரிக் குணக்கொண்டலே. 77

அருண கிரிப்பெயர் மெய்ஞ்ஞான நாதன்சொல் லால்வனைந்த
பொருநை நதிக்கிரி யான்புகழ் மாலை புனைபுயனே
கருணை மிகுத்தென்னை யாண்டாய்க்கும் ஈண்டுகைம் மாறு
தருண வளத்தின னேசம ராபுரிச் சண்முகனே. [ளதோ

மாலோன் விருந்தையை யுண்டாக்கிக் கொண்டிலன் மாமலரோன், மேலான நன்சிரம் ஒன்றாக்கிக் கொண்டிலன் மீதுயர்ந்த, நாலா மறைபுகழ் போரூரன் சம்பந்த நாமங் கொண்டே, நூலாம் இடைமயி லாக்கினன் என்பை நொடியினிலே. 79

சகல மதங்களை யெல்லா முணர்ந்த தவமுனிவோர்
புகலும் இலக்கம்எண் ணுயிரம் பேரைப் பொருகழுவில்
இகலுற வைத்தும் வரும்ஏத மொன்றின்றி யேயிருந்தான்
திகழுறும்போரியன் சம்பந்த நாமஞ் சிறந்துகொண்டே.

எண்ணற் கரிய சமணக் களைகளைந் தேதமிலாத்
தண்ணுற்ற பேரருள் நீர்பாய்ச்சிச் சைவப் பயிர்வளர்த்து
நண்ணச் சிவானந்த போகம் விளைவிக்கும் நல்உழவன்
விண்ணுற்ற தேவருஞ் சூழ்போரி வாழ்கின்ற வேலவனே. 81

தாருகன் கோளரி மாமுகன் கொக்கின் தனதுபெயர்க்
காருறு மால்வரை சூதம்வெஞ் சூரகங் காய்ந்தவைவேல்
பேருறு வோர்தமைக் காலனுந் தீண்டப் பெறுன்எனிலே
போரியென் நாயகன் தாட்கே சரணம் புகுநெஞ்சமே.

ஆருயிர் யாவைக்கும் ஆனந்தத் தேனை யளிக்குமுக்கண்
தாருவி னற்கவி மாமழை யேபொழி தண்முகிலே
காரிருள் மாமலந் தீர்த்தெனை யாளக் கடனுனக்கே
சீருறு தேசிக னேபோரி மாநகர்ச் சிற்பரனே. 83

வீரத் தவுண ருயிர்களை மேய்ந்து விரைவின் அவர்,
சோரிக் கடலிடை யாடிக் குடர்த்தொங்கல் சூடிவெற்றிக்,
கூருற்ற வேல்கரங் கொண்டோன் தென்போரிக் குமரன் என்மேல், சீருற்ற பேரருள் வைத்தான் இஃதென் தெளிந்திலனே. 84

தேவரும் நாகரும் யாவரும் மும்முறை தெண்டனிட
மேவரும் மாமகு டத்தின் இராசிகள் மீதொளிருந்
தூவரு மாமணி ராசிகள் மேவித் தொடச்சிவந்த
பூவரு தாளினன் போரூர்க் குகனெனும் புங்கவனே. 85

கொக்கரித் தேவருந் தானவர் சேனையைக் கொன்றழக்கி
மிக்கரத் தக்கட லாடிப் பிணமலை மீதிவர்ந்து
செக்கரில் தோன்றுங் கணநாதர் சேவிக்குஞ் சேவடியான்
இக்கரிக் குஞ்சரும் பார்க்கின்ற போரிக் கிறையவனே. 86

மணிகொண்ட சேடன் படர்முடி தூக்கி மணியுதறித்
திணிகொண்ட மால்வரை மாடே பறந்துறச் சேணபறந்தங்
கணிகொண்ட தேவர் தொழச்சென்று மீண்டிய ககவுமும்மைக்
குணில்கொண்ட பேரிகை யாக்கின்றபோரிக் குகன்மயிலே.

வாரி சுழல வடவரை யாதி வரைசுழலக்
காரொடு சந்திர சூரியர் மீன்கறங் காச்சுழலக்
கூரிருள் யாக்கை அரக்கர் சுழன்றிடக் கோதில்பச்சைத்
தேரென வட்டம் வரும்போரி வேலன் சிறைமயிலே. 88

மின்னல் சுடர்விழு தோட்டு மணிக்குழை மெல்லியலார்
பொன்னுற்றபூண் முலைவேட்ட நெஞ்சேயிது பொய்ம்மயக்கே
தன்னைத் தலைவனை யாராய்ந் தடையுந் தகைமையின்புக்
கென்னப்ப னாகிய போரூர்ச்செவ்வேளையிறைஞ்சுவையே.

முகடிடித் துச்சக்ர வாளத்தை முட்டிவெம் மூரியெட்டுப்
பகடுகுத் திக்கனல் சிந்திடப் பார்த்துப் பரவையெல்லாம்
அகடுறத் தேக்கி விடுத்துறத் தாவி புரைக்கணம்போய்க்
ககனமுற் றும்வரும் போரூரன் ஏறுங் கனதகரே. 90

மகுடங்க ளாறுங் குழையோர் பனிரண்டும் வானவரும்
புகழுங் கடகங்கள் ஈராறும் ஆழியும் பூனதப்பொன்
திகழும தாணியுஞ் செந்துகிர் ஆடையுஞ் செஞ்சிலம்பும்
நிகழும் படிதரித் தோர்தெய்வம் போரி நிலாவியதே. 91

நின்பாத தாமரைக் கன்பேது மின்றிய நீசன்பொல்லேன்
புன்போதமேலிட்ட பொய்யேன் பிழையைப் பொறுத்தருளாய்
அம்போ ருகமலர் ஓரா றலர்ந்த அருட்கடலே
செம்போரி வேலவ னேயிமை யோர்கள் சிகாமணியே.92

செப்புக் கவித்தன்ன வன்குரத் தால்மண் சிதைத்கெறியுந்
துப்புற்ற மாவிற் கிணையாக வோதினர் சொல்கணத்தே
ஒப்பற்ற மூவுல கும்போய்த் திரும்பு மொருமனத்தை
எப்பெற்றி யாலுரைத் தார்சம ராபுரி எண்குணனே. 93

மெய்யாம் நெறிக்கண் அடியேன் செலுத்த விலங்கிமிகு
பொய்யாம் நெறிக்கண் எனைக்கொடு போமுளப் போர்க்களிற்
றையா நினதருளாங்கயிற் ருற்பிணித் தானதண்டைச் [றை
செய்யாருந் தாட்கந்து சேர்ப்பாய்தென் போரியஞ் சேவலனே.

உள்ளுறு புல்லினை வெல்லா மொழிந்திங் குணர்வரிய
நள்ளிருளன்ன அஞ் ஞானமுந் தீர்ந்து நலனுதவுந்
தெள்ளிய பேரருளூடே கலந்தின்பு சேர்ந்திருப்பக்
கள்ளநெஞ் சேற்கும் வருமோதென் போரியங் காங்கெயனே.

எல்லாப் பொருள்களுந்தாளுந் தானென்றி லேய்வதின்றாய்ச்
சொல்லாற் கருத்தத னுற்சென்று கூடருஞ் சோதியதாம்
மல்லா ரணப்பொருள் நாயேற்கும் ஈய மதித்திகொல்லோ
நல்லார்க் கினிய குகனேதென் போரியென் னுயகனே. 96

எண்ணிய எண்ணிய வாறே சிறியனுக் கீந்தருளும்
புண்ணிய னேநின் மகிமையை யோர்ந்திலன் பொய்யவனேன்
கண்ணுறு மாமணி யேகருத் தூறுங் கனிரசமே
தண்ணளி மாமுகி லேபோரி மேவிய சண்முகனே. 97

உள்ளத் தழுக்கினை யெல்லா மகற்றி யுனதுபத
வள்ளக் கமலத் தெழுநற வானந்த வாரியிலே
கள்ளச் சிறியனை வைத்தாள வேண்டுங் கழனிமடை
அள்ளத் திறந்திடும் வாளைகள் போரி அயிலவனே. 98

மலஞ்சோர் கடத்தைப் பிணிக்கூட்டை ஒன்பது வாயிற்பையை, நலஞ்சால எண்ணிக் கடையேன் களித்தன னுய்ப்புலையேன், திலஞ்சார் தயில மெனஎங்கு மானசி வானந்தத்தேன். கலந்தே களிப்பதென் ருேசம ராபுரிக் காங்கெயனே. 99

எண்ணிலி காலத்தின் பின்னரிக் காயம் இனிதளித்தாய்
நண்ணுறும் ஈதினும் மெய்ப்பத்தி யீந்திலை நாயடியேன்
பண்ணிய பாவமென் றேகும் பரகதி யென்றடைவேன்
விண்ணுறு தேவருஞ் சூழ்போரி வாழ்கின்ற வேலவனே.

திரவணி நீடிய போரூர்கை கூப்பிச் செழுங்கமலச்
சரவண வாவியில் நீராடித் தங்கச் சதங்கை கொஞ்சுங்
குரவணி பாதம் பணிவோர்க் கினிமை கொடுக்கும்பிரான்
அரவணி வோன்கும ராவடி யேனுன் அடைக்கலமே. 101

ஆ உ0௩

# 12. மாலை

—: ★ :—

**காப்பு**

மருப்புநில வாலென் மலதிமிரம் போக்குங்
கருக்கோடை போக்குமதக் காரால்—திருப்போரூர்
நிம்பத்தின் கீழிருந்து நேயர்க்கு வாழ்வளிக்குங்
கம்பக் கடமா களிறு.

**நூல்**

பூவார்ந்த கற்பகப்பூம் பொங்கரிடத் திற்சிறந்த
தேவாய்ந்த செல்வமுதற் செல்வமெல்லாம் - தூவாய்ந்த
வேள்பணிந்த பேரழகா மேதகுபோ ரூராநின்
தாள்பணிந்தார்க் குண்டாகுந் தான். 1

காழியிலே வந்து கணக்கிலாச் சீவரைநீ
டூழியின்பத் துய்த்த வொருவனே - யாழியெனுந்
துன்பத் திருந்தேனைத் தூக்கித்தென் போரூரா
இன்பத்துள் வைப்பாய் இனி. 2

இருட்டறையை நோக்குவிழிக் கேற்றுவிளக் கென்றூழ்
பொருட்டனையே காட்டும்அது போல - மருட்டனையும்
மாயையினூற் பேரருளால் மாற்றி யறிவளிக்குந்
தாயனையான் போரூரன் தான். 3

நாயேனுன் சீரடிக்கு நன்கல்ல செய்தாலும்
பேயேன் இழைத்த பெரும்பிழையை - நீயே
பொறுத்தாள்வ துன்கடனும் போரூரா என்னை
ஒறுத்தா லெனக்கார் உறவு. 4

ஐம்பொறியாற் கண்டுபின்னர் அற்பித்தால் நாயடியேன்
எம்பெருமான் மிச்சிலுனக் கேறுமோ - வம்பனேன்
நீகோட்டக் காண்பதெனை நேயமுறப் போரூரா
ஆய்காட்டி தற்புதமே யாம். 5

விதிவழியே நின்றுன் மிளிர்கமலத் தாளை
மதிதழையும் அன்பால் வணங்கிக் - கதிதழையும்
அன்பரைப்போல் வேடம் அணிந்துநின்றேன் போரூரா
வன்பருக்குள் வன்பனேன் வந்து. 6

இல்லறத்தான் அல்லேன் இயற்கைத் துறவியல்லேன்
நல்லறத்து ஞானியல்லேன் நாயினேன் - சொல்லறத்தின்
ஒன்றேனும் இல்லேன் உயர்ந்ததிருப் போரூரா
என்றேநான் ஈடேறு வேன். 7

இன்போ ரணுவாய் இடரதற்கு மாமலையாம்
புன்போகம் வேண்டிப் புலம்பாதே - என்போடே
உள்ள முருகவரும் ஒண்போரூர் ஐயன்அருள்
வெள்ளமுற நெஞ்சே விரும்பு. 8

மயக்கமெலா நீங்கியுன்றன் மாமலர்த்தாட் கீழே
இயக்கமறு வாரிதிபோ லென்றே - தியக்கமறு
பேரானந் தம்பெறுவேன் பேணுதிருப் போரூரா
சீராருந் தேவா தெளிந்து. 9

அளகையர்கோன் வாழ்வும் அனங்கன்போல் ஏரும்
அளகவட மீன்போல் அணங்கும் - உளமதனில்
உன்னாது கைவிட் டுனைப்பிடித்தார் போரூரா
என்ஆ தரவுகொண்டே னியான். 10

வள்ளிக் கொடிபடரும் மாகற் பகதாரு
தெள்ளிப் புகழ்தேவச் சிந்துரமே - உள்ளிக்
களித்துவிளை யாடுங் கனகமலை போரூர்
அளித்துவிளை யாடும் அரசு. 11

மெய்ப்பொருளாம் நின்னை விரும்பியின்ப மேவாது
பொய்ப்பொருளை நாடியிடர்ப் போங்தேனைச் - செப்பரிய
மட்டழகார் சோலை மலிந்ததிருப் போரூரில்
கட்டழகா காத்தாள் கடன். 12

வள்ளையார் ஓடை மலிபோரூர் ஆறுமுகப்
பிள்ளையார் பாதம் பிடிநெஞ்சே - கொள்ளையார்
வன்பிறப்பு நீங்கும்நமை வாரிதிபோல் வந்தடருந்
துன்பிறக்குங் கூடுஞ் சுகம். 13

இருளிற் கிடந்த எனையன்றே நூக்கி
அருளைத் தரத்தனுவே யாதி - தெருளூற்றுத்
தந்தவன்நீ மற்றவையைத் தந்ததுபோல் நிற்கீதல்
எந்தவகை போரு ரனே. 14

இடர்களையும் இன்பக் கரும்பை யெமது
தொடர்பிறவி நீக்குந் துணையைத் - தொடர்பாகி
உள்ளும் புறம்பும் ஒளிவீசும் போரூரில்
தெள்ளுமணி யைநெஞ்சே சேர். 15

சேர்ந்து நமதுசெய லற்றமுடி மேற்சேர்த்தி
ஆர்ந்தகளி மேன்மேலும் ஆக்கியே - சார்ந்தெவனும்
பொங்கி மணக்கும்இன்பப் போரூரன் தாட்பூவைத்
தங்கி மனமே தருக்கு. 16

முடித்தேன் களித்தேன் முசிப்பெல்லாம் மாறிக்
குடித்தேன் ஆனந்தக் கொழுந்தேன் - நடித்தேன்விண்
ஆர்ஊரர் போற்றி யடிபணிந்து நின்றுதொழும்
போரூரன் பாதாம் புயம். 17

அருளே வடிவாகி ஆனந்த வாரிப்
பொருளாய்யான் என்னதெனல் போமோ - மருளேதும்
இல்லானே போரூர் இறைவனே நாயேற்கு
நல்லானே சொல்லாய் நயந்து. 18

என்னை விழுங்கி யிருக்கநீ ஆனந்தந்
தன்னை விழுங்கித் தருக்கநான் - அன்னையிலுஞ்
சால அருள்புரிந்த சற்குரவா போரூரா
ஏலமருள் செய்யேல் இனி. 19

படல முரித்தவிழி பானுவைக்கண் டாற்போல்
உடலமுத லானவகோ யோட்டி - அடியிணையைக்
காட்டியநீ மீட்டுங் கனமயக்கிற் போரூரா
கூட்டியெனை யாட்டாதாட் கொள். 20

எனதபிமா னம்பிடித்த இந்தவுட லாதி
உனதபிமா னம்பிடித்தாய் உற்றே - எனதாகக்
கொண்டேன் மயக்கங் குலையுநாள் எந்தநாள்
கண்டபோ ரூரா கழறு. 21

எனக்கவலம் வாராமல் எந்நாளுங் காத்து
மனக்கவலை மாற்றும் மருந்தாம் - புனச்சிறுமி
முத்துவடக் கோடுழுத முந்நான்கு தோளுடையான்
தத்துபுனற் போரூரன் தாள். 22

பொருப்பெனவே பஞ்சின் பொதியெனினுஞ் சின்ன
நெருப்பணுகில் நீருரு மாப்போல் - விருப்பமுடன்
உன்னைத் தொடர்வார்க் குறுபவநோய் போரூரா
பின்னைத் தொடரா பிறந்து. 23

கண்ணிற் கருமணியே கற்பகமே கற்றோர்கள்
உள்நிற்கும் ஒரொளியே ஓர்பொருளே - எண்நிற்கும்
போரூர் இறையே புனிதநிறை ஆனந்தச்
சீரூரில் நாயேனைச் சேர். 24

வேல்கண்டேன் தோளில் வியன்சதங்கை மொய்த்திருந்த
கால்கண்டேன் ஆறுமுகங் கண்டேனே - நீல்கொண்ட
மாயூரங் கண்டேன் வளமைதரு போரூரிற்
போயூரங் கண்டேன் புகுந்து. 25

தாயாம் எனக்குரிய தாதையாஞ் சற்குருவாந்
தேயாக் கருணைபொழி தெய்வமாம் - மாயப்
பொருள்நீக்கும் அன்பர் புனிதவீ டேற
இருள்நீக்கும் போரூர் இறை. 26

கேட்டதெல்லாம் பாலிக்குங் கேடிலாத் தாதாவும்
வீட்டுநெறி காட்டும் வியன்குருவும் - நாட்டமென
உள்நின்று நாயேற் கொளிகாட்டுஞ் சிற்பரனும்
எண்நின்ற போரூர் இறை. 27

ஐம்பொறியாற் போகம் அயின்றாலும் நாயேனுன்
செம்பதுமத் தாளிணையே சிந்திக்க - உம்பருக்குங்
காண அரி தாம்இன்பங் காணத்தென் போரூரா
பூண அருளே புரி. 28

அன்பெலாம் நின்பாலே யாக்கி யடியேனுன்
இன்பெலாம் உண்டிங் கிளைப்பாறக் - கொன்புனைவேற்
கையாதென் போரூரிற் காங்கேயா வீடுதவும்
ஐயாநீ கண்பார்த் தருள். 29

நீலக் கடல்முகட்டில் நேருதய சூரியன்போற்
கோலக் கலாபக் குரகதமேல் - சாலவும்நீ
தோன்றி யடியேன் துயர்தீரப் போரூரா
ஊன்றியடி யென்முடிமேல் ஓது. 30

மலையரையன் ஈன்றபிடி வாழ்ந்துதவும் யானை
கலையரைய னைப்புடைத்த காளை - சிலையரையன்
மாப்பிளைதென் போரூரின் மாணிக்கச் செஞ்சதங்கைக்
கால்பிள்ளைநா யேனார் கதி. 31

ஏதுபிழை செய்தாலும் ஏழையே னுக்கிரங்கித்
தீது புரியாத தெய்வமே - நீதி
தழைக்கின்ற போரூர்த் தனிமுதலே நாயேன்
பிழைக்கின்ற ஆறுநீ பேசு. 32

முக்கரணத் தாலும் முசியா துனைப்பணியுந்
தக்கவர்கள் தாள்தா மரைமீது - புக்கபொடி
ஒன்றிநும்என் சென்னிக் கோரணியாப் போரூரா
சென்றுறுவேன் வீடு தெளிந்து. 33

மூவாசை கொண்டு முசிக்குநெஞ்சே போரூரில்
தேவாசை கொள்ளத் தெரியாதோ - தேவாசை
கொண்டாயேல் நம்தங் குறைகளெல்லாம் இக்கணமே
விண்டாயே கண்டாயே வீடு. 34

குழவி யழுத குரல்கேட்ட தாய்வந்
தழுதகண்ணீர் மாற்றி அமுதூட்டுங் - கெழுதகைபோல்
நாயேன் இடர்களைந்து நல்லருளூட் டும்போரூர்ச்
சேயேநம் தாயாகுந் தேர். 35

கலங்கினேன் கண்ணீருன் கையால் துடைத்தே
அலங்கில்வேல் ஆறுமுகத் தையா - புலன்கரணங்
கண்டறியா இன்பங் கடையேற்குப் போரூரா
உண்டறியத் தந்தாள் உவந்து. 36

மலைமுழையில் உற்றாலென் மாமருந் துண்டாலென்
கலைமுழுதுங் கற்றாலென் காணார் - இலைநிலவு
வேல்பிடித்த கையான் வியன்போரூர் ஐயன்இரு
கால்பிடித்தால் காண்பார் கதி. 37

விருப்பமுட னேபணியும் மெய்யன் பனையும்
இருப்புநெஞ்ச என்போ லியையுங் - கருப்பிரதக்
கட்டியார் தீஞ்சுவைபோற் காதலர்க்கீ யும்போரூர்ச்
செட்டியார் தாம்அறிவார் தேர்ந்து. 38

கோழிப் பதாகையுஞ்சீர்க் கோலமயில் வாகனமும்
ஆழிப் பெருக்குறிஞ்சி யார்வேலும் - வாழியெனத்
தோத்திரஞ்செய் போரூரிற் சுந்தரனார் பேரருளோர்
மாத்திரையில் நெஞ்சே வரும். 39

அயிலேந்து தோளானை ஆறுமுகத் தானை
மயிலேந்து தாளானை வாழ்த்திப் - புயலேந்து
தண்டலையார் போரூர்ச் சரவணனை நெஞ்சமே
கண்டலையா துற்றார் களி. 40

புயல்போற் கருணை பொழிவிழியான் தன்னை
மயல்போக்கு மாமருந்தை வந்தெஞ் - செயல்போக்கும்
போதானந் தச்சுடரைப் புண்ணியனைப் போரூரில்
நாதாந் தனைமனமே நாடு. 41

உரகபடந் தூக்கி உதறுபசுந் தோகைத்
துரகமிசைத் தோன்றுஞ் சுடரே - பரகதியில்
வாழ்ந்துய்ய நாயேன் வளமைதரும் போரூரா
சூழ்ந்தருளாய் சாலத் தொடர்ந்து. 42

கடலைச்சே ருக்கிக் கடுவரைநீ ருக்கி
மிடலுற்ற சூரனுரம் வீட்டி - அடலுற்ற
வேல்கொண்டார் தெய்வத்தை மெய்யாகப் போரூரின்
பால்கண்டார்க் குண்டோ பவம். 43

மறப்புநினைப் பாகி வருதிரையெங் நாளும்
புறப்படா இன்பப் புணரி - உறப்புகுந்தே
ஆடிக் களிக்கும் அருட்போரூர் ஐயனடி
கூடிக் களிக்குங் குழாம். 44

முத்துச் சிவிகையராய் மூரிமத யானையராய்த்
தத்துபரி மான்தேரில் தங்குநராய் - மெத்தும்
அரியா தனத்தாராய் ஆளுவர்பூம் போரூர்ப்
பிரியாதான் நீறணிந்த பேர். 45

பேய்போம் துயரம்போம் பித்தம்போம் போகாத
நோய்போம் மிடிபோம் நுவலுங்கால் - தாய்போல
நன்னிதியைப் போல நயந்திருப் போரூரன்
சன்னிதியைக் கண்டளவே தான். 46

குமரா நமாஎன்று கூறினர் ஓர்கால்
அமரா வதியாள்வ ரன்றி - யமராசன்
கைபுகுதார் போரூரன் கால்புகுவார் தாயுதரப்
பைபுகுதார் சேரார் பயம். 47

குற்றம் இழைத் தாலுங் குணமாகக் கொண்டுநம்மேல்
பற்று விடாத பழம்பொருளாம் - முத்தமழைக்
காரூர் அரையனுக்குக் கற்பகநீ ழற்கொடுத்த
போரூர் அரையன்நெஞ்சே போற்று. 48

வேலும் மயிலும் விளங்குஞ் சிறுசதங்கைக்
காலும்ஈ ராறு கனதோளுஞ் - சால
அருளுதவும் ஆறு முகமும்உள போரூர்ப்
பொருள்நமது நெஞ்சமே போற்று. 49

சரவண வாவிச் சலமூழ்கி யன்பால்
குரவணிதாள் நாடிக்கை கூப்பிப் - பரகுருவே
என்றோதி வாழ்த்தி யிரும்போரூர் சூழ்ந்தவரை
நின்றோதி நெஞ்சே நினை. 50

வேலைநினைந் தாயோ வியன்கிண் கிணிசூழ்ந்த
காலைநினைந் தாயோ கனபோரூர் - வேலையாச்
சூழ்ந்துதொழு தாயோநீ சூரியா காரிருளைப்
போழ்ந்திடுவாள் ஏதோ புகல். 51

அம்புலியே போரூர்வந் தாறுமுகங் கண்டாயோ
நம்பும்அடி யார்சபையை நண்ணினையோ - எம்பரனைப்
பண்அளியாற் பாடினையோ பாற்கடல்போ லேவிளங்குந்
தன்அளிநிற் கேதுகாண் சாற்று. 52

கடவுட் பிடிக்கோர் களிப்பாகும் வள்ளிக்
கொடிசுற்றத் தானுங் குலாவும் - அடியர்க்கே
எண்ணுதொறும் உள்ளத்தில் இன்பூறும் போரூரில்
கண்ணுதலான் தந்த கரும்பு. 53

வாளைப் பகடு மடைவாய் அடைக்கவரும்
ஆளைப் பகட்டும் அணிபோரூர் - நீளிடத்தில்
ஐவண்ணம் உண்டங் கதிலோர் அரசிருக்கும்
நைவண்ணம் போகநெஞ்சே நாடு. 54

என்போதம் நின்பாலே யீதலே நல்லறனும்
உன்போதங் கைக்கொள்வ தொண்பொருளாம்-உன்பாதத்
தானந்தம் இன்பமாம் ஆரமுதே போரூரா
மோனந்தான் வீடாகும் மொய்த்து. 55

சூக்குமையாம் வாக்குந் துனிஆ ணவவுடலும்
நீக்கரிய என்போத நெஞ்சமே - போக்கி
இருந்த படியிருக்க என்றுபோ ரூரா
திருந்தவரம் பாலிப்பாய் செப்பு. 56

ஐவாய் அவாவையும்உன் னுரடிக்கே வைப்பதலர்
மெய்யான அன்பே வியன்சலமாம் - பொய்யாத
உன்போதத் தாலறிவ தொண்சுடராம் போரூரா
என்போத நைவேத்தி யம். 57

அமரர்க்கின் பாகும் அவுணர்க்கே கைப்பாம்
இமயப் பிடிகரத்தில் எய்துஞ் - சமயத்
தலைவனுர் மோந்துகொளச் சாரும்போ ரூரில்
கலைவலா ரேத்துங் கனி. 58

மரகத மாமலைமேல் மாணிக்க வெற்புத்
திரகதமாய்த் தோன்றுந் திறம்போல் - வருமுனது
காட்சியினை நாயடியேன் கண்டுதொழத் தந்தருளாய்
மாட்சிதரு போரூரா வந்து. 59

ஆணிப்பொன் என்கோ அருளாழி தானென்கோ
மாணிக்கம் என்கோ மதியென்கோ - பேணிப்
பணிவார் இருள்போக்கும் பானுஎன்கோ போரூர்க்
கணியாகுந் தெய்வத்தை யான். 60

ஆனந்த மாகடலே யாரா அமுதமே
மோனந் தருஞ்சுடரே முத்திவித்தே - தேனந்து
கஞ்சமலர் வாவிக் கனபோரூர் ஐயாவுன்
தஞ்சமெனைக் காத்தாள் சரண். 61

பாம்பாகத் தோன்றிற் பழுதைசற்றுந் தோன்றாதாம்
பாம்பின்றாத் தோன்றிற் பழுதையே - மேம்பாடாய்ப்
பொய்தோன்றின் மெய்தோன்றா போரூரா நின்னருளால்
மெய்தோன்றிற் பொய்தோன்றா வீடு. 62

கானலைநீ ரன்றென்று காட்டக்கண் டாலொருவன்
மானலநீ ரென்று மயங்கல்போல் - நீநலமாய்ப்
பொய்யுலகம் பொய்யாகக் காட்டியும்போ ரூரானே
மெய்யெனவுள் ளைந்தேன் மிக. 63

கும்ப முனிக்குக் கொடுமலங்கள் மூன்றறுத்துச்
செம்பதுமத் தாள்கொடுத்த தேசிகா - நம்ப
அறியேன் மலமறுத்தாய் அற்புதம்போ ரூரா
சிறியேன்மேல் என்னருளோ செப்பு. 64

அஞ்ஞான வல்லிருள்போய் அன்பர்குணக் குன்றின்மிசை
மெய்ஞ்ஞான பானுவெளி தோன்றச் - செஞ்ஞான
நாதத் தொனிகூவும் நற்கொடிப்போ ரூரன் இரு
பாதத்தை நெஞ்சே பணி. 65

பவளக் கொடியூசற் பன்னிரண்டின் மீதே
இவருற்ற சூரியர்போல் ஏய்ந்து - திவளுற்ற
குண்டலங்க ளாடவரு கோவைப்போ ரூரனைப்போல்
கண்டிலன்பொய் யாக்கருணைக் கார். 66

மூதண்ட கூட முகடுதொடத் தாள்நீட்டுங்
கோதண்ட பாணி குலமருகன் - தீதண்டா
வண்ணமெமை யாண்டான் மகிழ்போரூர் ஐயன் இனி
எண்ணமென்ன நெஞ்சே யெமக்கு. 67

ஆம்பல்வாய் விள்ள அடியார் கரகமலங்
கூம்ப வுதிக்குங் குளிர்மதியே - தேம்பி
அழுதபிள்ளேக் காய்போல் அருட்போரூர் ஐயா
தொழுதஎற்கு நீயே துணே. 68

என்செயலாய்த் தோன்ற இருள்திரோ தம்புரிந்தாங்
குன்செயலாய்த் தோன்ற வொளிஅருள்செய் - றுன்செயலால்
என்போதந் தோன்ருதுன் இன்பாரப் போரூரா
உன்போதந் தந்தாள் உவந்து. 69

உள்ளந் தனிலே உவமையிலா ஆனந்த
வெள்ளந் துளும்ப விளேயாடும் - பிள்ளேகளே
சூழுந் திருப்போரூர்ச் சுந்தரனல் என்பிறவி
ஏழும்போம் நெஞ்சே யெமக்கு. 70

ஒளியாற் கதிரவுணர் ஊனடலாற் காலன்
அளியாற் குளிர்மதியே யாகும் - எளிதில்நனி
தூரம்போய் மீளுதலாற் சொல்மனமாம் போரூரில்
வீரன் கரத்தேந்தும் வேல். 71

கைக்குரிய கஞ்சமாங் கண்ணுக்கோர் காட்சியாம்
மெய்க்குரிய சென்னிக்கே மென்முடியாம்-பொய்க்காதென்
நெஞ்சத்துள் இன்பம் நிறைக்கும் பரஞ்சுடராந்
தஞ்சுற்ற போரூரன் தாள். 72

வள்ளவளச் செம்முளரி மாளிகையின் மீதிருந்து
பிள்ளேமட அன்னப் பெடைநோக்க - உள்ளலொடு
செவ்வாய்ச் சிரலாடுந் தேன்வயற்போ ரூராளன்
எவ்வாய்ப்பும் ஆகும் எமக்கு. 73

வீதி மணக்கும் விரைக்குங்கு மச்சேறே
ஓதி மணக்கும் உயர்மாடங் - தாதுசெறி
பூமணக்குஞ் சோலே புகழ்மணக்கும் போரூரிற்
பாமணக்குஞ் செவ்வேள் பதம். 74

மயிலடையுஞ் சந்த மலைச்சாரல் எங்கும்
குயிலடையும் பூஞ்சோலைக் குள்ளே - புயலடையும்
பொன்மாட மெங்கும் புகழ்போரூர் வாழ்தெய்வந்
தன்மா டடைவார் தவர். 75

தன்னை மறந்துகண்ணீர்த் தன் தரள மார்பணியும்
பின்னைமுரு காவென்று பேசுமுளந் - துன்னும்
குயிலாலுஞ் சோலைக் குளிர்போரு ரானை
மயில்மேல் வரக்கண்ட மான். 76

எத்திக்குந் தானா யிருந்தடியேன் உள்ளத்தே
தித்திக்குந் தேனளிக்குஞ் செட்டியாங் - கொத்தி
அரவமணிப் பைதூக்கி யாடுமயி லேறிக்
குரவமணி போரூர்க் குகன். 77

அன்புந் தருநல் லருளாழி யுந்தரும்பேர்
இன்புந் தருமெண் ணியதருமே - மன்பதையைக்
காக்கும்போ ரூரான் கடையேனைத் தன்னடியான்
ஆக்கும்போ ரூரான் அறிந்து. 78

நோவவுரை யான்எம்மை நோவக்கண் பார்த்திடான்
சாவ நினையான் தளரவிடான் - பாவனைய
சொல்வாய்க் குறத்தி துணைபிரியாப் போரூரன்
நல்வாய்ப் பரையன்நெஞ்சே நாடு. 79

திருவடிக்கே தோன்றுஞ் சிறியேன் துயரம்
ஒருவருக்குந் தோன்றாதென் னுள்ளே - சருவினை
எந்நாளும் வாட்டும் இடர்களையப் போரூரா
நன்றாநின் னாளா நயந்து. 80

ஆசையும் அன்பும் அபிமான மும்உனது
பூசையிலே வைக்காது பொய்க்காளாய்ப் - பேசரிய
பெண்ணாசை யாதி பிடித்துழன்றேன் போரூரா
எண்ணாது நின்னை யிருந்து. 81

தீயவனென் குற்றந் திருவுளத்தில் நாடாதென்
தாயனைய போரூர்ச் சரவணா - தூயசுக
வீட்டுக்குள் வைப்பாய் வினையேனைப் பொய்க்காயக்
கூட்டுக்குள் வைக்கேல் குறித்து. 82

வேல்விடலா யென்றுமணி வீரக் கழல்புனைந்த
காலுடைய சூரடுகா ளாயென்று - மாலின்
மருகனே யென்று மடநெஞ்சே போரூர்
முருகனே யென்று முயல். 83

காதலித்த வாறுதவுங் காங்கெயனார் தாளிணையை
ஆதரித்து நன்றாய் அனுதினமும் - நீதரித்துக்
கள்ளமெலாம் போகக் கருதுநெஞ்சே போரூர்வந்
துள்ளமெலாம் இன்பம் உறும். 84

கருப்புச் சிலையானுங் கைகூப் பழகா
பொருப்புச் சிலையான் புதல்வா - விருப்புற்ற
என்னெண்ணத் தின்படியே யீந்தருளாய் போரூரா
உன்னெண்ணத் தின்பாய் உவந்து. 85

நாடுதனி லேயுழலும் நாயேனை வாவென்று
வீடுதனில் வைக்க விரும்புவாய் - பீடுதரு
காட்சியே போரூரிற் கற்பகமே ஆருயிர்க்கோர்
சாட்சியே உன்தாள் சரண். 86

ஆரியனாய் வந்தும் அறிவுக் கறிவாயுங்
கூரியநூல் தந்துங் கொடியேற்குப் - பேரறிவு
தந்தாய் மறந்து தளர்கின்றேன் போரூர்வாழ்
எந்தாய்என் செய்கேன் இனி. 87

என்றும் அபிமானம் ஏழையேன் மீதுவைத்து
நன்றுபுரி யுங்குமர நாயகா - இன்றுசுக
பூரணத்தில் நாயேன் புகவைப்பாய் போரூர்வாழ்
காரணத்தாய் உள்ளே கலந்து. 88

கைவிட்டால் நாயேனைக் காப்பா ரொருவரில்லை
பொய்விட்டார் போற்றும் புனிதனே - மையிட்ட
கண்ணா ரிருவர் கலந்த புயத்தழகா
தண்ணார்போ ரூரா தரித்து. 89

ஆனைமுகத் தாற்கிளைய ஆறு முகத்தானை
மானையிடத் தில்வைத்தோன் மாமகனை - மானுதவு
வேடிச்சி தோள்சேர்ந்த மெய்ப்புயனை நெஞ்சமே
நாடிச்சி போரூர் நயந்து. 90

மெய்யடியார் போல மிகநடிப்பேன் மெய்யடியார்
செய்யடிமைத்தொண்டேதுஞ்செய்திலேன்-பொய்யடியேன்
உன்னாட் கமலபதத் துள்நிறையப் போரூரா
எந்நாட் கிடைக்கும் எனக்கு. 91

நோயுற் றடராமல் நொந்துமனம் வாடாமற்
பாயிற் கிடவாமற் பாவியேன் - காயத்தை
ஓர்நொடிக்குள் நீக்கியெனை யொண்போரூர் ஐயாநின்
சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து. 92

குறைகளையுங் கோவே குணமளிக்குந் தேவே
மறைமுடிவு காட்டு மணியே - இறையவனே
போரூரா என்று புகழ்நெஞ்சே யெந்நாளுங்
காரூர் மயக்கமறுங் காண். 93

கோது படாத குணஞான சாரமே
ஏது படிறேன் இழைத்தாலுந் - தீதாகக்
கொள்ளாது போரூர்க் குமரவேள் நாயேனை
எள்ளாது காத்தாள் இனி. 94

மருளுடையேன் செய்தபிழை வண்போரூர் ஐயா
அருளுடைய நீபொறுத்திங் காளாய் - தெருளுடையாய்
வேறுதுணை காணேன் வினையேன் தனக்குரிய
ஆறுதுணை ஆரு ளனம். 95

பஞ்சரத்தின் மூடிவைத்த பைங்கிளிபோல் நாயேனை
அஞ்சிரத்தக் கூட்டி லடையாதே - விஞ்சும்
அருளொளியிற் சேர்த்தி யமுதூட்டி வைப்பாய்
தெருளொளியே போரூரா தேர்ந்து 96

எப்போதும் என்முடியுன் இன்பொன் திருப்பாத
மெய்ப்போதின் கீழிருக்க வேண்டுமே - மெய்ப்போத
வேதா வணங்கவரும் வித்தகா போரூரில்
நாதா மயில்வாக னா. 97

சன்றழைக்கும் முன்னே கருதிவரு மாப்போல
நின்றழைக்கும் நாயேற்கு நேர்தோன்றி - ஒன்றினுக்கும்
அஞ்சாதே வாவென் றழைப்பாய்தென் போரூரா
எஞ்சாத பேரருளா வின்று. 98

ஊழுக்கா ளாகி யுறுபோக மேகருதிப்
பாழுக் குழைத்த படிறேனை - ஏழுக்குள்
போகா வகைபுரியாய் போரூரா பன்னிரண்டு
வாகா வடிவே லவா. 99

உண்ணாத போகமில்லை யுற்பவியாக் காலமில்லை
நண்ணாத தேகமில்லை நாயினேன் - உள்நாடிப்
பண்டுவந்த துன்பமறப் பார்தொழுபோ ரூரானைக்
கண்டுவந்து நெஞ்சே கருது. 100

களங்கமெலாம் அற்றேன் கதிபுகுந்தேன் நாயேன்
உளங்குளிர ஆனந்த முண்டேன் - வளங்களெல்லாம்
உற்றேன் திருப்போரூர் உத்தமனார் சீர்பாத
நற்று மரைதொழுத நான். 101

ஆறு முகம்வாழி ஆறிரண்டு தோள்வாழி
தேறுபதம் வாழியிரு தேவிமார் - வீறுபுடை
வாழிவேல் வாழி மயில்வாழி போரூரர்
வாழிசகம் வாழி மகிழ்ந்து. 102

ஆக கூ௦ச

---

# 13. தாலாட்டு

—: ★ :—

காப்பு

கனக வரையிருபாற் கங்கைவழிந் தாங்குக்
கனகருணை யேமதமாக் காட்டும்—கனகவரைக்
கோதண்டன் ஈன்றதிருக் குஞ்சரத்தைக் கைதொழுவார்
தீதண்டார் சேர்வார் திரு.

நூல்

பூமாது நாமாது போதசுக மாமாது
தாமேவு போரூர்ச் சரவண நாயகனே. 1

மாணிக்க மால்வரைமேல் மன்னுசெக்கர் வானமென
வேணிப்பி ரான்தோளின் மேவுஞ் சிறுகுருந்தோ. 2

உலகீன்ற மாதா வுதவியபால் கஞ்ச
மலர்வாய்கள் ஆறும் மணக்கின்ற வான்குருந்தோ. 3

பெண்ணுய்ந்த கற்புப் பிடியும் பிணைமானுங்
கண்ணாரக் கண்டு களிக்கவரு கற்பகமோ. 4

நீலமயில் வாகனனே நெட்டிலைவே லாயுதனே
கோலநிறை கோழிக் கொடிபடைத்த சேவகனே. 5

ஆறிரண்டு தோளானே ஆறு முகத்தானே
தேறுமறை கொஞ்சுஞ் சிறுசதங்கைத் தாளானே. 6

மகுடங்கள் ஆறும் மணிக்குழைகள் ஈராறுந்
திகழ்கடகம் ஈராறுஞ் சிலம்புந் தரித்தானே. 7

சடைமேற் பிறையைமுந்நூல் தன்றாற் பிணித்தணிந்து
விடையான் மடிமேல் விளையாடும் ஆரமுதோ. 8

செஞ்சதங்கை கொஞ்சச் சிறுகிண் கிணியாடக்
கஞ்சமலர்த் தாள்உமையாள் கண்களிக்க வந்தானே. 9

ஆய்மார் அறுவர்களும் அம்பிகையுங் கங்கைமின்னுஞ்
சேயேயென் றேந்திச் சிரமோத்து கொள்குருந்தோ. 10

கானந் திரிவேடர் கன்னிகைக்கா கப்பரண்மேல்
ஞானங் கமழ்பாத நண்ணவைத்த நாயகமோ. 11

புராரிசிறு வாவென்னப் பூவுலகங் காக்கும்
முராரிமரு காவென்ன முன்வந்து நின்றானோ. 12

அமரா பதியில் அமரரெல்லாஞ் சூழ்ந்து
தமராகி வாழ்த்தவெள்ளைத் தந்திமேல் வந்தானோ. 13

அண்டம் அனந்தம் அருளுருவின் நின்றிலகக்
கண்டமரர் போற்றக் கனகவரை நின்றானோ. 14

தவமுனிவர் தேவர் சயசயஎன் றேத்த
நவவீர ராமணிக்கு நடுவிருந்த நாயகமோ. 15

பொதிய முனியகத்துப் பொங்கும்இருள் நீங்க
விதியும் அறியா விளக்கேற்றுந் தேசிகனோ. 16

அருணகிரி நாதன் அருந்தமிழ்நூற் கீரன்
கருணைபெற வோதுங் கவிமாலைத் தோளானோ. 17

பிரமன் அறியாப் பிரணவத்தின் அத்தம்
அரனார் செவிகுளிர அன்றுரைத்த சற்குருவோ. 18

அரிவை முருகாஎன் றழைக்குமுன்னே வந்து
கரமுதவி நின்ற கருணைப் பெருந்தேவோ. 19

வேலைக் கலைபயின்ற மேதகுபொய் யாமொழிக்குப்
பாலைக் கடையிதென்று பகர்ந்தபெரும் பாவலனோ. 20

தார்மார் பகனோ சமரபுரி நாயகனோ
சூர்மார் புருவத் தொளைத்தவடி வேலவனோ. 21

குன்றமுங் கொக்குங் குரைகடலுஞ் சூர்மார்புங்
குன்றவடி வேலெறிந்த கொற்றவனோ நற்றவனோ. 22

சமரபுரித் தேவோ தணிகைமலைத் தேனே
அமரும் பழனிமலைக் கான மணிவிளக்கோ. 23

சீரலைவாய் முத்தோ திருப்பரங்குன் றத்தரசோ
ஏரகத்தி லென்றும் இருந்த பெருவாழ்வோ. 24

பழமுதிர் சோலைப் பரனே குறிஞ்சிக்
கிழவனென நல்லோர் கிளக்கும் பெருமாளோ. 25

சங்கப் பலகைத் தமிழைப் புலவோர்க்குப்
பங்கப் படாமற் பகர்ந்தபெரும் பாவலனே. 26

நாயினேன் செய்பிழைகள் நாடா தெனதுளமே
கோயிலாக் கொண்டு குடியிருந்த மெய்ப்பொருளோ. 27

வானவர்சூழ் போரூரை வந்தடைந்த பேர்க்கெல்லாம்
மோன சுகங்காட்டி முத்திதருந் தேசிகனே. 28

உள்ளத் திமிரம் ஒழித்துச் சிவானந்த
வெள்ளத்துள் அன்பர் விளையாட வைத்தானே. 29

அரனொடு வந்தம்மை யளித்தவள் ளப்பாலைப்
புரைதீர உண்டவரைப் போதமுறக் கண்டானே. 30

பொற்றாளம் பொற்சின்னம் பொற்பார் சிவிகையொடு
நற்றரளப் பந்தரையும் நம்பர்கையிற் பெற்றானே. 31

மதுரைச் சமண மதகரிகள் எல்லாஞ்
சிதறத் துரந்த சிவசமய கோளரியோ. 32

மயிலை நகர்தன்னில் வன்னியடும் என்பைக்
குயிலை நிகரும்மொழிக் கோதையாச் செய்தானே. 33

ஆச்சா புரத்தில் அனந்தம் உயிரையெல்லாம்
பேச்சோ டுளங்கடந்த பேரின்பம் வைத்தானே. 34

வந்தோர் பிணிதீர்க்கும் மாமருந்தோ அன்பருக்குச்
சந்தோடம் நல்குஞ் சமரபுரி மாநிதியோ. 35

தாயோ தமரோஎன் தாதையோ சற்குருவோ
தேயாக் கருணைபொழி தென்போரி வேலவனே. 36

முத்தோ குலிசமோ மூதொளிமா ணிக்கமோ
சித்தோதென் போரூர்ச் சிவானந்த வாரிதியோ. 37

பாலோசெந் தேனே பழமோ பழமறையோ
மேலோர் புகழ்போரூர் வீற்றிருந்த பார்த்திபனே. 38

அன்னமோ பைங்கிளியோ அம்பிகைகண் ணுக்கினிய
சொன்னமோ போரூர்ச் சுகபூ ரணவொளியோ. 39

ஞானக் கரும்போமெய்ஞ் ஞானனந் தக்கடலோ
தானற்ரூர் போற்றுஞ் சமரபுரித் தண்ணளியோ. 40

என்றென்றே தாலாட்டி யெல்லோரும் இன்பமுற
நன்றருளே செய்யுமெங்கள் நாதன்போ ரூர்இறையே. 41

ஆ நசஅ

---

# 14. திருப்பள்ளியெழுச்சி

திருமலி குணதிசை அருணன்நல் லுதயஞ்
செய்தனன் இருவினைச் சமமல பாகம்
பருவம துடையவர் தமதுள மெனவே
பாரகம் விளங்கின அவர்குணக் கிரிமேல்
அருளொளி வீசிநின் றிலகுமுன் பதம்போல்
அருக்கனுங் குணதிசைப் பொருப்பெழு கின்ருன்
இருளறு குறுமுனி பரவிய போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

ஆடுறு மணிமயில் சிறைவிரித் ததன்மேல்
அருளொளி திகழநீ யெழுந்தருள் முறைபோற்
பீடுறு மரகதக் குரகதம் பூண்ட
பெருந்தடந் தேர்மிசை யெழுந்தனன் கதிரோன்

வாடுறு தாமரை நினதருளடைந்த
மாதவர் முகமென மலர்ந்தன எங்கும்
ஏடவிழ் மலர்ப்பொழில் பொதுளிய போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

பகரருசுடர்விடும் உனதயில் கண்ட
பதகர்தம் மனமெனச் சுரர்மனம் எனவே
புகருடு மழுங்கின விகசித மாகிப்
பொலிந்தன முளரிகள் தடந்தொறும் உனது
திகழ்பதம் அடைந்தவர் உயிர்ச்சிறு போதந்
தேய்ந்தென மதியொளி தேய்ந்தது குணபால்
இகலறு கதிரெழு கின்றது போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 3

என்றனைக் கைப்பிடித் தாளுறும் இறைவன்
எழில்பெறு மலர்விழி மலர்ந்தெழு சமயம்
உன்றன துளஇருள் போக்குவன் நோக்கால்
ஒல்லையில் வருகென எல்லினைக் கூவி
நின்றன திருங்கொடி யழைத்துறு முறைபோல்
நீடுறு மனைதொறுங் கூவின மிகவும்
இன்றெனை யாண்டுகொண் டருளிய போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 4

மன்மதன் விருதுகள் ஊதின பொழில்வாய்
மாயவன் கரப்படை தொனித்ததுன் எதிரே
தென்மலி மலரவன் ஊர்திகள் தடத்துச்
சிலம்பின நின்கொடி பதளச் சரிக்கை
பன்முறை பண்ணுவ போல்மனை தோறும்
பாழியங் குரலொலி காட்டின அருளால்
என்மல இருள்தெறும் ஆரிய போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 5

கின்னரர் கிம்புரு டர்களொடு கருடர்
கெந்தரு வர்கள்சித்தர் வித்தியா தரரும்
மன்னிய முரசதிர் சிகரியின் வாய்தல்
வந்தனர் ஐந்தெழில் வாத்தியந் தொனித்தார்
பொன்னில மடவார் இந்நில மடவார்
புரிந்தனர் நாடகம் இருந்தகை மயில்போல்
இன்னருள் பொழிமுகி லேதிருப் போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 6

வானவர் புகழ்நவ வீரர்க ளொருபால்
மால்வரை யனகண நாதர்க ளொருபால்
தீனமில் எண்டிசைப் பாலக ரொருபால்
தேவர்கள் முனிவர்கள் பாதல ரொருபால்
தானம துதவிய கரங்கொடு பாரி
சாதநன் மலர்மழை பொழிந்தனர் பணிந்தே
ஏனலம் புனமலி சாரலம்போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 7

மறைமுடி யுணர்ந்தவர் மறையவ ரடியார்
வருபரி சாலகர் அரசர்கள் வணிகர்
குறைவறு வளவர்கள் மற்றுள ரெவருங்
குழுமியே வடமொழி தென்மொழிப் பாவால்
நிறைதய வுடன்நினைப் புகழ்ந்துநின் றேத்தி
நீளுறு தண்டெனப் பணிந்தெழு கின்றார்
எறிமணி அருவிகள் சொரிகிரிப் போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

விலையறு நவமணி மாலைகள் கொணர்ந்தார்
வெயில்விடு குலிசகே யூரங்கள் கொணர்ந்தார்
அலகறு மணிசெறி மகுடங்கள் கொணர்ந்தார்
ஆழிம தாணிகள் நூபுரங் கொணர்ந்தார்

நிலைபெறு கவிரிதழ் நேத்திரங் கொணர்ந்தார்
நிறைந்துளம் வேண்டிய பெறவுறப் பணிந்தார்
எலையறு பெருவரம் அருள்செயப் போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 9

ஐங்கரங் கொடுதழு வுறநினை யொருகொம்
பானையுள் மகிழ்ந்தது முக்கணம் பொருப்புன்
பங்கய முகஅணி கண்டுகண் களிப்பப்
பரிவொடு நினைந்தது பனிவரை யுயிர்த்த
செங்கயல் விழிப்பசும் பிடிநினை மடிமேற்
சேர்த்தருட் பால்தரத் திருவுளத் துனும்ஈண்
டெங்களை யாண்டுகொண் டருளிய போரூர்
இறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

ஆ௨ ௩௫௮

——

# 15. பெரிய கட்டியம்

••••••••••••••••

பவளமலை உபயதிசை அருவிசொரி முறைகரட
பரமஇப மகிழிளைய கோவே
தவளநிற முளகவள கரியின்மிசை சுரருலகு
தழையவலம் வருமதிக தேவே
துவிதமய லறுமுனிவ ரெனும்அளிகள் படியமிகு
சுகநறவு பொழியுமொரு பூவே
குவடிலகு குறவர்தரு கொடியிநெடு சமரபுரி
குலவியருள் வரமுதவு காவே. 1

பரவைமுக டெழும்உதய கிரணபரி தியின்நடன
பரதமயில் முதுகில்வரு தீரா
விரவுபரி மளகுரவு கமழுபய சரணகலை
விதரணிக புரணகெம் பீரா

சுரர் அரசு சசியினொடு தருநிழலின் உறையமதி
சுமடஅசு ரர்களையடு வீரா
கரவுநெறி யறும்அடியர் கதியமுது பெறவுதவு
கனசமர புரிநிலவு தாரா. 2

மறைகள்பல கலைகள்பல லிபிகள்முத லியவுதவு
வளர்சொருப நிசப்ரணவ வொளியே
முறைமைதரு சரஅசர வுயிர்கள்செயி ரறுபுவன
முழுதுநிறை பரமசுக வெளியே
கறைகள்முழு வதுமுடுகி மிகவுநினை பவரிதய
கமலமலர் குடிபுகுதும் அளியே
பிறையறுகு நதியரவு சடிலமுடி யணிபரமர்
பிரியமுற வொருசொல்மொழி கிளியே. 3

இமயகிரி யுதவுபிடி குடமுலையின் இடைபெருகி
எழுமமுத வுததிசெறி வாயா
சமரஇர ணியஅசுர னுடலம்அடும் உகிர்கொள்அரி
தருமருக னெனநிலவு தூயா
அமரர்முனி வரருரகர் நரர்ககன மதியிவர்கள்
அடிபணிய வரமுதவு நேயா
திமிரதின கரனெனவுள் இருளிரிய வொளிர்சரண
திரசமர புரிவருமு பாயா. 4

வடவைவிழி பிறையெயிறு குடவயிறு தடியுதடு
மலியலகை பசியையடு வேலா
அடியும்நெடு முடியும்அரி அயனும்அறி வரியசிவன்
அகமகிழ மழலைமொழி பாலா
நடனமிடு மயுரமிசை யடியர்நினை தொறுமவர்முன்
நகைமுகமொ டெதிர்கொள்குண சீலா
தடவரைகள் கிடுகிடென வுலகைவல நொடியில்வரு
சமரபுரி தழையவுறை லீலா. 5

ககனமுக டளவிவரு கனகரத நவஇளையர்
கருதுபுடை வரமகிழு நாதா
சகமுழுதும் அடும்அசுரர் குலமுழுது முடுகியடு
சமரகண முடிகள்தொடு பாதா
செககணக செககணக திகுதகுகு திகுதகுகு
திமிதியென நடனமயில் நீதா
தகுகடவுள் இபமயில்கொ ளொருபதிரு புயமருவு
சமரபுரி தனிலுறுசவ் வாதா. 6

உததிசுவ றிடஇடர்செய் குவடுபொடி படஅசுரர்
உடல்கள்கிழி படஅயில்கொள் கரனே
குதிகொள்கரு ணையினிலகு வதனமுடன் அடியரெதிர்
குலவிவரு மினியகுண தரனே
அதிகம்ருக மதபடிர களபபரி மளதொடைகள்
அணிகளிவை திகழ்புனித வரனே
புதியபரி புரவொலிகள் கலகலென வருசரண
புகழ்சமர புரிமருவு பரனே. 7

மலயநில வியமுனிவன் இடருதநதி யகலஅவன்
மனநினைவு கொடுதழுவு கலனே
கலைகள்தெரி பலகையுறை புலவனுறு சிறையைவிடு
கதிர்கொளயி லுடையதெய்வ குலனே
நிலைமைநெறி யுளதெரிவை முருகவென வுரைதருமுன்
நிலவியவன் கரமுதவ வலனே
தலைமைசெறி பிரமசுகம் அநுதினமும் விளையுமொரு
சமரபுரி மருவுகதி நிலனே. 8

களவில்அடு மகளையொரு பதிகமதில் வரஅருள்செய்
கவுணியர்கள் குலதிலக நிதியே
பனகஅணை யனும்அயனும் மகிழமர கதவொளிசெய்
பருமயிலின் மிசையுதய மதியே

தினகரனை நிகருமொரு சிவசமய நெறியொழுகு
திகழடியர் பரவியடை கதியே
தனபதிதன் அளகையென வளமைசெறி சமரபுரி
தனிலுறையும் அமராதி பதியே. 9

பசிதம்அரன் நயனமணி யிகழுமதி மடமைசெறி
பலசமண திமிரமடு சூரியா
நிசிசரர்க ளெனும்உததி யளறுபட வொருநொடியில்
நிகழ்கரிய புருவநெறி வீரியா
உசிததமிழ் முழுதுமொரு மதுரைநக ரவர்புகழ
உரைசெய்தள விடுமதிக கூரியா
சசிதரனும் உமையும்உளம் மகிழஎதி ருளநிலவு
சமரபுரி யதனிலுறை சீரியா. 10

ஆ ஙகஅ

---

# 16. சின்ன கட்டியம்

சுரர்முனிவருலகர்பணி பாதா-சுகசொருபநிசகலைவிநோதா
பரஅறிவை யறிய அருள்போதா - பரனுதிச சமரபுரி நாதா. 1

குறவர்மகள் தழுவுமணி மார்பா-குலவுபரி பூரணசொ ரூபா
நறவுபரி மளநிறையும் நீபா-நயசமர புரிமருவு பூபா. 2

நெட்டுர சூரசங் காரா-நித்தமிடு பச்சைமா யூரா
விட்டொளிரும்வச்சிரகே யூரா-வித்தகர்து தித்தபோ ரூரா.

குஞ்சரமு கற்கிளைய கோவே-கொஞ்சியுமை முத்தமிடுபூவே
தஞ்செனநி னைக்குமனர் தேவே-தண்சமர நற்பதியில் வாழ்வே.

ஆறுமதி சூடியருள் பாலா-ஆறஅரு ளாறுமுக வேலா
தேறுகலை பேசகுண சீலா-சீர்ச்சமர மாநகரி லீலா. 5

தேவர்கள் மநோபயங் கரனே-சேவலங் கொடியாடு கரனே
மேவுகுங் குமவாச வுரனே-வீறுசெம் போரிவாழ் பரனே. 6

தெய்வசிந்துரமருவு தோளா-திவ்யமங் களநிலவு தாளா
பொய்வருந் தேவர்மண வாளா-புண்ணியபோ ரூர்வருக ளாளா.

பலகலைப் பரவையங் துறைவா-பரமனுக் குபதேச இறைவா
தலைமையிற் குறையாத நிறைவா-சமரநற்பதிமேவுபொறைவா.

அசுரர்குல காலவேல் நேயா-அமரர்சே னுபதித் தூயா
உசிததமி ழறிதருமு பாயா-உயர்சமர புரிவருச காயா. 9

மலயத்தின் முனிவன்ஆ ரியனே-மலம்அட்ட ஞானசூ ரியனே
தலமெச்ச மேவுசீ ரியனே-சமரப்பு ராதிவீ ரியனே. 10

ஆ ௩௭௮

——

# 17. பெரிய கட்டியம்

.................

மழையின் இல கியகருணை பொழியும்மழ களிறதிக
மடியின்மிசை நிலவுகுல மணியே
உழையும்அட லுறும்மழுவும் இருகரனும் மருவுசிவன்
உவகைகொடு தழுவுதெய்வ அணியே
கழைகள்குழு மியவரையில் எயினர்தரும் உழைமனது
களிபெருக நிழலுதவு கனியே
தழையுமிரு நிதியுதவு சமரபுரி யதனில்வரு
தகைமைசெறி அடியர்குண குணியே. 1

அரியமறை முடியிலுறை பரமசிவை யகமகிழ
அருகில்வரு தருணவள வுருவே
இரவுபகல் அனுதினமும் உயர்தயவின் நினையுமவர்
இதயமல ரதனிலுறும் மருவே

உருவெனவும் அருவெனவும் ஒளியெனவும் வெளியெனவும்
உனலரிய பொருளுதவு குருவே
தரணியென இருளகல அறிவுதரு சமரபுரி
தனில்உறையும் அமரர்பணி தருவே. 2

அதிமதுர நறவுபரி மளமழகு நிறையும்அறு
பதம்முரலு மினியதொடை நீபா
பொதியமலை யுறையுமொரு குறுமுனிவன் இதயகுகை
புதையும்இரு ளறவொளிசெய் தீபா
துதையும்ருக மதபடிர களபபுள கிதஅருண
துதிசெயழ கொழுகுமணி மார்பா
ததிதிதிமி திமிதியென நடனமயில் முதுகில்வரு
சமரபுரி தழையவுறை பூபா. 3

பரிதிமர கதமலையின் மிசையுதய மெனநடன
பரதமயில் கடவும்இரு தாளா
கருதரிய தவளகர மலையுதவு மொருவனிதை
கனமகிழ்வு மருவுமண வாளா
செருவிலசு ரரைமுடுகி யடுகனக வடவரைகள்
திகழ்வதென நிகழ்பனிரு தோளா
பெருகுவள மைகளுதவு சமரபுரி பணியுமவர்
பிரமரச உணவுதவு கோளா. 4

திடகரட மலைபிளிற கொடியிலடு கரகமல
திரிநயன அரனுதவும் உருவே
வடகலைகள் முழுதுமள விடுமதிக பிரமனறி
வரியபிர ணவமுரைசெய் குருவே
இடருதவு பவவுததி சுவறநினை தருமடியர்
இதயமெழு மினியசுக மருவே
படிககனர் உரகர்முனி வரர்மருவு சமரபுரி
பணியுமவ ரெணியதரு தருவே. 5

கவலைபிணி மிடியிடர்கள் அறஅடியர் நிலைமைபெறு
    கதியில்நிகழ் வுறஅருள்செய் கோனே
உவரியென வொலிமலியும் அசுரரெனும் மதகரிகள்
    உருளஅயி லெறியும்அரி மானே
நவமருவு முனிவர்சுரர் உரகரெனும் இனியபயிர்
    நலன்மருவ அருள்பொழிமெய் வானே
குவலயமெ னுறுசமர புரியிலுறை தவமுனிவர்
    குளிரிதய கமலமுறு தேனே. 6

மலையருவி தருமரவின் மணியையன லெனவெருவு
    வனசரர்கள் தரும்அரிவை மோகா
தலைமைமக பதியமரர் பரவஇர ணியவுலகு
    தழைய இப மிசைவருவை போகா
விலையில்நவ மணிகள்கதி ரொளியின்வெயில் விடுகடகம்
    மிளிருமொரு பனிருதிரு வாகா
கலைமுழுதும் அறிபெரிய அறிஞர்வள மையினர்செறி
    கனசமர புரிநாக ரீகா. 7

அகமுநடு முடிவுமுறு திசையுமெழு புவியுநிறை
    அறிவிலெழு பரமசுக நறையே
தகுதிகுகு தகுதிகுகு தகுதிதரி கிடதிமிதி
    தகுதியென நடனமயி லிறையே
பகர்கலைகள் முழுதுமள விடஅரிய மிகநுணிய
    படிறுளமும் நுழைவரிய மறையே
துகளகலும் மறைமுனிவர் அநுதினமும் நெறியொழுகு
    துதிசமர நகரறிவின் முறையே. 8

சுருதிகுரு அநுபவமெய் யொருமையினில் எனைமருவு
    துகளிரிய அருளொளிசெய் கண்ணே
கருவிமுழு தையும்நியதி கலையுமவர் பரவியடை
    கனபுரண அறிவுதிகழ் விண்ணே

இரவிசசி அனல்நயன இறைவர்செவி குளிரவரும்
  இசைதனிலும் மிகுமொழிசெய் பண்ணே
தருணவள முருகசர வணகுமர எனுமொழிகள்
  தழைசமர புரியிலுறை தண்ணே. 9

சுடரினொளி விடுசிகைகொள் பறவைவிரு துடையகுக
  துரகமயில் இறைவதெய்வ ராயா
குடமுழவு முரசதிர அலகைபசி கெடஅசுரர்
  குலமுழுதும் அடுமயில்கொள் நேயா
படியிலுன தினியபுகழ் பரவுமவர் சுகவுததி
  படியஇனி தருள்தரு முபாயா
தடமலரின் ஒழுகுபிழி தவளவளை பருகியுறு
  சமரபுரி யதனிலுறை தூயா. 10

ஆ நஅஅ

---

## 18. சின்ன கட்டியம்

ஐங்கரற் கிளையமக மேரே-அம்புவிக் கினிமைதரு சீரே
சங்கரக் கடவுளணி தாரே-தண் தமிழ்ப் போரிவரு காரே.

இமயமக ளுதவுகுண மலையே-இதயஅநு பவமுரைசெய் கலையே, சமயமுழு வதுநிகழு நிலையே - சனனகடலரைவாரும் வலையே. 2

கன்னியர்க்குரியநாயகனே-கண்ணனுக்கினியமருமகனே [னே.
பொன்னகர்ச் சுரர்கள்நேயவனே - புண்ணியப் போரிவாழ் பவ

நவவீரர் பணிபாத தேவே-நனிபூத கணநாதர் கோவே
தவமேவுபெரியோர்கள் வாழ்வே-தடமேவுபோரிவாழ் காவே.

நீலக்க லாபமயில் வீரா - நீபத்து மாமலர்கொள் தாரா
கோலத் தியாகஎம் பிரா-கோதற்ற நாதபோ ரூரா. 5

வெடியத்தொ னித்தசே வலனே - மிகுகொக்கை யட்டவே லவனே, படிமெத்த மெச்சுபா வலனே - பரமற் குரைத்தநா வலனே. 6

பொன்மாரி பொழிகின்ற புயலே - பொய்யாத அறி ஞோர்கள் செயலே, தென்மாறன் மகிழ்பலகை இயலே - செஞ்ஞான சுகம்விளையும் வயலே. 7

கருணைதரும் ஆறுமுக மதியே-கனதேவர் சேனாதி பதியே தருணவளம் மாறாத நிதியே-சமரபுரி வாழ்சுகோ தயமே. 8

மாரவேள் வெகுிடவரு சுந்தரா - மாகர்கோன் உதவு தெய்வ சிந்துரா, கோரசூர்ப் பகையையடு தந்திரா - கோதிலா வாறுவிபி மந்திரா. 9

கவலைவெயி லறவீசு கனமே - கருதடியர் நசையான தனமே, சிவன்மரும அணைதுயிலும் அனமே-திகழ்போரி யடைவோர்கள் இனமே. 10

ஆ ௩௪அ

---

# 19. எச்சரிக்கை

சீரார்குற மானுளணி செப்பார்தன மேவுந்
தாரார்புய சமராபுரிச் சண்முகா எச்சரிக்கை. 1

பிறைசூடிய சடையானருள் பிள்ளைப்பெரு மாளே
மறையோர்நிறை போரூர்வரு மன்னா எச்சரிக்கை. 2

பனிமாமலை மிசைபூத்தருள் பச்சைக்கொடி தந்த
கனியேதிருப் போரூர்வரு கந்தா எச்சரிக்கை. 3

அருமாமறை முதலோதிய ஆனைக்கொரு துணையே
பரிபூரண சுகமேபோரிப் பதியே எச்சரிக்கை. 4

ஆறுஅமு தனையாய்அயில் வேலாவுயர் வானோர்
சேனாபதி சமராபுரித் தேவா எச்சரிக்கை. 5

தெய்வகுஞ்சரி கணவாபச்சைத் திருமால்திரு மருகா
சைவநன்னெறி வளர்போரூர்ச் சண்முகா எச்சரிக்கை. 6

வேலாகுண சீலாகன லீலாவிடைப் பாகன்
பாலாதிருப் போரூர்வளம் பதியாய் எச்சரிக்கை. 7

நவவீரர்கள் பணிநூபுர நளினத்திரு வடியாய்
தவர்சூழ்தரு சமராபுரிச் சண்முகா எச்சரிக்கை. 8

ஈராறுயர் தோளா தண்டைக் கிசைந்தபத்மத் தாளா
சீரார்திருப் போரூர்மயில் வீரா எச்சரிக்கை. 9

கோழியங்கொடி படைத்தாய்நல்ல குணத்தாயென்னை யளித்தாய், வாழியம்மலர்ப் பதத்தாய்போரி வரதா எச்சரிக்கை. 10

பூவேபரி மளமேமறைப் பொருளேமயி லேறுங்
கோவேசுரர் தேவேபோரி வாழ்வே எச்சரிக்கை. 11

பிரசமேபிரம ரசமேதவர் பேசுங்கதி நலமே
சொரூபமேபோரி நகர்வாழ்சுப்ர மணியா எச்சரிக்கை. 12

மதுராகுக்குட விருதாசிற்சுக வடிவாசுப்பிர மணியா
சதுராதிருப் போரூர்வரு சண்முகா எச்சரிக்கை. 13

ஆ சகக

---

# ௨0. திருவடிப்பற்று

## (1) வண்ணத்தாழிசை

இந்திரப்பெய ருடையான்முத லெவருஞ்செறி வளனுக்
கிடையூறுகள் வாராவகை யெணிமுற்பணி களிறென்
சிந்தைப்ரிய என்கண்சிறு பிள்ளாய்வரு கென்றே
திருமார்பிறு கப்புல்கிய தெய்வசிகா மணியே
அந்திப்பிறை முடியானரு ளின்பக்கனி நினைவந்
தண்டிப்பணி தொண்டர்க்கினி யருளும்படி நினையாய்
சந்தப்பொழி லிடைவெற்பன தந்திக்களி றுலவுந்
தண்சாரல்ம ணஞ்சூழ்தரு சமராபுரி யானே. 1

வேயென்றுறு தோள்மாதுமை வெற்பன்னத னத்தின்
மிசையூறரு விப்பாலினை மிகவுண்டுக ளித்த
வாய்குங்கும வாசந்தரு வள்ளாலெனை விள்ளா
வகையாளுநி னக்கோதுகைம் மாறுஞ்சிறி துளதோ
நாயொன்றுவ ளர்த்தோன்விட நாடானது போலும்
நல்லோர்கள டைந்தோர்களை யெள்ளாரது போலுந்
தாயொன்றிய சேயைப்புடை தள்ளாளது போலுந்
தமியேனைவி டேலண்டினன் சமராபுரி யானே. 2

ஓதுங்கலை யாவும்மனம் ஓடாதுநி றுத்தி
உன்பாதநி ழற்கீழுற லுயர்நன்கென வோத
வாதஞ்சொலி ஏதஞ்சொலி மனமோடுசு ழன்ற
மதியின்றிய சிறியேனுனை வந்தண்டுவ தென்றோ
நீதின்றிய குறநாயகி சேருந்திரு மார்பா
சிவனார்தரு குமராவுமை சிறுவாஅரி மருகா
தாதொன்றிய வனசத்தட மீதொன்றிய எகினந்
தண்மாலையில் வண்காஅடை சமராபுரி யானே. 3

ஏலும்மனம் ஓடிப்பொருள் யாதொன்றினை நாடி
இசையும்பொழு தேனும்மதை யெண்ணுதுவி டுத்துன்
வேலுஞ்சிறை மயிலுங்கன தோளுஞ்சிறு தாளும்
வீறருள் முகமும்உன வேண்டுஞ்சிறி யேனே
கோலும்மறை நாலின்முடி மேலொன்றிய தேவே
குணகுஞ்சரி கோவேசுரர் கொண்டாடிய வாழ்வே
தாலம்புக ழணியேயென துயிர்நின்றொளிர் மணியே
தவமானுறை கணியேநல சமராபுரி யானே. 4

உருவுந்தரு புகழும்பல கலையும்உய ரறிவும்
ஒருந்திகழ் குணமும்பல மாருந்தவ நெறியுந்
திருவும்அதி மதியும்பதி கதியும்நினை யொருநாள்
சேவித்தவர் தமைவந்தெதிர் தெரிசிப்பினும் வருமே
மருவுஞ்சிர புரமாநகர் வந்தெண்ணிலி பேரை
மாறுவள வீடேறிட வைக்கும்மறை முதல்வா
தருவும்மிகு நிதியுஞ்சுர பியுமன்னக ரத்தார்
தண்மேகமெ னப்பொன்பொழி சமராபுரி யானே. 5

அத்தம்மனம் உதயஞ்சிறி தறியாரவி போலுன்
அருளாகிய ரவியென்னுள மகலாதுநி றைந்தே
சித்தம்மல இருளும்பல தத்வம்மெனும் உடுவுஞ்
சிறுபோதவெண் மதியுமகல் சீரென்றினி வருமே
நித்தன்மகிழ் தரவோர்மொழி யத்தம்புகல் குரவா
நீலக்கல பத்தோகைள் மாலைப்புயல் கண்டு
தத்தாதிமி தித்தாதிகு தெய்த்தெய்யென ஆடத்
தண்காவளி பண்பாடிய சமராபுரி யானே. 6

மறையாதிய கலையோதிய வனசப்பெரு மானும்
மண்ணுண்டுவ டத்தேதுயில் பண்ணுமபெரு மானும்
நறையாரித ழித்தார்புனை சடையெம்பெரு மானும்
நாடிக்களி கூரத்தக ரேறித்திகழ் வோனே

இறையாகிய அளவாயினும் மறவாதுனை நாடி
இன்பத்துயில் கொள்ளும்படி யென்புத்தியில் நிறைவாய்
தறையாதியி லுறைவோர்பணி சரணுபரி புரண
தண்ணாரளி யண்ணுமகிழ் சமராபுரி யானே. 7

எளியேனையோ ரடியானென இன்பத்திரு வுள்ளத்
தெண்ணிச்சிறு நாயேனுளம் நண்ணச்சுக வாரிக்
களியேயுல கெங்குமிஃ தல்லாதிலை யென்றே
காட்டிப்பின் மறைத்தாயென் கண்மாயம் இஃ தென்றே
அளியேயருள் வெளியேயுயி ரொளியேமறை முடிவின்
அஞ்சொற்புகழ் பஞ்சப்பிர ணவம்ஓதிய கிளியே
தளிரேயன கையார்மயி லெனவேநட மாடுஞ்
சசிவெண்சுதை மாடஞ்செறி சமராபுரி யானே. 8

அவனேடவ ளதுயானெனும் அலர்கானலை நாடி
யான்செய்தனன் பிறர்செய்தன ரென்றின்பொடு துன்பு
நவமாய்வரு தோறும்மிகு விழைவும்வெகு ளியுமே
நணிநீயுயிர் உள்நின்றுந டத்துஞ்செயல் நாடேன்
பவவேலைக டத்தும்முன பாதத்துணை வங்கம்
பற்றத்திரு வுளம்வைத்தருள் பாலித்திடு கண்டாய்
தவராசர்கள் கவிராசர்கள் புவிராசர்கள் ஞான
தயராசர்கள் புடைசூழ்தரு சமராபுரி யானே. 9

எண்ணுஞ்செய லாயும்எழி லுடலின்செய லாயும்
யாதாயினும் நாவார இசைக்குஞ்செய லாயும்
நண்ணுஞ்செயல் வருதோறுநின் னருளின்செய லாக
நாடுஞ்செய லென்றேவரும் நாயேன்செயல் போயே
விண்ணும்புகழ் வேலும்விரி கதிரோனைய ழைக்கும்
மிளிர்செஞ்சிறை விருதுந்தரு கரமீது பிடித்தோய்
தண்ணந்துறை வாவிக்கயல் பாயக்கம லத்தேன்
சாயக்குட வளைமேய்தரு சமராபுரி யானே. 10

## (11) மட்டு விருத்தம்

ஆதரவாய் அடியவருக் கருள்சுரக்கும் ஐங்கரத்தோன் அன்புகூர்ந்து, மாதவமே யென அழைத்துப் புயத்தணைக் கத் திருவுளத்து மகிழுங் கோவே, ஏதமுரு தடியேனைக் காத்தளிப்ப துன்கடனும் இசைப்ப தென்னே, போத மலர்க் கற்பகமே போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

சிறுகுழவி யெனைக்காவென் ருய்க்குரையா துறக்காக் குஞ் செய்தி போலும், அறிவிலியேன் கா்த்திடெனு திருக்க வுங்காத் தளிப்பதுன தருட்கே யுண்டாம், உறியிலிடு நவ நீதம் உண்டவன்றன் மருகாவே லுரவா பச்சைப் பொறி மயிலே றியமுருகா போரூர்வாழ் ஆறுமுகப் புனிதவேளே.

தருமவயித் தியனுருத்தன் பிணிதீர்த்தல் கடனுகித் தணித்தல் போலச், சுருதிகுரு சுவாநுபவ மாயடியேன் மலந்தவிர்த்துஞ் சுழலா நின்றேன், மருவளரும் உனதுபய வாரீச பதநிழற்கீழ் வைக்க வேண்டும், பொருவிலருள் பொழிமுகிலே போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே. 3

என்னையொரு பொருளாகத் திருவுளத்தி லடைத் தாய்க்கிங் கெதுகைம் மாறு, மின்னனைய சடாமகுடப் பெருமான்கண் களிக்கவரும் விறல்வே லோயே, உன்னைமற வாதுன்னு துறுவேனை யுன்னடியா னென்ன வைத்தாய், பொன்னனைய திருத்தாளா போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே. 4

உவமையறு பவசலதி கடத்தியிம்மா னிடப்பிறப்பில் உதிக்கச் செய்து, நவமருவும் உனதுபதம் நாடவைத்தாய் அதைமறந்தேன் நாயி னேனே, கவலையெலாம் அற்றுனது திருவடிக்கீ ழிருக்க இனிக் கருணை செய்யாய், புவனைகர தலமணியே போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே. 5

மயக்கமிடர் காணுநின் மலர்ப்பாதப் பேரொளியில் வயங்கா நின்ற, இயக்கமறும் ஆனந்தக் கடல்படிவ தெந்

நாளோ ஏழையேனே, நயக்குமணப் பைம்பூவே நாகர்பர வியகோவே நறவே காவே, புயற்கருணை பொழிதேவே போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே. 6

மங்கியுமுற் பவித்துமுழல் வல்விடரிற் புகுதாமல் மதியி லேனை, இங்குனது பதநிழற்கீழ் வைத்தியேல் உய்கேன்மற் றேழையேனே, கொங்கலரும் பைங்கூந்தற் குறமாதின் கணவாஎண் குணவா சூழ்ந்த, பொங்கரளி பண்பாடும் போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே. 7

இல்லாதான் வள்ளலாய் உள்ளானை இரவாமுன் ஈதல் போலும், நல்லானே யுனதுபதம் விரும்பாதே னயிடினும் நல்க வேண்டுங், கல்லாத புல்லியர்போல் தேகபோ கம்விரும்பிக் கலங்கா நின்ற, பொல்லாதேன் பிழைபொறுக்கும் போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

ஊமர்கண்ட கனவினைப்போல் உரைப்பரிய சிவாநு பவம் உணரா நின்ற, காமருஞா னிகள்பரவு முனதுசே வடிநாயேன் காண்பதென்றோ, தேமருவு மலர்க்கூந்தல் தெய்வஇளம் பிடிநோக்கஞ் சேருந் தோளாய், பூமகளுக் கணிகாட்டும் போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே. 9

மடமைசெறி புலனையேன் மனந்திருத்தித் திருவடிக் கீழ் வைக்க என்றுங், கடனுனக்கே யாயிருக்க அடிக்கடி யிங் குரைப்பதென்னே கடைய னேனே, சுடரனைய செஞ் சூட்டுப் பல்பொறிச்செஞ் சிறைச்சேவல் துவசத் தோனே, புடவியிடர் தவிர்த்தாளும் போரூர்வாழ் ஆறு முகப் புனித வேளே. 10

(iii) கலிவிருத்தம்

அருணங்கரன் இணையோய்திகழ் ஆருனன நாதா
இருளின்றி யிருந்துன்பதம் என்றெய்துவல் அடியேன்
மருவொன்றிய நீபத்தொடை மார்பாவடி வேலா
திருவொன்றிய போரூருறை தேவேகுக வேளே. 1

ஈசன் தரு குமரா இம கிரியான் மகள் புதல்வா
நேசந்திகழ் இருபாவையர் நினைவொன்றிய வடிவா
மாசின்றுன தருள்நின்றிடு வழிதந்தெனை யாளாய்
தேசொன்றிய போரூருறை தேவாகுக வேளே. 2

புவனஞ்சர அசரஞ்செறி புறனுள்ளொடு கீழ்மேல்
நவமொன்றிய சுகபூரண நாதாசிவ போதா
தவமும்பதி யறிவும்நனி தந்தின்றெனை யாளாய்
சிவனின்சுத போரூருறை தேவாகுக வேளே. 3

சூர்சேனையை அடுவீரர்கள் தொழுபங்கய பாதா
ஏர்கூரஎந் நாளும்மென துளமன்னுற நினையாய்
தார்மார்பக கூர்வேலவ தடமாமயில் வீரா
சீர்மேவிய போரூருறை தேவாகுக வேளே. 4

தகரப்பரி மிசையேறிய தாளாஅணி தோளா
சுகநற்கதி பெறவெற்குள துகளற்றிட நினையாய்
நிகழ்குக்குட விருதாசுரர் நிருபாஅரி மருகா
திகழ்வுற்றிடு போரூருறை தேவாகுக வேளே. 5

நல்வந்தனை யடியாருள நாடும்படி தருவோய்
அல்வஞ்சனை யறஎன்னுளம் அருள்செய்ததில் நிறைவாய்
எல்வந்துறு வேலாமயி லேறுந்தெய்வ ராயா
செல்வந்திகழ் போரூருறை தேவாகுக வேளே. 6

கனகும்பன லுளமாவிழி காணுந்திரு வடியாய்
நினைவும்மல இருளும்அறு நிலைதந்தெனை யாளாய்
வனசந்திகழ் திருமாதருள் வளருஞ்சனர் குழுமித்
தினமும்புகழ் போரூருறை தேவாகுக வேளே. 7

அயனாரறி வருமோர்மொழி அரனார்க்கரு ளியவா
மயல்தீர்பரி புரணத்திடை வைத்தின்றெனை யாளாய்
உயர்மாமறை முடிமீதினி லுறுகாரண சுகமே
செயவேலவ போரூருறை தேவாகுக வேளே. 8

வானோர்தொழு பதியேசடை மன்னன்தரு மதியே
ஞானோதயம் அகலாதெனை நண்ணும்படி யருளாய்
கோனேயரு ளோனேகுண வானேமயி லோனே
தேனார்பொழிற் போரூருறை தேவாகுக வேளே. 9

இசையொன்றிய இயல்நாடகம் எணியோதிய புலவா
வசைவின்றி யிருந்தென்றுன தடிசேர்குவல் அடியேன்
விசைசென்றிடு மயில்வாகன மிசையேறிய கோவே
திசையெண்ணுறு போரூருறை தேவாகுக வேளே. 10

### (IV) பெருங்கழிநெடில் விருத்தம்

சோம கிரணப் பெருங்கருணை
சுரந்த முகங்க ளோராறுஞ்
சுருதி வழுத்தும் பன்னிரண்டு
தோளும் நீபத் தொடைமார்புங்
காமர் நிறச்செம் பட்டாடைக்
காட்சி மருங்குஞ் சிறுசதங்கை
கலித்த வுபய திருத்தாளுங்
கடையேன் துதிக்கப் பணிப்பாயே
சேம நிதியே சுரர்பதியே
தெய்வத் தருவே மலர்மருவே
செறிபூ ரணமே ஆரணமே
சிறியே னுயிருக் கோருயிரே
பூம னறியாப் பிரணவத்தின்
பொருளைப் பகரும் பூங்கிளியே
போற்றும் அடியார்க் கோரருளே.
போரூர் முருகப் பெருமானே. 1

மறையா கமத்தின் நெறிப்படியே
வணங்கு மவரி னொருவன்அல்லேன்
மனுபே ரன்பு தழைத்துநினை
வந்திப் பாரி னொருவன்அல்லேன்

நிறைவால் நினது புரணசுக
நேசித் தவரி ஞெருவன் அல்லேன்
நீச னேனின் திருப்பாத
நிழற்கும் உரியே னுவேனே
சிறையார் தோகை மிசைத்தோன்றுந்
தேவே யமரர் பணிகோவே
சிவனார் புயத்தி லணைத்தேத்துந்
தெய்வக் குதலை மொழிக்குருந்தே
பொறையா லுயர்ந்த பெரியோர்கள்
புந்திச் சுவையாஞ் செந்தேனே
புனித நிறைந்த செவ்வேளே
போரூர் முருகப் பெருமானே. 2

எண்ணி லாத நெடுங்காலம்
எண்ணி லாத பலபிறவி
எடுத்தே யிளைத்திங் கவைநீங்கி
இம்மா னிடத்தில் வந்துதித்து
மண்ணின் வாழ்க்கை மெய்யாக
மயங்கி யுழன்று லடியேனுன்
மாறுப் பெருமை தரும்பாத
வனசத் துணையென் றடைவேனே
கண்ணின் மணியே யுயிர்க்களியே
கருணைப் புயலே சுகக்கடலே
கச்சித் தாயுச் சியைமோந்து
கண்ணே டணைக்குந் திருத்தாளா
புண்ணியோ ரெண்ணிய கரும்பே
பொழிமும் மதவா ரணமுகத்தோன்
பொற்பார் துணையே அற்புதனே
போரூர் முருகப் பெருமானே. 3

கள்ளஞ் செறிந்த வஞ்சநெஞ்சக்
கயவ னேனைப் புலையனெனைக்
கருதா சார ஈனமுடைக்
கசட னேனை மயல்செறிந்த
உள்ள முடைப்பொய் யவனேனை
உன்பே ரருளா லுறநோக்கி
உயர்பே ரின்பத் திடையிருத்தா
துறில்நா யடியேன் உய்வேனோ
வெள்ளஞ் செறிந்த சடாமகுட
விமலன் புதல்வா அரிமருகா
வேடர் குலமா மகள்கணவா
விறல்மா முனிவர் தொழுந்தலைவா
புள்ளும் ஞிமிறுங் கலந்தார்க்கும்
புனித நீபத் தொடைமார்பா
புரைதீர் தகரப் பரியேறும்
போரூர் முருகப் பெருமானே. 4

சீல மிகுந்த பத்திநெறி
தினமு மாறா நடையினராய்ச்
செலுத்தா நெறியிற் பொறிவழியிற்
செல்லா திருந்த வுளத்தினராய்க்
கோலஞ் சிறந்த படியேநற்
குணமுஞ் சிறந்தோ ராகியுனைக்
கூடும் அடியார் போலெனையுங்
குறித்தாட் கொண்டாய் நீயன்றோ
நாலு வேதந் தொழுதேத்து
நாத முடியிற் பேரொளியே
நம்பும் அடியார்க் கின்பமெல்லாம்
நல்குந் தேவே கயவர்தமைப்

போலுந் திரிந்தேன் உளம்புகுந்த
போதா னந்தப் பெருங்கடலே
புவியீ டேற மயிலேறும்
போரூர் முருகப் பெருமாளே.

தனுவோ டிலகு கரணமுடன்
சாரும் போக புவனம்இவை
தமையான் எனதென் றுணர்ந்துமயல்
தழைத்துத் தருக்கோ டுழல்கின்றேன்
உனதாம் அவைகள் மாயையிடை
உதிக்கச் செய்தாய் நீயதனுல்
உள்ள வாறிம் முறைமைதனை
உணராச் சிறியேன் உய்வேனே
பனகா பரணர்க் குபதேசம்
பாலித் தருளும் பரகுரவா
பைந்தார்க் கூந்தல் தெய்வானை
பரிந்து மகிழ வருகணவா
புனைபா மாலை தரித்தேத்தும்
பொருவில் அருண கிரிநாதன்
புகழ்வீட் டின்பம் பெறவுதவும்
போரூர் முருகப் பெருமாளே. 6

மன்ன ராவா ருறுசுகமும்
வானோர் மகிழ்ந்து பெறுசுகமும்
மணிப்பைந் நாகத் தவர்சுகமும்
மற்றை யோர்கள் அடைசுகமும்
பன்னு மிடத்திற் சிவந்தெழுந்த
பரமா னந்த லேசமெனப்
பகர்ந்தாய் குருவா யெழுந்தருளிப்
படிறேன் மறந்திங் குழல்கின்றேன்

கன்ன லெழுந்த தெளிசாறே
கட்டு மாவின் தீங்கனியே
கதலிக் கனியே நற்பலவின்
கனகச் சுளையே கதிமுளையே
பொன்னம் பொருப்பே யென்விருப்பே
போதச் சுகமே கிஞ்சுகமே
புரண வெளியே யுள்ளொளியே
போரூர் முருகப் பெருமானே. 7

ஓகை புரிந்து நன்னூலால்
உணரத் தகுவ வெலாம்உணர்த்தி
உறுபே ரருளா ரியனாகி
உபதே சங்கள் பலமொழிந்தீண்
டாக மருவும் உயிர்க்குயிராய்
அறியா தனயா வையுமுணர்த்தி
அடியேன் தனையிங் காண்டுகொண்.
அருளுக் கோர்கைம் மாறுளதோ
வாகை புனைவேல் இறையோனே
வழுத்து நாலு மறையோனே
வானோர்க் குறுசே னாபதியே
மலய முனிவன் குருபதியே
பூக மலிந்த செங்குலைக்காய்ப்
புடையிற் சிதறக் கயல்பாயும்
பொருவின் மருதச் சூழல்செறி
போரூர் முருகப் பெருமானே. 8

வேத முடியின் உறுபொருளை
விரிபூ மிசைச்சே வடிபொருந்த
விகிர்த குருவா யெழுந்தருளி
விளம்பும் அவித்தை இருளிரிய

ஓது மணியே யடியேனுன்
உபய சரணம் மறந்தாலும்
உறுபே ரருளால் மனந்திருத்தி
உயரச் சரணத் திருத்தாயே
நாத மளிக்குங் குரற்புலியின்
நகம்போல் துண்டச் செஞ்சூட்டு
நலத்த பொறிச்செஞ் சிறைச்சேவல்
நளினக் கரத்திற் பிடித்தோனே
பூத கணங்கள் கொண்டாடப்
பொருசூர் குலவேர் களைந்தவைவேல்
புனிதப் புயத்தின் மிசையேந்தும்
போரூர் முருகப் பெருமானே. 9

அலையி லாத சாகரம்போல்
அனிலஞ் சேரா விளக்கதுபோல்
அருங்க லிரும்பொன் சமமாகி
ஆன தராசின் நுனியதுபோல்
நிலையொன் றியநற் சமாதியுற்று
நின்தாள் கமலத் தெழும்பிரச
நிறைவா ரிதியிற் புகுந்ததனில்
நேசித் தடியேன் இருப்பேனோ
விலையின் மகுடத் திருமுடியாய்
மிளிர்குண் டலங்கள் செறிகாதா
வியன்கே யூரத் திருத்தோளா
விஞ்சுஞ் சதங்கை சூழ்தாளா
புலையுங் கொலையுங் களவுமில்லாப்
புனிதத் தவத்தோர் தொழுதேத்தும்
புராரி குமரா வுமைசிறுவா
போரூர் முருகப் பெருமானே. 10

ஆ ஈடுக

# 21. குயிற்பத்து

••••••••••••••••••

நன்றருளுதவைங் கரவன் துணைவனை நனிபனி மலைமகள் மகனைக் குகனை, மன்றினுளாடிய கொன்றைச் சடைமுடி மன்னன் உவப்புறு பொன்னங் குழவியைக், கன்றுகுறுந்தடி யாவிள எறிதரு கண்ணன் மருகனை யெண்ணுந் துணையைக், குன்றுதொருடிய போரூ ரிறையைக் கூவாய் வரநீ கூவாய் குயிலே. 1

மறைமுடி குலவிய பிரமர சத்தினை மருவடி யவருள மலர்வா சத்தினை,நிறைசர அசர வுயிர்ப்புர ணத்தினை நிமல கதிக்கொரு வித்தினை முத்தைச், சிறைமயில்உதயச டானன ரவியைத் தேவர்கள் தொழவரு தேவைக் காவைக், குறைவறு வளநிறை போரூ ரிறையைக் கூவாய் வரநீ கூவாய் குயிலே. 2

அரிவைய ரெனவரு காகத் திரள்களை அணுகேல் மயலெனும் அலகா னலியும், இருநிதி சுதரெனும் மேகமெமுந் திக்கெய்தேல் கவலைத் திவலைகள் வீசும், பொருவரு சமயக் காடணுகேல்தற் போதமு ரத்தெழு வாதம் அலைக்குங், குருபர னாம் போரூ ரிறையைக் கூவாய் வரநீ கூவாய் குயிலே. 3

சுயவர்க ளெனும்வல் லூறு களிக்குங் காடணு கேல்தீதுயிர்உடல் தைக்கும்,மயல்மிகும் உலகவர் வாழ்வெனும் ஓட்டினை மதியேல் அதுமதி வன்சிறை பற்றும், உயுநெறியினராங் கிள்ளைக ளுடனே உயர்நூற் கற்பக தருவிலிருந்து, குயின்மணி மாடப்போரூ ரிறையைக் கூவாய் வரநீ கூவாய் குயிலே. 4

பற்பல்வி தப்பூச் சோலைபு காதே பரிபூ ரணமாம் மேகச் சோலையில், எற்பெற நீயெங் காளும் மகிழ்ந்தங் கிதுஅது என்றூன் றையுநா டாமே, செப்பம தாய்நின் னையும்நா டாமே சீரருளேவடி வாகி யிருந்து, குப்புகழ் போருரப்பனை நாடிக் கூவாய்வரநீ கூவாய் குயிலே. 5

விடயக் கண்ணியி னிற்புகு தாதே மிகுபொறி யென்
பது பொறியதை மேவேல், உடலப் பஞ்சரம் யானென
மகிழேல் ஓதுந் திசைமே விப்பற வாதே, மிடையிற் சித்
திர நற்புள் ளதுபோல் மிளிர்பூ ரணமா மீதி லிருந்து,
கொடைமிக் குதவிய போரூ ரிறையைக் கூவாய் வரநீ
கூவாய் குயிலே. 6

இன்றைக் கெனவும் நாளைக் கெனவும் எண்ணேல்
மயிலிறை இன்னமு தூட்டும், பொன்றப் படுசுக துன்புக
ளுன்னிப் பூரிப் பொடுவாட் டங்க ளுறாதே, ஒன்றைக்
கருதியி தென்ன தெனாதே யுயர்கதி யின்பைக் கருதிக்
கருதிக், குன்றைப் பொருதடு போரூ ரிறையைக் கூவாய்
வரநீ கூவாய் குயிலே. 7

நிராசை யுடனருளேவடி வாருந் நின்மலன் இருசே வடி
நிழல் தங்கிப், புராதன மாய்நிக ழுறுமா னந்தப் பொங்
குர சச்செங் கனிநனி துய்ப்பப், பராபர னேகுக னேமயி
லோனே பண்ணவ னேவிண் ணவனே என்று, குராவணி
வோனைப்போரூ ரிறையைக் கூவாய் வரநீ கூவாய்குயிலே.

சேவற் கொடியுடை யானே யென்றுந் திகழொளி
தருசாம் பூனத தங்கப், பாவைக் கிணையொப் பாரிரு
வோர்தம் பண்புறு மின்பக் கணவா என்றும், யாவர்க்
குந்தலை மையனே யென்றும் எழில்மறை புகழ்தரு
பொருளே யென்றுங், கோவைப் போரூர் வாழ்வைக்
கருதிக் கூவாய் வரநீ கூவாய் குயிலே. 9

சூர னுரங்கிர வுஞ்ச பொருப்புத் துணிபட வடிவேல்
விடுவோய் என்றுந், தாரணி பன்னிரு புயனே யென்றுஞ்
சரவண னேசண் முகனே யென்றுந், தேர்நவ வீரர்கள்
துணைவா என்றுந் தேவர்கள் சேனா பதியே யென்றுங்,
கூரறி வினர்புகழ் போரூ ரிறையைக் கூவாய் வரநீ
கூவாய் குயிலே. 10

ஆ சகூக

— —

# ௨௨. கிளிப்பத்து

••••••••••••••••••

பவள நிறச்செந் திருமேனி பஞ்சக் கரவானைக்கிளையோன் தவள நிறப்பொடி பூசும்அரன் தந்தருள் நீபத் தாரழகன் கவுரி கொடுக்கும் முலையமுதக் கமலத் திருவாய் வழிசிறுவன் புவனம் மதிக்கும் போரூரன் புகழ்பே சிக்களி கிளிநீயே.

கன்னிய ரிருவோர் நாயகனைக் கமலக் கண்ணன் மருமகனை, மின்னிய வடிவே லுடையவனை வீரனை யாரினுந் தூயவனை, அன்னிய மில்லா தெங்குநிறை ஆரண னைப்பரி பூரணனைப், பொன்னியல் மாடப் போரூர்வாழ் புண்ணியனைக்கிளி பன்னுதியே. 2

மரகத முடிமேல் ஆறுமுடி மாணிக் கக்கிரி வருவது போல், விரைசெலும் மயில்மேல் வருவோனை வெற்றி கொள் குக்குட விருதோனைப், பரைதரு பிள்ளைப் பெருமானைப் பண்பழ கெழுதருஞ் செவ்வேளைத், தரைபுகழ் போரூ ரிறையவனைத் தண்கிளி பேசாய் அன்புறவே. 3

உலகினை நொடிவலம் வந்தானை யும்பர்கள் நகர்வலம் வந்தானைப், பலகலை முழுதும் அறிந்தானைப் பரகதி யடைநெறி தந்தானைச், சிலுகிடும் அசுரரை வென்றானைத் தேவர்கள் பரவிட நின்றானை, இலகிய போரி யிருந்தானை யிசையாய் கிளியே நசையாயே. 4

எனையொரு பொருளா யுளமதனில் எணியருள் பொழியுஞ் சுகமுகிலைக், கனைகட லமுதைச் செந்தேனைக் கன்னலை ரசதா ளிக்கனியை, நனைவழி பலவின் பொற்சுளையை நசைதரு கட்டு மாங்கனியைப், புனைமதில் சூழ்போ ரூரிறையைப் பூங்கிளி சொலுதி தீங்கறவே. 5

வாளைகள் பூகச் செங்குலையின் மன்னிய பொன்னுல குறுதென்னம், பாளையின் மோதச் சிதறிவயற் பவளந் தரள மெனத்திகழக், காளைய மள்ளர்கள் மடைதோறுங் கால்வாய் தோறும் அணைகோலும், நீளணி போரூர் நாய கனை நிமலக் கிளியே புகல்வாயே. 6

சாரலி னரைப் பரிமளமுந் தண்டலை யுறுசம் பகமணமுந் தீர முறுங்கே தகைமணமுஞ் சீர்நந் தனமல் லிகைமணமும் நாரியர் குழலூட். டகில்மணமும் நாகர் வியப்புற வேவீசும் பேருறு போரூர் நாயகனைப் பேசாய் கிளியே மாசறவே.7

ஆறுச ரோருக முகனென்றும் அணிதிகழ் பன்னிரு புயனென்றும், பேறுத வும்பத யுகனென்றும் பெயர்வே லொளிருங் கரனென்றுந், தேறுமு ளத்தினர் வாழ்வென் றுந் தேவர் தமக்கொரு கோவென்றும், வீறுயர் போரூர் நாயகனை விளம்பாய் கிளியே கலங்காயே. 8

முருகா குமரா சரணென்றும் முதிரா வயதாய் சர ணென்றும், நிருபா திகனே சரணென்றும் நிமலா குகனே சரணென்றும், அருகா வொளியே சரணென்றும் அருளே பொருளே சரணென்றும், மருவார் பொழில்சூழ் போரூர் வாழ் மயிலோனைக்கிளி புகல்வாயே. 9

இன்பக் கடலே சரணென்றும் எண்குண மலையே சரணென்றும், அன்பர்க் கமுதே சரணென்றும் ஆருயிர் முதலே சரணென்றும், அன்புக் கறிவே சரணென்றும் வளர்பிர ணவமே சரணென்றுங், கொன்பெற் றுறுபோ ரூரிறையைக் கோலக் கிளியே ஓதுவையே. 10

ஆ சளக

——

# 23. வண்டுவிடுதூது

மூக்கா லுமுதுண் ணும் வண்டுகாள் முத்தோன் இள வலைக் கண்டுதான், தேக்கா ரமுதரன் மைந்தனே சீர்ப் பார்ப் பதிதரு கந்தனே, நோக்கா யுனைநினைந் தன்பினல் நோற்பாள் தனையின மென்றுநீர், மாக்கா வளமலி போரி வாய் மாத்தா ளிணைதொழு தேத்துமே. 1

தாமரைப் பூமணத் தேனெலாந் தண்டுறை யுண் டுறை வண்டுகாள், கோமளப் பாவையர் கேள்வனைக் கொண்டை மயூரப்ர சண்டனைப், பாமணப் போரியிற் கண்டிதோர் பாவைப ணிந்தன ளென்றுதான், நீர்மனத் தன்பொடு பேசுவீர் நீள்சுகப் பொய்கையில் முழ்கவே. 2

தாதினைத் தேனுடுங் கூட்டியே சந்தனம் பூசிய வண்டுகாள், ஆதரித் தென்னைமுன் ஆண்டவன் ஆறுமு கப்பெரு மாளுடன், பேதமைப் பான்மைய ளாயினும் பிச்சியை யொத்தவ ளேனுமியான், முதருட் பேரமு தாழிவாய் முழ்கிடப் பேசுமின் நீவிரே. 3

சோலை விருந்திட வுண்டுதான் சோபனம் பாடிய வண்டுகாள், காலமெ லாமுனை யேநினை காரிகை கை தொழு தாளென்றே, ஆலையின் வாயென மேதிவாய் அம் புயத் தேன்சொரி போரிவாழ், வேலவன் நூபுரக் கஞ்ச மேல் விழுந்தெழுந் தாடிவி ளம்புமே. 4

கோங்கலர் மாழைம தாணிமேற் குயின்ற மணியன்ன வண்டுகாள், மாங்கனி வாழையின் தீங்கனி மன்னு பலாக் கனிச் சாறெலாந், தேங்குறும் போரியி லுண்டுநீர் செவ் வேள் பதம்பணிந் தேத்தியே, ஓங்கொளி வீடுற நாயி னேன் ஓதுமின் என்துணை நீவிரே. 5

சந்தனச் சாரலின் நெய்தலில் தண்டலை நந்தனச் சூழலில், வந்தொரு நால்வகைப் பூநறை வாசந் துளைந்தாடும் வண்டுகாள், கந்தனைப் போரிவி சாகனைக் கண்டென் கவலைக்க ருத்தறச், சிந்தை மகிழ்ந்தெனை யாளவே செப்புமின் எற்குற வானிரே. 6

மல்லிகைத் தாதரித் துண்டலர் வாரிசத் தேன்கொடு வாய்கழீஇ, மெல்லிதழ்ப் பூவணை மீதிலே மென்துயில் கொண்டுறை வண்டுகாள், அல்லியல் நெஞ்சினள் அன்பிலா ளான நெறிபுரி யாதவள், புல்லிய ளென்றுவிடாதெனைப் போரி முருகனுக் கோதுமே. 7

தண்டலை யூர்விண்டு நெய்தலூர்த் தாவடிபோய்ப் பனைக் கள்ளெலாம், மொண்டு மிகக்கொள்ளை கொண்டுதான் மொய்த்து வருஞ்சிறை வண்டுகாள், பண்டெனை யாண்டருள் நேசனைப் பண்புறு போரியில் வாசனைக், கண்டினம் ஆண்டுகொ ளென்றுநீர் காண வுரைத்திடுவீர்களே. 8

மாமலைச் சேணிலத் தேதுஞ்சி வார மனைபுகுந் துண்டுபின், கோமலர்க் காமுக சாலையிற் கூடும் அரசிள வண்டுகாள், தேமலர்த் தார்புனை மார்பனைச் செஞ்சிறை யஞ்சேவ லாளனைக், காமணக் குந்திருப் போரிவாய்க் கண்டெனை யாண்டிடச் சொல்மினே. 9

நீல நிறப்பொறி வண்டுகாள் நித்தலுங் கைதொழுவேன்உமை, ஏல வுரைத்த மொழிகளை யெல்லாம் அயர்த்து விடாதுநீர், சால நிகழ்த்திடும் போரிவாழ் சண்முக வேலனுக் குங்களைப், போலு மெனக்குற வுண்டுகொல் பொங்கரும் நுங்களுக் கீவலே. 10

ஆ சஅக

---

# 24. சித்தொளி

—: ✱ :—

### (1) கட்டளைக்கலிப்பா

அருளி ருந்தநின் பாத மடைந்தவர்
அன்பி ருந்தநெஞ் சாலுனி வாழ்த்தியும்
மருவி ருந்த மலர்தூய் வணங்கியும்
மன்னு காலங் கழித்தனர்: நாயினேன்
உருவி ருந்தயர் கின்றபொய் வாழ்க்கையை
உன்னி யுன்னி யுழன்றே மயங்கினேன்
தருவி ருந்த பொழில்வளம் மன்னிய
சமர மாபுரிச் சண்முக வேலனே. 1

கானல் நீரினை மெய்யென்ற வாவியே
கனவி டாய்கெட வுண்ணக் கருதினே
னை நீருவர் நீரென நாடுவ
தன்ன மாமய லென்றினி யாறுவேன்
வான நாடரும் மாமுனி வோர்களும்
மதித்த ஆரண முந்துதித் தேதொழுந்
தான மாமழை யானைக்கி ளையவா
சமர மாபுரிச் சண்முக வேலனே. 2

கனவி லேகண்ட காட்சிகள் யாவுமக்
கனவிற் பொய்யெனக் கண்டுத னைக்கண்டோன்
பினையும் அந்தக் கனவினை மெய்யெனப்
பேணு மாறும யங்கினென் பேதையேன்
அனையுந் தாதையும் ஆரிய னும்மெனை
ஆண்ட தெய்வமும் நீயென நம்பினேன்
தனிவி டேலுன்றன் சித்தமென் பாக்கியஞ்
சமர மாபுரிச் சண்முக வேலனே. 3


A. No. 25808

பழுதை பாம்பல என்றுளி யாற்கண்டும்
பாம்பு வாதனை தீரா தவனென
எழுமுன் சிற்சுகம் நின்னரு ளாற்கண்டும்
இந்நிலைப் பொய்மை வாதனை நீங்கிலேன்
முழுது ணர்தல் முதலாய எண்குண
மொய்த்த பஞ்சர மேமறை யுச்சியே
தழுவு வெண்சுதை மாளிகை நீடிய
சமர மாபுரிச் சண்முக வேலனே. 4

பிரண வத்தை விடஅக ராதிய
பிறங்கு ரூத பரிசெனப் பேதமாம்
முரண வித்த சொருபம்விட் டிவ்வுயிர்
முதல இன்றென என்றனக் கோதினேய்
அரணெ ரித்தவன் மைந்தநின் தாள்துணை
அண்டி னேற்கு மவித்தையுண் டாகுமோ
தரணி யைக்கண்ட பேர்க்கும் இருளுண்டோ
சமர மாபுரிச் சண்முக வேலனே. 5

இந்த்ர ஜாலம்பொய் யென்றதன் மூலத்தை
இயம்பிக் காட்டக்கண் டோன்மயக் கெய்தல்போல்
பந்த ஞாலம்பொய் யென்றிதன் மூலநீ
பகரக் கண்டும் படிறேன் மயங்கினேன்
கொந்து லாவிய கொன்றைச் சடாடவிக்
குழக னுக்கழ கானகு மாரனே
சந்த னடவிச் சாரல்வி ரைதருஞ்
சமர மாபுரிச் சண்முக வேலனே. 6

பளிக்கு மண்டபத் தேயுறு நாய்அதன்
பன்னி ழற்குளும் மெய்யென நாடல்போல்
ஒளிக்கு மாயையி னின்றெனை யெண்ணிலா
உருவ மாக்கண் டுழன்றனன் ஐயனே

வெளிக்கு ளேவிளை யுஞ்சுக வாரியே
 வித்தி லாதெழு சுத்தசொ ரூபமே
தளிர்க்கை யார்கள்ந டிக்கின்ற மாடமார்
 சமர மாபுரிச் சண்முக வேலனே. 7

மைந்த னேதுபி ழைபுரிந் தாலுமே
 மன்னு தாதைபொ றுத்தருள் செய்தல்போல்
எந்தை யென்பிழை நீபொறுத் தாள்வதுன்
 இனிய பேரரு ளுக்கியல் பாகுமே
அந்த ணரிய னாகிவந் தேழையேற்
 கருள முதம ளித்தகண் ணாளனே
சந்திர காந்தத்த கடொளிர் மாளிகைச்
 சமர மாபுரிச் சண்முக வேலனே. 8

விண்ணி லேயெழும் இந்திர சாபத்தை
 மேக மின்னலை யொத்தெழு காயங்கள்
எண்ணி லாதஎ டுத்திளைத் தேனையென்
 றின்ப வாரியில் வைத்தினைப் பாற்றுவாய்
கண்ணி லேகண்ட சித்தொளிக் காட்சியே
 கருத்தி லேகண்ட இன்பசந் தோடமே
தண்ணி லாமுடி வேணியர் செல்வமே
 சமர மாபுரிச் சண்முக வேலனே. 9

காலன் செங்கட்க டாவினி லேறியே
 கயிறு வீசிப் பிடியா முனமெனை
வேலுஞ் செங்கையி லேந்தி மயில்மிசை
 விரைவில் வந்துவந் தஞ்சலென் றாளுவாய்
ஆல முண்ட களத்த ரிடத்துறை
 அரிவை கொஞ்சுறக் கொஞ்சுபைங் கிள்ளையே
தாலம் பாளை மதுக்குடம் ஏந்திய
 சமர மாபுரிச் சண்முக வேலனே. 10

## (II) கொச்சகக்கலிப்பா

மாணிக்க மாரிசொரி வானம்போல் நாயேனைப்
பேணிக்க ருணைபொழி பேரின்ப மாப்புயலே
வீணிற்கா லங்கழிக்கும் வெவ்வினையேன் நெஞ்சகத்துன்
தாணிற்க வைப்பாய் சமரபுரி நாயகமே. 1

பெரும்பே தமையேன் பிழைகுறியா துள்புகுந்த
அரும்பே ரருளாலென் னுகங் குளிர்ந்தேனே
கரும்பேயென் னுருயிரின் கண்ணிருந்த கண்ணே
தரும்போ தகமே சமரபுரி நாயகமே. 2

பேராத சுத்தவெளிப் பேரின்ப சாகரத்தே
ஏராக நாயேன் இருப்பதினி எந்நாளோ
வாராருங் கொங்கையுமை மடிமேலுந் தோள்மேலுஞ்
சாரா வளருஞ் சமரபுரி நாயகமே. 3

காட்டுவதுங் காண்பதுவுங் காட்சியும்போய் நின்றஇன்ப
வீட்டினிடைத் துயின்றே வேசறிக்கை தீர்வேனே
மாட்டின் மிசையேறு மகதேவர் சேயேநின்
தாள்துணையே தஞ்சஞ் சமரபுரி நாயகமே. 4

ஏரகம் அன்பாகி யெழிலுறுபா ஈந்தோர்க்குன்
சீரகமீந் தின்புதவுஞ் செல்வமலி தேசிகனே
நாரகமொன் றில்லாத நாயேனை யாளெவைக்குந்
தாரகமே சேயே சமரபுரி நாயகமே. 5

பாலுக்குள் வெண்ணெயெழு பான்மைபோல் என்னுளத்தின்
சீலத்தை யெல்லாந் தெளிவிப்ப தெந்நாளோ
வேலுக் கரசே விறல்மா மயிற்கரசே
தாலத் தரசே சமரபுரி நாயகமே. 6

வெள்ளைச்சோ மன்தரித்த வேணியனர் ஆனைமுகப்
பிள்ளைக் கிளையதிருப் பிள்ளைப் பெருமாளே
கள்ளத்தே னுக்குன் கருணையின்பங் காட்டியதைத்
தள்ளத் தகுமோ சமரபுரி நாயகமே. 7

சோரிவேற் கண்ணியர்மேல் தொல்புவிமேற் பொன்ன
வாரி யலேபோல் வருமாசை தீர்வேனே [தன்மேல்
நாரியிடப் பாகருக்கு நான்மறையின் உட்பொருளேத்
தாரிபெற வோதுஞ் சமரபுரி நாயகமே. 8

காமர்குறப் பெண்மானுங் காமுறுதெய் வப்பிடியுங்
கோமளஈ ராறுபுயக் குன்றிலுறச் சேர்ப்போனே
ஓமெனும் வித்துள்ளே யுதித்ததரு வேயெனையுந்
தாமரைத்தாள் சேராய் சமரபுரி நாயகமே. 9

கும்பமுனிக் கின்பமெல்லாங் கொள்ளைகொள்ளத் தந்தருள்நீ
வம்பனேற் கின்பம் வழங்குவதும் உண்டாமோ
செம்பதுமக் காடலர்ந்த தேசுதரு பேரழகா
சம்புதவும் மைந்தா சமரபுரி நாயகமே. 10

ஆ ௫0௧

—

# 25. ஊசல்

சுந்தரமா கந்தொடு மண்டபத்தி னூடே
சுரர்தருக்கள் நாற்றிசையும் நிறுத்தி நாப்பண்
முந்தியசாம் பூனதச் சங்கிலிகள் பூண்ட
முதிர்கதிர்வீ சுங்குலிசப் பலகை மீது
சிந்தைமகிழ்ந் தினிதிருந்தே அரம்பை மாதர்
செங்கரங்கள் கொண்டுசிறப் பொடுமின் ரூட்டத்
தந்திமுகற் கிளையவரே யாடீ ரூசல்
சமரபுரி நாயகரே யாடீ ரூசல். 1

வடவரையோர் பன்னிரண்டின் முடியின் மீதே
மார்த்தாண்டர் பன்னிருவ ருலாவல் போலுஞ்
சுடர்மணிவீ சுங்குழைகள் புயங்கள் மீதே
தோய்ந்தாட மார்பிலகு மதாணி யாடக்

கடகநிரை யசைந்தாட மகுடம் மின்னக்
கமலபதச் சிலம்பொடுகிண் கிணிக ளாடத்
தடவரைகள் கிடுகிடென மயில்ந டாத்துஞ்
சமரபுரி நாயகரே யாடீ ரூசல். 2

கங்கைமுடித் தாதையுளத் துவகை பூப்பக்
கணபதியா கியதமையன் களித்து நோக்கப்
புங்கநவ வீரரெனும் இளவ லானோர்
புடையின் நின்று பணிகேட்ப இடைவிடாமே
செங்கண்மா லெனுமாமன் வியந்து போற்றச்
செழுமறைமைத் துனன் தரிசித் தங்கை கூப்பத்
தங்கமணிச் சிலம்படியென் சென்னி சூட்டுஞ்
சமரபுரி நாயகரே யாடீ ரூசல். 3

இந்திரன்வேத் திரங்கொடுகட் டியங்கள் கூற
இரவிசசி யிருபாலுங் கவரி வீசச்
சுந்தரமா மதனுருக்கொண் டடைப்பை யேந்தத்
துணையுடனேழ் திசையவரு ழியங்கள் செய்யக்
கந்தருவர் தும்புருநா ரதரும் யாழின்
கன இசையும் மிடற்றிசையுங் கலந்து பாடச்
சந்தமுறு புழுகுமண மெங்கும் வீசச்
சமரபுரி நாயகரே யாடீ ரூசல். 4

நவமேவு பூதகண நாத ராட
நாடரிய தேவர்கள்பூ மாரி வீசச்
சிவமேவு முனிவரர்பல் லாண்டு கூறத்
திகழுரகர் மாணிக்க மாரி தூவப்
பவவேலை மூழ்காத அடியர் நாடிப்
பரிந்துபர மானந்தக் கடலின் மூழ்கத்
தவமேவும் அந்தணர்கள் வேதம் ஓதச்
சமரபுரி நாயகரே யாடீ ரூசல். 5

இமயமலை தனிற்பிறந்த நற்றாய் வாழ்த்த
எழிற்சடையிற் குடியிருக்கப் பெருந்தாய் வாழ்த்தக்
கமலமலர் மாமியுளங் களிந்து வாழ்த்தக்
கலைவாணித் தங்கைபுயம் புகழ்ந்து வாழ்த்த
அமரர்புகழ் சசிமுதலாம் அரம்பை மாதர்
ஆலத்தி யெடுத்தேத்த அருகில் நின்று
சமைவுறுநற் றேவிமா ரிருவர் போற்றச்
சமரபுரி நாயகரே யாடீரூசல். 6

அருணகிரி நாதன்மகிழ்ந் தோது பாடல்
அருந்தமிழ்நூல் தெளிந்திடுநக் கீரன் பாடல்
இருள்நையமெய் யன்பர்குழாம் இசைந்து பாட
இன்னியங்கள் ஐவகையின் சும்மை யார்ப்பக்
கருணைபெறும் அரசர்வணி கேசர் மேலாங்
காராளர் முதலெவருஞ் சேவை செய்யத்
தருணவளம் மாருத பெருமை மேவுஞ்
சமரபுரி நாயகரே யாடீரூசல். 7

மகளிரினம் மயிலினம்போல் நடனம் ஆட
வண்டினங்க ளவர்குழல்மா லையினின் றூடப்
புகரறுமெய் யன்பரின்ப நடன மாடப் [டாட
பொன்னுலகோர் மண்ணுலகோர் புகழ்கொண்
இகலுறுபொய் யவுணருளம் நனிதிண் டாட
இலைவேலின் வலியலசை பாடி யாடத்
தகைமைசெறி அளகைநிகர் வளமை மேவுஞ்
சமரபுரி நாயகரே யாடீரூசல். 8

கோழியெழு தியவிருதும் வேலுந் தோகைக்
குரகதமும் உடையவரே யாடீரூசல்
ஊழியனற் சினச்சூரன் சேனை யெல்லாம்
ஒருங்கறுத்த சேவகரே யாடீரூசல்

ஆழியலைத் துயரமெல்லாம் அகற்றி யென்னை
    ஆண்டுகொண்ட தேசிகரே யாடீ ரூசல்
தாழியளை களவுகொண்டோன் மருக னீர
    சமரபுரி நாயகரே யாடீ ரூசல். 9

பொதியமுனி குருபரரே யாடீ ரூசல்
    புவிவாழ அருள்பவரே யாடீ ரூசல்
முதியதமிழ் உரைத்தவரே யாடீ ரூசல்
    முத்தியெனக் களித்தவரே யாடீ ரூசல்
அதிகவடி வழகினரே யாடீ ரூசல்
    அகிலமறை நிகர்ப்பவரே யாடீ ரூசல்
ததையுமலர்த் தாரினரே யாடீ ரூசல்
    சமரபுரி நாயகரே யாடீ ரூசல். 10

ஆ ருசுசு

---

# 26. சிற்சுகம்

(1) விருத்தக்கலித்துறை

வடமலை வில்லான் உதவிய வொற்றை மருப்பாளன்
திடமுறு துணையே யெனதுயிர் நிறையுஞ் செவ்வேளே
இடமுறு நின்பூ ரணசுகம் அடைகுவ தென்றடியேன்
தடமயி லேறுஞ் சேவக சமரப் பதியானே. 1

உமையமை தனமா ரமுதக் கடலுண் டுயர்சோதிக்
கமைவுறு பதிகப் பெருமழை பொழியும் அருள்வானே
இமையள வும்மற வாதுனை நாடுவ தென்றடியேன்
சமரம யூரப் பரியாய் சமரப் பதியானே. 2

அண்டர் மணிக்குழு நின்றொளிர் கடகத் தணிபூண்ட
திண்டிறல் வாகு இராறுள மோனச் செவ்வேளே

மண்டிடும் அன்பினர் போலடி யேனை மதித்தாளாய்
தண்டைகொள் பாத சரோருக சமரப் பதியானே. 3

அறிவொளி யேயறி வோரமு தேபுவி யாதியெலாம்
பிறிவரு பூரண மேசுர ரோது பெரும்பொருளே
பொறிவழி செலுமென் பிழைகுறி யாது பொறுத்தாளாய்
தறையுயிர் வாழ்தர நிலவிய சமரப் பதியானே. 4

வேடர் குலச்சிறு மானனை வுற்ற விறற்புயனே
ஆடர வப்பணி யத்தன் அளித்தருள் அற்புதனே
மூட னெனத்தமி யேனை விடுத்திடல் முத்திதருந்
தாடலை வைத்தெனை யாளுதி சமரப் பதியானே. 5

நல்லா ரல்லார் செய்தொழில் செய்யும் நாயடியேன்
எல்லாம் வல்லார் பணிநின் பதமல ரென்றடைவேன்
தொல்லா ரணமுத லெல்லாம் ஓது சுகாதீதா
சல்லா பவினோ தத்தாய் சமரப் பதியானே. 6

இலகிய கற்புக் கட்வுட் பிடிசே ரெழில்மார்பா
விலகொளி மொய்த்துன தருளென் அகத்து வெளிப்படு
நிலவிய குக்குட விருது படைத்த நெடும்புகழோய் [மே
சலச மலர்ப்பத முருகா சமரப் பதியானே. 7

உனலரும் அன்பினர் நினையும் படிவம துடையோனே
நினைவு கடந்தவர் அறிவெழு சுகமாய் நிறைவோனே
எனையுமொ ரன்பினன் எனவுந் திருவுளம் எண்ணுதியோ
தனபதி யளகையில் நிலவிய சமரப் பதியானே. 8

வானவர் முனிவரர் பாதலர் உலகர் வணங்கியசாம்
பூனத நூபுர வோசை முழங்குறு பொற்பாதா
ஞான பராவமு துண்குவ தென்றினி நாயடியேன்
தானவர் நூறிட வேல்விடு சமரப் பதியானே. 9

உலகுயிர் பரமுயர் சிவமிவை யாவையும் ஒன்றாக
நிலவிய சொருபம தலதிலை யென்று நிகழ்த்தியவா
இலகிய அதனிடை யசைவற வுறைகுவ தென்றடியேன்
தலமகிழ் தருபுகழ் பெருகிய சமரப் பதியானே. 10

## (II) அட்டகம்

திருவும் வெளேமுள ரியினி லுறைதரு தேனும் மாதவ ஞானமும், மருவ விழிவழி கருணை பொழிதரு மாகர் சேவித மேகமே, உருவும் அருவமும் ஒளியும் இருளுமில் ஒன்ற தாம்பொரு ளென்றுநீ, தருதி யெனதுளம் நிறைய வளமுள சமர மாநகர் வேலனே. 1

மதியும் அரவமும் நதியும் இதழியும் வைத்த செஞ் சடை அத்தனர், அதிக தயவுடன் ஒருசொல் மொழி யென அருள்செய் பரகுரு தேசிகா, விதியும் அறிவரு பரம சுகமதை மேவ இனியெனை யாளுவாய், ததிதி திமி யென நடன மயில்வரு சமர மாநகர் வேலனே. 2

அகில முறுசர அசர மொடுபுறம் அகமும் நடுமுடி வாதியுந், திகழு மொருசுக சொருப மாகிய தேவ னேயருள் நாதனே, ககன பதிதொழும் உனது பதமலர் கடைய னேன்முடி சூட்டுவாய், தகைமை செறிமறை யவர்கள் புகழ்தரு சமர மாநகர் வேலனே. 3

அறிவொ டறிபவன் அறிய வருபொருள் அடைய வொருபொரு ளாகியே, பிறிவு சிறிதுமில் மவுன மாகிய பேச ருஞ்சுக மானவா, நெறிகொ ளுனதருள் உததி பெற எனை நினைதி திருவுளம் அதனிலே, தறுகண் அரவணி பரம னுதவிய சமர மாநகர் வேலனே. 4

கனக வடவரை யருவி சொரிமுறை கரட குஞ்சர முகவனர், மனமும் விழிகளும் மலர அழகொளிர் வாகனே தோகை பாகனே, இனனை நிகருறு முனது திருவடி யெனது முடியுற நினைகுவாய், சனகன் மகள்பதி மருக னகிய சமர மாநகர் வேலனே. 5

இமய கிரிதவ வுதய மயில்முலை யின்ன ருட்சுதை வாரியுண், டமைவு தருதிரி நயன வரைமிசை யணிசெய்

கவிபொழி மேகமே, சிமய வரைதொறும் ஆடு நின்பத
சேவை தந்தெனை யாளுவாய், சமர மயில்மிசை யுதய
சூரிய சமர மாநகர் வேலனே. 6

குறவர் மடமகள் களப புளகித குடமு லேச்சுவ டணுகிய
நறவு கமழ்தரு தெரியல் மார்பக நாய காகரு ணாலயா
உறவு மெனதுய ரறிவும் வளமையும் உனது பரிபுர பாதமே
தறையி னுயிர்வகை தழைய நிலவிய சமர மாநகர் வேலனே.

தெய்வ சிந்துர நயன இணைகுடி சேரு மேருறை செம்புயா
மெய்வ ழங்குகண் ணாள னேநவ வீரர் சேவித தாளனே
செய்வ ழங்கயில் மன்ன என்னுளம் நின்ற நன்றருள் பாலியாய்
சைவ நெறியின ருய்ய மனமகிழ் சமர மாநகர் வேலனே.

### (III) பெருங்கழி நெடில்விருத்தம்

சுருதியின் முடிவு தெளிதரு பரம
சுகமுறக் கலசமா முனிக்குத்
துகளறும் அரிய பொருள்பகர் குரவ
துதிபெறும் உவமையில் அழக
கருதரும் அடியர் பவவலை துணிசெய்
காரண பூரண எனவுன்
கழலிணை யடியேன் மனதினில் நினைந்து
கசிந்துநெக் குருகுநா ளுளதோ
செருவயின் அசுரர் குலமணி யனைய
திறலுடை யொருமக சூரன்
திகழுரம் உருவ அலைஅயில் விடுத்த
சேவக பாவக அதீத
தருமணி யிகலி யருள்கர கமல
தனிநெடு மயூரவா கனனே
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 1

முரணுறு கொடிய பவமெனும் உததி
முழுகலும் எழுதலு மாகி
முதிர்கரை யறியா திடைதடு மாறி
முடலைகொள் விடையமென் றுரைசெய்
உரமரு மகர மிடையிடை யடர
உய்வகை யொருதிசை யின்றி
உழலுமென் றனக்குன் கழலிணை யம்பி
உவந்தளித் தாளுநாள் உளதே
விரவிய களப ம்ருகமத படீர
விரைகமழ் புயாசல வீர
விரிகதி ரிலகு மரகத மயிலின்
மிசைவரு மொருபெருங் குமர
சரவண விசாக குக்குடத் துவச
சண்முக சச்சிதா னந்த
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 2

விலகிய கலக விழிமட வார்தம்
மென்முலைக் குவட்டிடை யிழிந்து
மிகுமய லாசை வெம்புலி பாய
மெய்ம்மறந் துனதருள் நினையாப்
புலமிலி யிவனென் றெனையிக ழாதுன்
புனிதசெஞ் சரோருகம் இணைந்த
பொற்பினில் திகழும் அற்புத பாதம்
பொருந்திடத் திருந்தருள் புரியாய்
பலகலை முழுதும் அறிதரு புலவ
பரகதி நெறிதரு குரவ
பதகரை முடுகி யடுமொரு வீர
பணிசுர ரெணியடை நிருப

தலமதி விரவி வரவொரு தொனிசெய்
தழைசிறைச் சேவலம் விருத
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 3

அழலுறு மெழுகின் அரிவையர் மயலின்
அனுதினம் அகநெக அழியும்
அசடனை மதியில் கசடனை யறிவி
லாதனை மாதவ மிலனை
விழலனை யதிக விரகனை மதுர
மிலதொரு வசனனை முனிவின்
விறலனை யுனது கழலிணை குறுகும்
விதமளித் தாளுநா ளுளதோ
புழைபெறு பனையிற் கரமலைப் பிடரிற்
பொங்குசெங் கதிரொரு கோடி
பொற்பினில் திகழ்வ தொப்பெனச் சிறந்து
பொன்னுல குலவிய புனித
தழுவரை பெரிய கற்பகா டவியின்
தண்மலர் மாலிகா பரண
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 4

உததிகொள் குமிழி உடுநிரை உயிர்கள்
ஒலிகெழு திரைமலி புளினத்
துறுமணா லளவை யளவிடும் ஒருவன்
உளனெனி லெனதுறு பிறவி
விதவகை யறியு மவைகளி லடியேன்
மெலிவுறு மெலிவைநீ யறிவாய்
விகசித நினது மலரடி யுதவி
வெந்துய ரகற்றிட நினையாய்

நதிபெறு சடில மணிமுடி யொருவன்
நகைபெற இருசெவி குளிர
நற்பொரு ளுரைத்த அற்புதக் குரவ
நாதபூ தங்களின் தலைவ
சதியுடன் நடன மிடுமயி லுரவ
சதுரமென் மதுரவா சகனே
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே, 5

சிகரியின் உதய பரிதியின் மணிகள்
திகழுறு மகுடமோ ராறுந்
திரளுடு பதியின் முகங்களோ ராறுந்
திருவிழி மலர்களீ ராறுங்
ககனமு டுருவு கனகமால் வரையிற்
கதித்தெழு புயங்களீ ராறுங்
கடிகம ழுபய பதங்களு மெனது
கருத்திலுற் றிருக்குநா ளுளதோ
நிகரறும் உரகன் முடிநெற நெறென
நிகழ்வட வரைகிடு கிடென
நிலவிய வுலகை யொருநொடி யதனில்
நிலைபெற வுலவுசீ ரடியாய்
தகைபெறு குறவர் மடவர லியானை
தந்தருள் மடவரல் கணவ
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 6

கசடறு ககன மகபதி யுலகிற்
கடிதரு மருமலர் கூந்தற்
கடவுளர் மகளி ரிருபுடை கவரி
காலசைத் திரட்டமா முனிவர்

திசைதொறும் அமரர் மறைமொழி யாசி
செப்பிட வொப்பிலா துலவுஞ்
சேவக நினது பதாம்புயத் தெனது
சிந்தையைச் செலுத்துநா ளுளதோ
கெசமுக னுடலம் இருதுணி படுத்த
கேழயிற் படைவலன் ஏந்துங்
கேசரி தெய்வக் கம்மியன் இயற்றுங்
கிண்கிணிச் சரண ஆனந்தத்
தசமுகன் மடிய வொருகணை தொடுத்த
சதுரனன் மருகனே முருகா
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 7

அவகதி புகுது நினைவுடன் இயங்கி
அடர்வுறு விடயமென் கடுவை
அயின்றயின் றனந்த நாளெலாங் கழித்த
அறிவில்உன் மத்தனேன் தன்னைச்
சிவகதிக் குரிய னெனத்தெளி வித்துத்
திரிமல மயக்கவேர் களைந்து
திகழுறும் அழல்சேர் இரும்புநீ ரென்னத்
திருவடி சேர்த்துநா ளுளதோ
கவனவாம் புரவி யேழுறப் பூண்ட
கடிரதக் கடவுளுக் குடைய
கதிரெனத் தோன்றும் அயிலுடைக் குமர
கந்தநந் தாமணி விளக்கே
நவநதி பெருகுஞ் சடிலஆ னந்தத்
தண்கட லுதித்தஆ ரமுதே
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 8

துகளறும் உலக மலிநிசி பருகுந்
துரிசறு பரிதிகோ டிகளிற்
சுடர்விடு நினது திருவுரு அழகுந்
துலங்கிய முகங்களோ ராறும்
பகரரு மணிகள் சுடர்விடு கடகப்
பருப்பதப் புயங்க ளீராறும்
பரிபுர கமல பாதமுஞ் சிறியேன்
பரிவொடுங் காணுநா ளுளதோ
செகககண செகண செகககண செகண
தெந்தின திகுதகு திகெனச்
செறிமுர சுடுக்கை மத்தளம் அலகை
திசையொலி சென்றிட முழங்கச்
சகதலத் தசுரர் மணிமுடி யுருளத்
தடக்கைவேல் விடுத்தசே வகனே
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 9

திடமுறு ககன மகபதி யமரர்
சித்தர்விஞ் சையர்அரி பிரமர்
செயசெய எனவே கற்பகா டவியிற்
செழுமலர் பொழிந்துநின் றிறைஞ்ச
நடமிடு குழகன் அகமகிழ்ந் துதவு
நாதவென் றிடைவிடா துன்னும்
நன்மனம் அளித்துப் புன்மனம் போக்கி
நாயினேன் றன்னையாண் டருளாய்
கடதட விகட குஞ்சரா னனத்துக்
கடவுளுக் கிளையநற் களிறே
கதிதரு தருவே நிதிதரு மணியே
காமனிற் கட்டழ கினனே

தடமலை நிகர்த்த அரிமுகத் தசுரன்
தனதுரம் உருவவேல் விடுத்தோய்
சததள கமல மருவிய வயல்சூழ்
சமரமா நகருறை குகனே. 10

### (IV) குறுங்கழிநெடில் விருத்தம்

அறிவுக் களிறே ருதவித் துணையா யகமெச் சியமுருகா
மறிமிக்கொளிசூழ்சசிகைக்கொளுவோன்மகிழத்தவழ்புதல்வா
எறிபற் றியதா ரவளற் கருள்சேர் விமலப் பதமருளாய்
தறியட் டெழுமா தவளக் களிறுய் சமரப் பதியானே. 1

இமயப் பிடிபால் உதவக் கனிவா யிடைவைத் தமிழ்சிறுவா
திமிரத் திரளாம் அசுரக் கொடியார் சிதையத் தொடுமயிலாய்
நிமலச் சுகபா ரணமெற் கினிநீ நிகழ்வுற் றினிதருளாய்
சமரச் சிறைமா மயுரப் பதியாய் சமரப் பதியானே. 2

கடவுட் பிடிகா னவர்நற் கொடிசூழ் கனகக் கிரியனவா
மடமைச் சிறியேன் இடரைக் களைவான் வனசப் பரிபுரதான்
இடைவைத் தினியாள் கடனச் சிறைமா மயிலுக் கெழில்நிருபா
தடவெற் பழகா தணிகைப் பதியாய் சமரப் பதியானே.

நிகழ்குக் குடநீள் விருதுப் பரமா நிமலக் குலமுருகா
புகல்பற் றிடநீ யலதெற் குளதோ புகழ்மிக் குளகுகவேள்
ககனச் சுரர்மா முனிவர்க் குழுமா நிலர்கைக் கணிசரண
தகரப் பரியாய் அயில்வேற் படையாய் சமரப் பதியானே.

மனதிற் கினிதாம் நினைவிற் படிநான் மயலுற் றிடருறவோ
உனதற் புததாள் பணியப் பெறவோ யுறைசிற் பரைகுமரா
கனகப் பெருமால் வரையிற் பரனுர் கருதச்செவி புகல்வோய்
சனரைச் சுகவீ டுறவைத் தருள்வோய் சமரப் பதியானே.

மூமலக் குழுவோ டியைபொய்க் கடமே முடுகித்தொடர்வுறவே
சமைமிக குறவோன் இடருற் றனன்மா சுகம்வைத் தெனையினி
கமலப்பதனே கனகப் புயனே கருணைத் திருமுகனே[தான்
சமரக் கணநா தர்களுக் கிறைவா சமரப் பதியானே. 6

களவிற் களவா னவன்மெச் சுறநீள் கவியைப் பொழிமுகிலே
குளகுத் தகர்மேல் வருசிற் சொருபா குமரப் பெயருடையாய்
இளகத் தயவோர் சிறிதுற் றறியா எனையுட் கருதுதியோ
தளவக் குழலார் நடைகற் றனமார் சமரப் பதியானே. 7

நிலவுச் சடையான் உதவுத் தமனே நிமலக் கெழில்மகனே
உலகுக் கரசே அமரர்க் கரசே உயிருக் குயிரெனவே
பலசொற் புனைபா வதனிற் புகழே பகர்தற் கினிதருளாய்
சலசத் திருமா னிலகிக் களிகூர் சமரப் பதியானே. 8

குவளைக் கணினர் குயநச் சியமா கொடுமைச் சிறியவனேன்
அவலக் கடையே ஹுனதற் புததாள் அடையக் கருதுதியோ
நவசித் திரகே ழொளிசுற் றியமேல் நடனக் களிமயிலோய்
தவளக் கரியாய் பழனிக் கிரியாய் சமரப் பதியானே. 9

பொருநைக் குலநீள் வரையில் தவமே புரிமெய்க் குறுமுனிபால்
இருளுக் கொருசூ ரியனிற் குருவாய்எதிருற் றருள்புரிவோய்
மருளுற் பவவா ரிதியிற் புகுதா வகையெற் குரைபுகலாய்
தருணிச் சிறுவா வருணக் குமரா சமரப் பதியானே. 10

(V)

பான்மதி வேணியர் மால்தொழு நாயகர்
பரிவுடன் அருள்யானை
தான்வா வாவென அங்கை விரித்தழை
சகலக லைப்பிள்ளாய்
தேன்மலி சுவையென எங்கும் நிறைந்துள
சிற்சுக வாரியிலே
யான்முழு குறுமொரு காலமு முளதுகொல்
அருள்போ ரூரானே. 1

மூபுரம் எரிகொள வோர்நகை புரிதரு
முக்கணன் மடிமீதே
நூபுரம் ஒலிதர ஆடிய துணையடி
நோன்மை தருஞ்சிறுவா

மாபுர மூவகை மேலெழும் ஒளியிடை
மன்னுவ தென்றடியேன்
ஆர்புரி நூலொளிர் மார்பக வேலவ
அருள்போ ரூரானே. 2

நால்வகி ரனஇடை மாதுமை மகிழ்வுற
நுவலரு மழலைமொழிப்
பால்வழி நாநனி பேசிய மூவிரு
பவளத் திருவாயா
மால்வழி விலகிநன் னூல்வழி செலுமுள
மருவுவ லோசிறியேன்
ஆல்வயின் இலைதுயில் வோன்மகிழ் மருமக
அருள்போ ரூரானே. 3

தெய்வப் பிடியுந் திருவுறை மானுந்
தினமுங் களிகூர
மெய்வைத் திடுபே ரருள்நிழல் மொய்த்தொளிர்
மேதகு கற்பகமே
உய்வுற் றிடுகதி பெற்றுன் அடிக்கண்
உவப்புற லென்றடியேன்
ஐவர்க் குஞ்சற் காரணன் மருகா
அருள்போ ரூரானே. 4

வேலுஞ் சேவலும் விரிசிறை மயிலும்
வெற்றிசெய் தகரேறும்
நாலும் மறைபுக ழக்கைக் கொண்டருள்
நாயக தூயவனே
ஏலுங் காமக் கடலின் கரைகண்
டேறுவ தென்றடியேன்
ஆலுங் கோலுந் துயில்வோன் மருகா
அருள்போ ரூரானே. 5

மலைய முனிக்கக மதனில் மறைப்பொருள்
வழுவற வைத்தபிரான்
கலைகள் தமக்குள பொருள்கள் விரித்துரை
கசடறு மெய்ப்புலவா
நிலையில் பவக்கடல் சுவற எனக்கொரு
நிலைமை யளித்திகொலோ
அலையில் சுதைக்கட லெனநிறை சிற்பர
அருள்போ ரூரானே. 6

பாவரு தொடையணி வோருள நாடிய
பாரிடை நீடுறவே
ஓவற வுதவுறும் ஆறிரு கரமுள
உத்தம சிற்சொருபா
நாவுடன் மனமிவை யாலுனை வந்தனை
நாயடி யேன்செயவே
ஆவரு வோன்மக னாகிய வேலவ
அருள்போ ரூரானே. 7

மூதொளி நீடிய கேயூ ரப்பணி
முந்நான் குறுதோளா
சீதள வான்மதி போலுறு மாறு
சிறந்த முகத்தினனே
பாதகன் என்மனன் நின்னடி மன்னுறு
பான்மையில் நண்ணுறுமோ
ஆதர வேயென தாருயிர் நாயக
அருள்போ ரூரானே. 8

பணிபவ ருளமுறும் இருளற வொளிதரு
பரவறி வுளரவியே
தணிமலை முதலிய மலைதொறும் நிலவிய
சசிபதி பணிபதனே

கனிதமில் பிழைசெய்த கொடியனை நிலைபெறு
கதிபெற நினைதிகொலோ
அணிதிகழ் திருவுர அயிலவ மயிலவ
அருள்போ ரூரானே. 9

மின்திக ழம்புய லேமறை மீது
விளங்குறு செம்பொருளே
என்றுணை யேயடி யாரக கஞ்சம்
இருந்த பெருந்தேனே
நன்குறு பேரறி வேயரு ளேசுக
மேயென நாயடியேன்
அன்பொடு நின்பத தாமரை நாடுற
அருள்போ ரூரானே. 10

(VI)

பகலுடன் இரவும் இடையினும் உனது
பாதப்பே ரொளியிடைப் புகுந்து
சகலகே வலத்தின் தாக்கற அடியேன்
தருசுகத் திருக்குநா ளுளதோ
ககனர்தம் அரசே கதிதரு தருவே
காரணக் கருணைவா ரிதியே
மிகுகுணக் குன்றே யதிவளப் போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 1

உனதுதாய் உலக சராசர மெவையும்
ஒருங்குடன் பூத்தவள் உந்தை
கனபரி புரண சுகத்தன்நின் தமையன்
காரிய முதல்வன்நின் மாமன்
வனசனு தியர்கள் பணிபதன் இவர்கள்
வளனெலாம் உனக்குரித் திதனால்
வினவுசெல் வத்துட் செல்வன்நீ போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 2

அறுவகைத் தாயர் குடமுலை சுரப்ப
அம்பிகை திருவுளங் களிப்ப
மறுவறு கங்கைத் தாய்நனி வாழ்த்தி
வடிவெலாங் குளிர்ந்துபூ ரிப்ப
நறைகமழ் வனச மாமிகண் களிப்ப
நடந்தவ ரெதிர்வரு குருந்தே
விறலுறு நினைவந் தடைந்தனன் போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே, 3

மண்ணவர் பணிய இம்மையில் இன்பும்
வானவர் பணிந்திட மறுமை
நண்ணுறும் இன்பும் முனிவரர் அடியர்
நனிதொழப் பரகதி யின்பும்
பண்ணுறு முனது பாதம் ஈதரும்இப்
பதந்தொழு வாரிடர் கடந்தோர்
விண்ணகர் வளம்போல் நண்ணுறும் போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 4

உரையுணர் விறந்த கரையறும் இன்பம்
ஓரரைக் கடிகைமிக் குயர்ந்த
அருளொடுங் காட்டி மறைத்தனை நாயேற்
கச்சுக மென்றளித் தருள்வாய்
சுரர்களுக் கிடர்செய் சூர்ப்பகை கடிந்து
சுடர்விடு சோதிவேற் கரசே
விரகனே குகனே மெய்யனே போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 5

ஓதியும் உணர்ந்தும் பிறர்தமக் குரைத்தும்
உளமுதல் தானடங் காத
பேதையிற் பேதை யாரில ரென்ற
பெரியவர் சொற்கிலக் கானேன்

கோதறும் ஆறு கொடுமுடிப் பவளக்
குன்றமொத் திலகுகட் டழகா
வேதகோ டங்கள் முழங்கிய போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 6

அரணியைக் கடைவோன் கனலெழு சமயத்
தங்கையே மாறிவிட் டாங்குப்
புரணபே ரின்பம் எழுதரு வாயிற்
பொருந்துநின் பதமறந் திளைத்தேன்
மரணவுற் பவத்தின் மறுகுரு தெனைநின்
மலர்ப்பதஞ் சேர்த்திட நினையாய்
விரிகதி ரெறிக்கும் வேலனே போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 7

கடைபடு முலகப் பொய்யினை மெய்யாக்
கருதினேன் கானல்நீ ரென்று
மடமையாற் கருது மவனென இனியுன்
மலர்ப்பதச் சுகத்தையென் றடைவேன்
தடவரைக் குறவர் குலத்தெழு வல்லி
சாதகக் கொடிபடர் தருவே
மிடலெழு தோகைப் பாகனே போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 8

எங்குமென் சொருப சச்சிதா னந்த
இலகொளி யிருந்திடும் அதனுள்
தங்குபல் பொருள்கள் கானலிற் சலம்போற்
ருமுறும் வேறிலை யென்றே
பொங்கருட் குருவாய் வந்துநீ யளித்தும்
புலையனேன் மயங்குறு கின்றேன்
வெங்கதிர் விலக்குந் தண்டலைப் போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 9

மலவிருள் துரக்கும் ஞானசூ ரியனாய்
வந்தநின் மகிமையை யறியாப்
புலையரிற் கடையேன் எனினுமென் பிழையைப்
பொறுப்பதுன் பொன்னருட் கியல்பாங்
கலைமுகம் புகழுங் களிற்றுறு துணைவா
கடவுள்யா னைக்குநற் கணவா
விலகிவில் லுமிழும் வேலவா போரூர்
வீறிவாழ் ஆறுமா முகனே. 10

(VII)

அருட்குழை தழைத்தைங் கரமலர் மலர்ந்தோர்
ஆடகப் பொருப்பிடை யுரிஞ்சித்
தெருள்தருக் கோட்டுக் கற்பகத் திளவல்
ஆகிய மாதவத் தரசே
மருள்திரைப் பிறவி வாரிதி மூழ்கா
வகையெனைக் காத்தளித் தருளாய்
உருள்திகழ் இரதத் தெருப்புனை போரூர்
உத்தமா சத்திவே லவனே. 1

நவமணி குயின்ற பருப்பத மனைய
நகைமயிற் பரியிவர்ந் துளத்துக்
கவலைகள் தவிர்த்திங் கடியரைக் காக்குங்
கடவுளே கடவுளர் கோவே
சினமென எவையும் அருட்குரு வாகிச்
செப்பிய வாறெனக் குளத்தும்
உவமையி லதனைக் காட்டுதி போரூர்
உத்தமா சத்திவே லவனே. 2

நல்லவ ரெனின்நீ புரியருட் குள்ள
நைந்துநெக் குருகுவ ரன்பாய்ப்
புல்லியேன் அதனின் மகிமையை யறியாப்
புலையனேன் உய்யுநாள் உளதோ

வெல்லுமும் மதத்து வாரணம் உரித்து
வீட்டிய முக்கணன் புதல்வா
ஒல்லைவாந் தகரப் பரியனே போரூர்
உத்தமா சத்திவே லவனே. 3

காமவேள் கணையால் உளங்கலங் காதுன்
கனைகழற் கமலத்தா ளிருந்த
சேமஆ னந்த வாரிதி படிந்து
சிறியனேன் வாழுநாள் உளதோ
பூமணம் வீசுங் கூந்தலங் கவுரி
பொருப்பன தனத்தமு துண்டோய்
ஓமெனும் பதத்தின் அருத்தமே போரூர்
உத்தமா சத்திவே லவனே. 4

நினதருட் பாத நினைதொறும் அடியேன்
நினைப்பொடு மாறுகொண் டெழுந்த
மனஅழுக் கதனால் வாடினே னதனை
மாற்றிநின் னருள்சுரந் தளிப்பாய்
கனைகடல் குமுறக் குலவரை யதிரக்
கனவொலி கூவுசே வலனே
உனலருந் தவத்தோர் பரவிய போரூர்
உத்தமா சத்திவே லவனே. 5

வாக்கொடு மனமுங் காயமார் தொழிலும்
மன்னுறு நின்னருட் காக்குந்
தேக்குறும் அன்பர் போலலாச் சிறியேன்
செய்பிழை பொறுத்தினி தளிப்பாய்
ஆக்கமெய்ஞ் ஞானங் குறுமுனிக் குதவும்
அருட்குர வாசிவ யோக
ஊக்கமே தழைத்தோர் போற்றிய போரூர்
உத்தமா சத்திவே லவனே. 6

மகவினைத் தாதை யினிமைகள் காட்டி
மடித்தலத் திருத்துதல் போல
அகமதி லின்பு காட்டிநின் தாள்கீழ்
அடியனை யசைவற இருத்தாய்
ககனவா னோர்க ளெனும்பயிர் தழைப்பக்
கடியசூர்க் களைகளைந் தருள்வோய்
உகலரு வளங்கள் திகழ்திருப் போரூர்
உத்தமா சத்திவே லவனே. 7

பித்தனே னெனினும் பேயனே னெனினும்
பிழைபுரி பாவியே னெனினும்
அத்தனே யெனைநீ யளிக்குதல் கடனே
அறனெலாம் ஓருருக் கொண்டோய்
கொத்தலர் நீபத் தொடையணி மார்பா
குமரநா யகவெனக் குறுதாய்
ஒத்தவா முத்தர் பற்றிய போரூர்
உத்தமா சத்திவே லவனே. 8

கன்னியர் இருவர் இருமருங் குறநற்
கனகமால் வரையிருந் தனநின்
சந்நிதி கண்டோர் பவத்துயர் கடந்து
தருசுக வாரிதி படிவார்
நின்னடி யவனென் றுலகவர் புகல
நிகழ்த்தினை யினியெனை விடுக்கேல்
உன்னத சிகரி மன்னிய போரூர்
உத்தமா சத்திவே லவனே. 9

பயனில மொழிந்தும் பலதொழில் புரிந்தும்
பரவையில் திரையென நினைந்துங்
கயவரிற் பொழுது போக்குறு துனது
கமலத்தாள் நினையவே தருவாய்

இயலிசை யருண கிரிப்பெயர் நாதன்
இயம்புபா மாலைசேர் புயத்தாய்
உயுநெறி யடியேற் குதவிய போரூர்
உத்தமா சத்திவே லவனே. 10

(VIII)

கமலநான் முகவன் ஓதிய வேதக்
கனமுக வுரைதினம் புகழும்
விமலமெய்ஞ் ஞானக் களிற்றினுக் கிளைய
வீறுபன் னிருபுயத் தழகா
திமிரவஞ் ஞானக் களிற்றினைத் துணித்தென்
சிந்தையிற் புகுந்தருள் புரியாய்
தமரநீர் ததும்பும் வயல்செறி போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 1

இராவொடு பகலும் எழிலுறு சமாதி
இயல்பொடு கூடிவீட் டிருந்து
விராவுபே ரின்ப அமுதயின் றடியேன்
வினைத்துயர் மறக்குநா ளுளதோ
அராவணி வேணித் துகிர்க்கொடி படரும்
அருட்கடற் பிறந்தவா ரமுதே
தராதல முழுதும் புகழ்திருப் போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 2

ஒருபொரு ளிடத்தும் விழைவொடு வெகுளி
உறுதலெலாம் சமமதாக் கண்டுன்
திருவடி நிழற்கீழ் அசைவற இருந்து
சிறியனேன் என்றிளைப் பறுவேன்
அருள்நனி சுரக்கும் பனிமலைப் பிறந்த
அங்கொடி தந்தசெங் கனியே
தருணமா ருத முருகனே போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 3

கலைபுகழ்ந் தோதுங் கற்பெலாம் நிறைந்த
கன்னியர் இருவர்பால் மகிழ
நிலைபெறு மயூரப் பரிமிசைத் தோன்றும்
நிறைபரி பூரண சுகமே
இலையுள தென்னும் இரண்டுமத் தியத்தின்
எழுசொரு பத்தெனை யிருத்தாய்
நலைமைகொள் தவத்தோர் நிலவிய போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 4

இருளைவிட் டெனைநீ யெடுத்தநாள் முதலா
இன்றுகா றுறுப்பிறப் பிறப்பில்
உருளெனச் சுழன்றேன் இங்கினி தமையும்
உயர்பரி பூரணத் திருத்தாய்
மருமலி நீபத் தார்புனை மார்பா
வானவர் சேவித பாதா
தருமலி கரத்தோர் நிறைதிருப் போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. ௫

மனவமுக் கனைத்தும் மாறிநின் மலமாம்
மனத்தனுய் நசைசின மறந்து
கனபுரி புரண சுகக்கடல் படியுங்
காலமுஞ் சிறியனேற் குளதோ
உனலரும் பொதியத் துறுகுறு முனிவன்
உளமகிழ்ந் திறைஞ்சுபொற் சரண
தனப்தி அளகை வளனுறு போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 6

யாவரும் அறியா அறிவெலாம் அறிவுக்
கறிவதா யிருந்தறி வித்து
மேவருட் குருவாய் வந்தறி வளித்தும்
வினையனேன் தெளிந்திலேன் அந்தோ

சேவலந் துவசம் பிடித்தசெங் கரனே
திகழ்தரு சடானனக் களிறே
தாவிய தகரப் பரியனே போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 7

அத்தன்மேல் வித்தை மகற்குப தேசித்
தஃதினை வருவித்தல் போலும்
பித்தனுக் கொருவன் மருந்தினை யளித்துப்
பிறங்குணர் வளிக்குதல் போலும்
நித்தமென் மனத்தைத் திருத்தியாண் டளித்த
நினதரு ளேதெனப் புகல்கேன்
தத்தைகள் கொஞ்சுஞ் சோலைசூழ் போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 8

நெஞ்சகத் துள்ளும் புறனுமாய் நிறைந்த
நின்பரி பூரணம் நினைந்து
வஞ்சகச் சகப்பொய் யனைத்தையும் மறந்து
வாழுநாள் எந்தநாள் அடியேன்
செஞ்சடைக் குழகன் அஞ்செவிக் கமுதாத்
திகழ்மறை முடிவினைப் புகன்றோய்
தஞ்செனப் பணிவோர்க் கருள்தரும் போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 9

கணப்பொழு தெனினும் மறக்கிலா தென்றுங்
கனபரி பூரண அறிவிற்
பிணக்குறும் மனமு மவித்தையுங் கடந்து
பேதையேன் கலக்குநாள் உளதோ
மணத்தசெங் கழுநீர் மாலைதாழ் புயத்து
வள்ளலே யுள்ளுவோர்க் கமுதே
தணப்பருங் கருணை தருந்திருப் போரூர்ச்
சரவண பிரணவப் பொருளே. 10

(IX)

திடம்பெறு கலைகள் அனைத்துநின் றேத்துஞ்
செய்யதாள் பூமிசை பொருந்த
நடந்துவந் தருளாற் குமாரசற் குருவாய்
நாயினேன் இருள்தெறு சுடரே
அடர்ந்திடு பிணியா லுனதுமெய் யடியான்
அசைவுறு தளித்தருள் புரிவாய்
தடங்கரி திரியுஞ் சந்தனப் பொழில்சூழ்
சமரமா புரியுறை குகனே. 1

பந்தமு டறுத்துப் பாயிருள் சீக்கும்
பரிதியில் இலகுநின் பதமென்
சிந்தையிற் குடியா விருத்தியாண் டருளுஞ்
சிற்சுகக் கருணைமா கடலே
முந்துறு பிணியால் நொந்துன தடியான்
முடிவுறு தினிதருள் புரியாய்
தந்திகள் திரியுஞ் சந்தனப் பொழில்சூழ்
சமரமா புரியுறை குகனே. 2

வடங்கிடந் தொளிரும் வாரணக் கோட்டின்
வளர்முலை வள்ளிநா யகியுன்
இடம்பெற வயங்கு புயங்கள்பன் னிரண்டின்
இலகவுள் மகிழ்மணிக் குன்றே
விடந்தெறு கருடப் பார்வைபோ லுனது
மெய்யடி யவன்பிணி தவிர்ப்பாய்
தடம்புயல் துயிலுஞ் சந்தனப் பொழில்சூழ்
சமரமா புரியுறை குகனே. 3

சூர்குலத் திமிரம் முழுவதும் இரியச்
சுடர்விடு சோதிவே லுயர்த்த
வீரவம் புயத்தாய் மாரவே ளழகும்
வெற்றிகொள் உத்தம வடிவா

சீர்பெறு முனது மெய்யடி யவனைத்
தெறுபிணி யறவுளத் தடைப்பாய்
தார்செறி பொழில்வாய்க் கார்துளி சிதறுஞ்
சமரமா புரியுறை குகனே. 4

அரையன்நூல் முறையே புரியினும் அரையன்
அருள்சுதன் தனதுளப் படியே
விரைவுடன் புரியும் அஃதுபோல் ஈசன்
வினைவழி புரியினிற் போற்றுந்
திருவடி யவரைத் தீவினை தெரூது
தீர்க்கநிற் கேவருங் கண்டாய்
தருமலி புளினத் திளவலை தவழுஞ்
சமரமா புரியுறை குகனே. 5

ஆலமார் களனும் நீலமே னியனும்
ஐங்கரன் அம்பிகை அமரர்
சீலமார் முனிவ ரியாவருங் களிக்கச்
சிகிப்பரி நடத்துசே வலனே
ஞாலமீ துனது சீரடி யவனை
நலிதரு பிணியற நினைவாய்
தாலநீள் பாளை கட்குடஞ் சுமக்குஞ்
சமரமா புரியுறை குகனே. 6

வடகலைக் கடலுந் தென்கலைக் கடலும்
வருதிரைக் கடலுமுண் டிருந்த
திடமுறு முனிவன் இடர்க்கட லகற்றச்
சிற்சுகக் கட.லளித் தவனே
அடியவர் துயர முறின் இளங் கன்றுக்
கானென வருவதுன் னருளாந்
தடமலர்ப் பிரசஞ் சங்கின்வா யொழுகுஞ்
சமரமா புரியுறை குகனே. 7

புவனம் ஈரேழும் பூத்திடு மதுரப்
பொற்பிடி நற்றனத் தீம்பால்
நவமணம் ஆறு குமுதவாய் வீசும்
நன்குறு மொண்சிறு களிறே
திவமுறு கதிர்முன் இருளென வுனது
சீரடி யவன்பிணி தவிர்ப்பாய்
தவமுனி வருக்குக் கரிகனி யளிக்குஞ்
சமரமா புரியுறை குகனே. 8

விண்குடி யேறச் சூர்நக ரோட
விழிசிவன் தன்பரா னவர்க்குக்
கண்குடி யிருந்த மணியென அறிவிற்
கதியினைக் காட்டுசெம் பொருளே
எண்பெறும் அடிமை படைத்தவர் ஆள்வ
தியல்பதாம் இசைப்பதென் அடியேன்
தண்சுதை மாடங் கயிலைபோல் விளங்குஞ்
சமரமா புரியுறை குகனே. 9

கொடியசூர்த் தானைக் கருங்கட லுடைத்துக்
குருதிவெஞ் செங்கட லாக்கும்
நெடியவே லுயர்த்த புயத்திறை யுனது
நீடரு ளேதென வுரைக்கேன்
அடியர்மார்க் கண்டர்க் காருயி ரளித்தா
ளித்தனை நினதடி யனுக்குந்
தடிபடும் எழிலி அகிற்புகை மணக்குஞ்
சமரமா புரியுறை குகனே. 10

(X)

பரிதிபோல் ஞானச் சுடரொளி வீசும்
பாழியங் களிற்றினுக் கிளையோய்
சுருதியின் முடிவைச் சிறியனேற் களித்த
சுந்தர மறப்பனே அடியேன்

அரிதுணர் பொருள்கள் நினதருள் அடைந்தோர்க்
கரிதல என்பதும் அறிந்தேன்
கருதிய பொருள்கள் தருந்திருப் போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 1

மகவினுக் கிரங்கும் அன்னைபோற் கன்றை
மருவிவந் திரங்கிய பசுப்போற்
புகலடைந் தவனுக் கிரங்கொரு வனைப்போற்
புலையனேற் கிரங்கியாண் டளித்தோய்
இகலுறு சூலப் படையன்ஈன் றெடுத்த
எந்தைநின் அடைக்கலம் அடியேன்
ககனமூ டுருவுஞ் சிகரியம் போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 2

நதியின திருபாற் கரைகளில் திரிந்து
நடைதளர்ந் துழன்றிடு பசுப்போல்
மதிமருண் டுழன்ற சிறியனை யழைத்துன்
மலர்ப்பதத் திருத்தியாண் டளித்தோய்
அதிகநின் கருணைக் கடலினுக் குவமை
யாதினை யெடுத்தினி துரைக்கேன்
கதிதரும் அறிஞர் பரவிய போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 3

மருளனை யளிக்கத் தொடங்கினேன் அவன்றன்
மனமொழி மெய்களில் நிகழுந்
தெருளறு செயலை நோக்கிடா னதுபோற்
சிறியனை யளித்தலுன் கடனே
இருளற வீசுஞ் சுடர்விடு வடிவேற்
கிறையவா குறுமுனி குரவா
கருடவா கனத்தோன் மருகனே போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 4

வஞ்சனேன் நெஞ்சில் மாற்றுதற் கரிதா
மலினவா தனையெலாந் தவிர்த்திங்
குஞ்சிட அடியேன் அஞ்சலென் றளித்த
உனதருள் மறப்பனோ சிறியேன்
செஞ்சிறை யடித்துக் களத்தினை நிமிர்த்துச்
சிரம்வளைத் தொலித்தசே வலனே
கஞ்சன்நெஞ் சறியா தவன்மகிழ் போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 5

இரவொடு பகலும் இரவொடு பகல்கள்
இன்றிய வீட்டினில் இருந்துன்
றரவணி பாத கமலமீ தெழுந்த
குளிர்நறு வெள்ளம்என் றடைவேன்
மரகத ஒளியே பருமயில் ஏறு
மன்னவா என்உயிர்த் துணைவா
கரவறும் உளத்தோர் நிலவிய போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 6

மனமினை வனைத்தும் ஒழிந்துமூ டமும்போய்
மன்னுநின் அருளொளி புகுந்தாங்
கினனிற வயிரக் கிரியென அசைவற்
றிருக்குநா ளெந்தநாள் அடியேன்
நனைமலர்க் கூந்தற் கவுரிகண் டுவப்ப
நகைமுக மலர்ந்தெதிர் வருவோய்
கனவினஞ் சுரந்து பொழிதிருப் போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 7

ஆடக வரைமேல் துருவனைப் போல
ஆணவ திமிரநீத் திருந்த
வீடகம் புகுந்தங் கசைவற இருக்க
வினையனேற் கென்றருள் புரிவாய்

ஏடகக் கூந்தற் கன்னிய ரிருவர்க்
கிசைந்துள கணவனே கமலக்
காடக மலர்ந்த வாவிசூழ் போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 8

உயிர்ப்பிணி தவிர்க்கும் மருத்துவன் என்கோ
உடற்பிணிக் கொருமருந் தென்கோ
மயக்குறு மனத்தின் நினைவெனும் பனியை
மாற்றிய கதிரவன் என்கோ
வியப்புறு புரண சொருபநின் னருளை
வினையனேன் ஏதெனப் புகல்கேன்
கயத்துரி தரித்தோன் புதல்வனே போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே. 9

ஆரியன் சுருதி அனுபவ மெனுமுன்
றுலுமென் அகத்தினி லிருந்த
கூரிருள் கடந்த நினதரு ளதனைக்
குறித்திடில் அதிசயந் தருமால்
சூரன துரமுங் கிரியுமூ டுருவிச்
சுடர்விடு சோதிவேல் பிடித்த
காரண எங்கும் பூரண போரூர்க்
காங்கெயா தேங்கொளி மணியே 10

(XI)

மணிகிடந் திமைக்கும் பஃறலை உரகன்
வளைபடந் திசைதொறுந் தடவ
அணியல கெடுத்துச் சிறைபுடை யடித்திங்
காடிடுந் தோகைவா கனனே
கனிதமில் உயிர்கள் வாடிடா தருளாற்
கனமழை கொடுத்தியற் புதமே
குனில்படு முரசம் முழங்கிய போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 1

கனைகடல் முகடு புழுங்கிட எழுந்து
கணவுடு கரந்தொளிர் கதிர்போல்
நினைதரு கருவிக் குழுவெலாங் கரந்தென்
நெஞ்சகத் தெழுந்தபே ரொளியே
அனையிலு மினிய கருணையால் உலகுக்
கம்புயல் மழைகொடுத் தாய்க்குக்
கோனையுறு கைம்மா றேதுரை போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 2

விரிதலைப் புவனம் வெயிலினில் வெதும்பி
வீதரு வாயினில் மிகுத்த
கருணையால் மாரி தந்துகாத் தளித்த
கனதையைச் சிறியனே அறிவேன்
அருணையங் கிரிநா தன்தமிழ் மணமும்
அரியகீ ரன்தமிழ் மணமுங்
குரவினன் மணமுங் கமழ்தரு போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 3

வேதநான் முகனும் விண்ணவர்கோனும்
விரிசடை முனிவரும் உனது
பாதபங் கயத்துக் கவர்கள்சீ ரணிகைப்
பங்கயங் குவிக்கநன் களித்தோய்
காதுறு பசியால் உயிர்தவி யாமற்
கணமழை தந்துகாத் தளித்தாய்
கோதறு கருணைத் தெய்வநீ போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 4

வேடுவர் குலத்தை விளக்கிய மயிலும்
விண்ணர சளித்தகோ மயிலும்
பீடுறு புடையில் வாழ்வுற நிவந்த
பெரியநற் பவளமால் வரையே

வாடுறும் உயிர்கள் தழைத்திட மாரி
வளத்தைநீ கொடுத்ததற் புதமே
கோடுறு சந்தச் சாரலம் போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 5

கன்றொரு குணிலா விளஎறிந் தவர்க்குக்
காதல்மீக் கொளவரு மருக
என்றுநன் மாரி தந்துநீ யெம்மை
எழிலுடன் காப்பதுன் கடனே
நன்றுதீ தென்ற பொருளெலாங் கடந்த
ஞானவீ டுதவுசற் குரவா
குன்றுதோ ருடல் உவந்தவா போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 6

முக்கண்நா யகனும் அவன்புடை மயிலும்
முறைமுறை யெடுத்துமுத் தாடுந்
தக்கநற் குருந்தா யிருந்தநீ யவரில்
தண்ணளி யாற்பெரி யவனே
மிக்கவா ருயிர்வா டுறுந்தரு வாயில்
விண்மழை தந்துகாத் தளித்தாய்
கொக்கடு சத்திச் சுவலனே போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 7

தங்கல ரெனுமச் சூர்க்குலம் வீட்டித்
தமனியத் தருவுறை சசிக்கு
மங்கல நாண்முன் கொடுத்துவா னவரை
மகிழ்வொடுங் காத்தளித் ததுபோல்
எங்களை யின்றும் வான்மழை பொழிவித்
தெழிலுடன் காத்தளித் தனைகாண்
கொங்கலர் சோலைச் சாரலம் போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 8

பாகடு வெள்ளைக் குஞ்சரப் பிடரிற்
பால்புரை வெள்ளியங் கிரிமேற்
சேகுறு பவள மால்வரை யிருந்த
செய்திபோற் சுரர்தொழ இருந்தோய்
வேகவெம் பசியால் வருந்திடா தெம்மை
விண்மழை தந்துகாத் தளித்தாய்
கோகன கப்பூந் தடஞ்செறி போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 9

மாண்செறி அடியார் வேண்டிய வரங்கள்
மாறிடா தளித்திடும் உனைப்போற்
காண்கிலேன் ஒருதே மூன்றுல கிடத்துங்
காட்சியால் கேள்வியால் தமியேன்
சேண்படு முகிலால் மழைவரு வித்துச்
சிற்றுயிர் காத்தினி தளித்தாய்
கோண்படு சங்கம் முழங்குறு போரூர்க்
குமரனே யமரர்நா யகனே. 10

(XII)

அருட்கடல் ததும்பிக் கவுட்செவிச் சாரல்
அருவிபாய்ந் தெழில்தரும் அசலம்
விருப்புற மருப்பிற் கடகமொன் றெடுத்து
வீறுகிம் புரியெனத் தரிப்போய்
சுருப்பினங் தொடருங் கதுப்பினர் மயக்கில்
துளைந்துரு தெனையினி தளிப்பாய்
பொருப்பன புயத்தோய் மயிற்பரி யுகைத்தோய்
போரிவாழ் ஆறுமா முகனே. 1

அறிவுதன் நினைவிற் கலந்துறு போதில்
அரும்பரம் உயிர்சகம் உளவாம்
பிறிவிலவ் வறிவந் நினைவினை யகன்றாற்
பேதாபே தங்களொன் றின்றி

நெறியுறத் தானே தன்னிடத் திருக்கும்
நிச்சய மென்றெனக் கிசைத்தான்
பொறிமறு மார்பன் மருகவே ளெனையாள்
போரிவாழ் ஆறுமா முகனே. 2

நினைவறி வெனவிவ் விரண்டினை விரித்து
நிகழ்த்துறுஞ் சுருதியீண் டிவற்றின்
நினைவிரண் டாகும் பரன்நினை வெனவும்
நிலவுறும் உயிர்நினை வெனவும்
புனைபர நினைவு சகமுயிர் நினைவு
புரிந்ததைப் பிடிக்குமென் றிசைத்தான்
புனையருும் பாரஞ் சொரிதரு நெய்தற்
போரிவாழ் ஆறுமா முகனே. 3

பரனது முகத்திற் குலகுபொய் சீவன்
படிற்றுளத் தினுக்கது மெய்ம்மை
திரமுறு சாட்சி தானெனச் சீவன்
தெரிந்திடிற் பரன்மனம் இவற்காம்
விரவிய சகமப் போதுபொய் யாகி
விளங்குறு மென்றெனக் கிசைத்தான்
புரமெரி செய்தோன் உவந்துபெற் றெடுத்த
போரிவாழ் ஆறுமா முகனே. 4

அறிவினை நோக்கில் உயிர்வய மாகும்
அகமனஞ் சகத்தையவ் வுயிர்தான்
பிறிபட நோக்கின் மனத்தினின் மயமாம்
பிறப்புமீ திதன்வயப் படாது
நெறியுறும் அறிவின் மிகப்பரி சிக்கின்
நினைப்பறுங் கதியும்ஈ ததன்றான்
பொறிமயி லேறுஞ் சேவக னெனையாள்
போரிவாழ் ஆறுமா முகனே. 5

ஏதொரு நினைவிங் கெழுமது மனமீ
தெனதென வருமிதன் மூலந்
தீதுறு மூல அகங்கர மீதியான்
என்றெழுஞ் செப்புமிங் கிவைக்கு
மூதிருள் அவித்தை மூலமீ தகன்றால்
மொய்யறி வெனஎனக் கிசைத்தான்
போதக மார்க்கும் புகன்றமெய்க் குரவன்
போரிவாழ் ஆறுமா முகனே. 6

சச்சிதா னந்த மெனும்பெயர் மூன்றில்
தழுவுமா வரணமூன் றிவைதாம்
நிச்சய அறிவாற் சமாதிஞா னத்தால்
நிகழ்வுறு சகசஞா னத்தால்
அச்சமின் றகலும் இவற்றினை யறியென்
றருட்கடல் நிறைத்தெனை யளித்தான்
பொய்ச்சழக் ககன்ற மனத்தினர் நினைக்கும்
போரிவாழ் ஆறுமா முகனே. 7

சுருதியின் துணிவால் நினைவுகொண் டுலகந்
துச்சமென் றுணர்தல்நிச் சயமாங்
கருதுறு நினைவை யடக்கியிவ் வுலகங்
கானலென் றுணர்ந்திடல் சமாதி
இருவகை யாய்முன் னுரைத்தவை யின்றி
இலங்கறி வுருவமா யிருத்தல்
பொருவறு சகச ஞானமென் றிசைத்தான்
போரிவாழ் ஆறுமா முகனே. 8

நிச்சய ஞானஞ் சமாதிஞா னங்கள்
நிராசையார் மனத்தினிற் கலங்கா
தெச்சமென் றிருக்கும் ஆசையார் மனத்தில்
இரண்டுஞா னங்களுங் கலங்கும்

நச்சுதல் வெகுளி யின்றிய சகச
ஞானிகள் நகையுளர் போலப்
பொய்ச்சகத் துறினுங் கலங்குரு ரென்ருன்
போரிவாழ் ஆறுமா முகனே. 9

சித்தொரு நான்கிற் பிரமங்கூ டத்தன்
செப்புமா யாரகி தங்கள்
மத்தமில் ஈசன் உயிர்கள்தாம் மாயா
சகிதங்கள் வழுத்துமிவ் வீசன்
சத்தெனுந் தன்னை மறப்பிலா மையினல்
தகுகதி தேடிலன் சீவன்
பொய்த்தலில் வீடு தேடுமென் றிசைத்தான்
போரிவாழ் ஆறுமா முகனே. 10

ஓதுரு நாம மியானென தசுத்தம்
உயர்ந்துள சுத்தவா தனைகள்
ஆதிய திரோதம் அனுக்கிர கத்தால்
ஆக்கைவாக் கியக்கவா தனைகள்
ஏதமில் காட்சி காண்பவ னென்ற
இவற்றுளோர் வகுப்பினன் மனத்தின்
போதமில் நினைவைப் பகுத்தடக் கென்ருன்
போரிவாழ் ஆறுமா முகனே. 11

கயிலைவா முரசு தந்தகற் பகமக்
கனவர சுறைக்கொடிக் கனிநூல்
இயல்புறு கற்புக் கன்னிமா ரிருவர்
இருமருங் குறைவட மேரு
அயிலுடன் மயிலுங் கோழியும் ஆடும்
அழகுடன் படைத்தமெய்க் கடவுள்
புயலினஞ் சுரந்து பொழிதரு நீதிப்
போரிவாழ் ஆறுமா முகனே. 12

தடவரைப் பிறந்த நதியராச் சென்று
தண்கடற் படமுடி மீது
சுடர்விரி யுதய கதிர்மணி விளக்குஞ்
சுந்தரப் போரிவேல் இறையே
மடமையின் றடியேன் உனதருள் அமிர்த
வாரியின் மூழ்கிட நினைவாய்
குடமுனி சிவந்த சடைமுடி யிவர்ந்த
குரவணி சரணவா ரிசனே. 13

(XIII)

நல்வினை முனது திருவடி விடய
நாடுறு பொறியுடல் கரணம்
புல்லிய இனமென் றறிந்தஃ தடைந்து
பொருந்துமற் றிவைவிட அறியேன்
கல்லென இழியுஞ் சாரல்பாய் அருவி
காழகில் திரள்மலை காட்ட
மல்லலைக் கடல்சங் கினமலை காட்டி
மலிசம ராபுரிக் குகனே. 1

ஏழ்கட லணைய அருள்கொடு புவிநீ
இலங்குசற் குருவதாய் வந்த
போழ்தெலா மாறு புரிந்தவெங் கொடிய
புலையனை யாண்டவா றறியேன்
வேழமா மலையில் தாழ்மத அருவி
வௌளந்துளைந் திளம்பொழில் மூச
மாழைவண் டினங்கள் பூமணங் கமழும்
மலிசம ராபுரிக் குகனே. 2

பாதகம் புரியு மெனதுளம் நினைக்கும்
பரிசினி லொருசிறி தெனினுங்
கோதறு முனது திருவடிக் கன்பு
கொண்டுநின் றுருகிடக் காணேன்

ஒதுறு குரவம் பூச்சிறு குழவிக்
கூன்கழி ஞெளிவிடு பிழியை
மாதவி மனையிற் சூர்மக வூட்டி
மலிசம ராபுரிக் குகனே. 3

கொங்கையங் குவடு மார்பிலூ டுருவக்
கொடியிடை மகளிரைத் தழுவி
வெங்கனல் மெழுகா யுருகிடு முளத்து
வினையனேன் உய்யுநா ளுளதோ
திங்களங் குழவிச் சடையவன் புயத்துன்
திருவடிக் கமலமும் அவன்பால்
மங்கைதன் தனத்துன் குமுதவாய் மலரும்
மலிசம ராபுரிக் குகனே. 4

பிறப்பறு வீட்டுற் பவமெனக் கருளிப்
பிறங்குசிற் சுகஅமிர் தருத்தி
ஒழுக்குமென் போதம் அனைத்தையும் அறுத்திங்
குலகிய லுணர்வெலாம் மறைத்து
விறற்றகு முனது திருவடி விளக்கி
மேன்மைஐந் தொழிலிவண் புரிவாய்
மறைக்குரி யவனு மினிப்பிறப் பறியார்
மலிசம ராபுரிக் குகனே. 5

உருமென எயிறு கடித்திதழ் மடக்கி
உழல்விழி பொறிபட விழித்து
வெருவரு தோற்றக் கூற்றுவன் தடரும்
வேலையுன் பாலெனை யழையாய்
பிரசவண் கடம்பு செறியுமுன் புயத்துப்
பிறங்குறு குறமகள் விழியும்
மருமலர்க் கூந்தல் இளம்பிடி விழியும்
மலர்சம ராபுரிக் குகனே. 6

கண்ணிவாய் இரையை அருந்திடப் புகுந்து
கடுஞ்சிறைப் பறவைசிக் குறல்போற்
பெண்ணுறும் இன்பங் கருதியான் மாயப்
பிறப்பிடை அகப்படு கின்றேன்
நண்ணுகண் மணியே தண்கடல் அமிர்தே
நற்கதிச் சுவைதரு கரும்பே
மண்ணுறு மணியே வடித்தவே லரசே
மலிசம ராபுரிக் குகனே. 7

பிணியுடல் வெறுக்கேன் பெண்சுகம் மறுக்கேன்
பேணும்ஊண் ஒறுக்கிலேன் நின்தாட்
கணியநல் லடியார்க் கன்புசெய் திடிலேன்
ஆதலேன் ஏதமென் றறுமே
கணிபடு நறும்பூஞ் சிறுகுவை யதனைக்
கான்புலிக் குருவையென் றஞ்சி
மணிபடு மான்கள் திரிதரு சாரல்
மலிசம ராபுரிக் குகனே. 8

பொறிவழி விடயம் அறிநன வதனிற்
பொருந்திய வாதனை மிகவுஞ்
செறிதரு கரணம் நான்குறுங் கனவில்
தியங்கிமற் றிவையெலாம் இறந்த
நெறியுறும் அவித்தை யிருளுறு சுழுத்தி
நிலையினில் அறிவறத் துயின்று
மறுகுறு கின்றேனென் றுனை யடைவேன்
மலிசம ராபுரிக் குகனே. 9

குறுமைசேர் வடிவு நெடுமைமா தவமுங்
கொண்டுதென் மலையுறை முனிக்கு
மறைமுடி விருந்த விளக்ககத் தேற்றி
மருளிருள் துமித்தசற் குருவே

சிறுமையே புரியுங் கொடியனை யாளத்
திருவுளத் தடைத்திடு கண்டாய்
வறுமைதீ தறியார் களிப்புறு மாட
மலிசம ராபுரிக் குகனே. 10

## (XIV) சந்தக்கழிநெடில் விருத்தம்

கருணைப் பெருநற விருபுறன் ஒழுகிய
காரண மலைமகி முந்துணைவா
முரணுற் றிடுமல இருளற வொளிதரு
முளரிநி கர்த்ததி ருத்தாளாய்
தெருளுற் றிடுபே ரின்பக் கடலிடை
சிறியே னுறவைத் தினிதாளாய்
தருணச் சுந்தர மாறு திலகிய
சரவண சமரப் பதியானே. 1

சிவன்மெச் சுறஅவன் மடிமிசை நிலவிய
செந்துகி ராடைச் சிறுமதலாய்
புவனத் தொடுசர அசரம ளித்தருள்
பூரணி தருமொரு காரணனே
அவலச் சிறியவ னேனைய ளித்தாய்க்
கையா கைம்மா றுளதுகொலோ
தவளக் கலைமயில் புகழப் பெறுபுய
சரவண சமரப் பதியானே. 2

களவிற் கனியன களமுள இறைதரு
கனகிங் கிணிநரல் சிறுதாளா
விளவிற் கனிவிழ வொருகன் றெறிதரு
விமலனு வப்புறு குலமருகா
சுளகுச் செவிமத மலையென எழுதரு
துகளற எனதுள மறநினையாய்
தளவக் கொந்தள வனமயில் மகிழ்வுறு
சரவண சமரப் பதியானே. 3

பொதியக் குறுமுனி மதியில் தழுவிய
　　பூரண னேபுகழ் காரணனே
விதிபுத் தியிலறி வருமெய்ப் பொருளினை
　　விமலற் குதவிய நாயகனே
கதியெற் குனதிரு பதமுற் றெனைவிடல்
　　ககனத் தவரமு துறைகீரோ
ததியில் துயில்பவன் மருகச் சிறுபிளை
　　சரவண சமரப் பதியானே. 4

உதவிக் கொருதுணை யனையென எனைவங்
　　துறுதுய ரடையா தருள்தருவோய்
மதனப் பயல்விடு கணைகளி லடியேன்
　　வாடா துனதிரு தாள்தாராய்
இதழிச் சடைநட ராயன ளித்தருள்
　　எண்ணிய தருபுண் ணியராயா
சதநற் றளமுள முளரியின் நிறமுள
　　சரவண சமரப் பதியானே. 5

புனநற் குறமகள் விழியிணை களிபெறு
　　புனைமலர் நீபத் தார்மார்பா
மனநற் கமலம திடைதிரு வடியிணை
　　மருவத் திருவுளம் வைத்தெனையாள்
கனகுக் குடவிரு துடையவ விடைவரு
　　கடவுள்பு யத்தணை மிசைவளர்வோய்
தனதத் தனவென நடமயில் மிசைவரு
　　சரவண சமரப் பதியானே. 6

மதியொத் துளமுக மடவா ரிருபுடை
　　மகிழ்வுற நிகழ்வுறும் வடிவழகா
அதிகப் பெறுவளம் அடியவர் பெறஅருள்
　　அம்புய மலரன செங்கரனே

துதிபெற் றுளசுக சலதிக் கிடையதி
சமடனை வைத்திட நினைதிகொலோ
ததிதித் திமியென நடமயில் மிசைவரு
சரவண சமரப் பதியானே. 7

கலகப் பிணைவிழி யரிவையர் கிறிசெறி
கலவியை நலனென நனிநாடிப்
பலகற் பனைநினை மனமற நின்றருள்
பாலித் தடியனை யாளுதியே
உலகிற் பெரியவர் பணிதரு பரிதியின்
உம்பர்கள் கும்பிடு நெடுவேலாய்
தலைமைப் புகழ்பெறும் ஆறிரு கரமுள
சரவண சமரப் பதியானே. 8

கடகந் தணிமணி மகுடச் சிரமணி
கதிரொளி வீசத் திசைதோறும்
நடனச் சிறைமயில் மிசையுற் றடியர்முன்
நளினத் திருமுகம் மலர்வோனே
மடமைச் சிறியனுன் அருளைப் பெறநினை
வனசத் திருமகள் மருகோனே
தடவெற் பெனவளர் தவளக் களிறிவர்
சரவண சமரப் பதியானே. 9

அறமிக் குளவுளம் உடையவர் மகிழ்வுற
அவரெதி ருறவரு மொருநீதான்
மறமிக் குளசிறி யவனேன் எதிருற
வருநாள் ஒருநாள் உளதுகொலோ
திறமிக் குளசூர் மார்பூ டுருவச்
செஞ்சுடர் நெடுவேல் விடுவோயே
தறுகட் புலியத ளுடையவன் உதவிய
சரவண சமரப் பதியானே. 10

## (XV) கட்டளைக்கலித்துறை

அருளே மதமெனக் காட்டி யடிய ரகத்திருந்த
மருளே துடைத்த மதமா முகத்தன் மகிழ்துணைவா
தெருளே யடியனுக் கீகுதல் வேண்டுஞ் செழுமறையின்
பொருளே மயிலவ னேசம ராபுரிப் புண்ணியனே. 1

வந்திக்கும் அன்பர்க்கு வாழ்வுங் கதியும் மகிழ்ந்தளிக்குங்
கந்திக் களத்துமை மோந்துகொள் ஆறு கமலத்தனே
சிந்திக்கும் என்னெஞ்சை நின்பாத கஞ்சத்திற் சேரவைத்தேன்
புந்திக்கு ளேயுறை வாய்சம ராபுரிப் புண்ணியனே. 2

நதியும் மதியுங் குடிகொண்ட வார்சடை நம்பனுக்கோர்
நிதியுந் தருவு மெனவந்த வாநின தன்பருக்குக்
கதியுந் திருவுந் தருவள்ள லேகடை யேனையும்ஆள்
பொதியும் மலர்ப்பொழில் சூழ்சம ராபுரிப் புண்ணியனே.

பாதகம் எண்ணிலி செய்தேனை வாவென்றுன் பாதகஞ்சப்
போதக மாமலர் மீதுவைத் தோய்நின் புகலடியேன்
காதகங் கொள்ளச் சிவனுக்கு நான்முகன் காணவொணுப்
போதகஞ் செய்தவ னேசம ராபுரிப் புண்ணியனே. 4

கன்னிய ராமிரு வோரும் இருபுடை காதலுற
மன்னிய நாப்பண் இருந்தனை வோருக்கும் வாழ்வுதரும்
நின்னியல் பேதென வோதுகிற் பேன்நெடு மால்மருகா
பொன்னியல் மேனிய னேசம ராபுரிப் புண்ணியனே. 5

இகலடைந் தேவருஞ் சூர்குலம் மாய இருளினுக்கோர்
பகலடைந் தாலென வேல்விட்ட தீர பவனன்இலா
தகலடைந் தார்சுடர் போலநின் றனைப்பணி யன்பரைப்போற்
புகலடைந் தேனையும் ஆள்சம ராபுரிப் புண்ணியனே. 6

கவன மதிக்கும்என் நெஞ்சைத் திருத்திக் கடவுளரும்
எவன மதிக்குநின் தாளுன வைத்திங் கெனையளிப்பாய்

சிவன மதிக்குஞ் சிறுமத லாய்புகழ் செப்பிமுப்பார்ப்
புவன மதிக்குஞ் சமரா புரிவரு புண்ணியனே. 7

மறைகொண்ட பல்கலை யாய்ந்த பொதிய மலைமுனிக்கு
நிறைகொண்ட போதம் உரைசெய்த தேசிக நின்னடியேன்
கறைகொண்ட பவ்வத்தின் மூழ்காது காக்கக் கடனுனக்கே
பொறைகொண்ட மாதவர் சூழ்சம ராபுரிப் புண்ணியனே.

நாகப் படமணி குத்தி யெடுத்து நடம்புரியுந்
தோகைப் பரிமிசை தோன்றிய வாதுக ளின்றடியேன்
ஏகத் தியானத் திருந்திளைப் பாற இனிதளிப்பாய்
போகத்து நாகர் புகழ்சம ராபுரிப் புண்ணியனே. 9

மறுமை குறித்த பயத்தாற் பணிபவர் மத்திமரே
சிறுமை குறித்துப் பணிவா ரதமர்கள் செப்புமிந்த
உறுமை குறித்தல தன்பாய்ப் பணிபவ ருத்தமரே
பொறுமை குறித்தவர் சூழ்சம ராபுரிப் புண்ணியனே. 10

நடிக்குமெய் யன்பரின் என்போவி கள்நிற்க நம்பினர்க்கே
பிடிக்கு ளடங்கிடை யார்கட் செலாதுளம் பேணிநின்பொன்
அடிக்கு ளுருகுங்கண் ணீர்வார்ந் துரைதழுத் தங்கமெல்லாம்
பொடிக்கும் உரோமஞ் சமரா புரிவரு புண்ணியனே. 11

கோழிக் கொடியைநின் வேலை மயிலைக் குறித்தவரை
ஊழிக் கனலும் அணுகா தெனினுனை யேயடைந்தேற்
காழிப் பவமும் உளதோ அரிவையர் அப்புசந்தம்
பூழிக் குளுமணக் குஞ்சம ராபுரிப் புண்ணியனே. 12

முருகா எனவுனை யோதுந் தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடைவர் வியாதி யடைந்துநையார்
ஒருகா லமுந்துன்ப மெய்தார் பரகதி யுற்றிடுவார்
பொருகாலன் நாடு புகார்சம ராபுரிப் புண்ணியனே. 13

(XVI)

நாரணன் ஆரணன் எந்நாளும் போற்றும் நளினபத
காரணன் பாகம் பிரியாத கன்னி களிக்கவருஞ்
சீரண வுன்பதச் செந்தா மரையென் சிரசில்வைப்பாய்
வாரண வெல்கொடி யாய்சம ராபுரி வானவனே. 1

வாத முடன்பித்த மையென்னு மூன்றின் வரும்பிணிதீர்த்
தேதன் பிழைபொறுத் தேன்றுகொள் ளாயெழி லார்குறப்பெ
காதல் புரிந்தணை பன்னிரு செம்புயக் காங்கெயனே [ண்
மாதமும் மாரி சொரிசம ராபுரி வானவனே. 2

அந்திப் பிறையணி வேணிய னார்தந்த ஆனைமதஞ்
சிந்திப் பொழிந்து வரவே தியானித்த சேவலனே
உந்திப் பவக்கடல் வீழா தெனையுன் னுபயசரண்
வந்திக்க வேதரு வாய்சம ராபுரி வானவனே. 3

கரும்போ தவளக் கடலமிர் தோகன மாமழையோ
அரும்போ தெழுநற வோவுற வோஐயம் நீக்கியின்பந்
தரும்போ தமோநின் னருளினை யேதென்று தானுரைப்பேன்
அரும்போ தகக்களி றேசம ராபுரி வானவனே. 4

நோயேன் தனக்கொரு சஞ்சீவி யஞ்ச நுவன்றெழுந்த
பேயாந் தனக்கொரு மந்திர மாமெனப் பேணுதற்கோர்
தாயா மினிய தமரா மெனக்குறு தஞ்சமுமாம்
மாயாக் கருணை தருஞ்சம ராபுரி வானவனே. 5

தோகை மயிற்பரி யேறிவந் தென்னெதிர் தோன்றியருள்
ஓகை மிகவும் புரிந்தெனை யாள்வதும் உண்டுகொலோ
பாகை மறுத்த மொழித்தெய்வ யானை பரிகணவா
வாகை புனைவடி வேற்சம ராபுரி வானவனே. 6

ஆறங்கம் நான்மறை யோதுங் குறுமுனிக் கானமறைப்
பேறங் குதவும் பெருமான் அமிர்தம் பிறங்கியெழு

பால்தங்கு வாரி துயின்றோன் மருகனின் பாதமுனு
மாறிங் கெனக்கரு ளாய்சம ராபுரி வானவனே. 7

ஏழைத்தொண் டேனுனை யண்டிநின் றேனெனை யேன்றுகொள்ளாய், மாழைப் பொருப்புவில் லாளன்மைந் தாநினை வந்திக்கிலாக், காழைப் பொருவு மனத்தின னுயினுங் காப்பை கண்டாய், வாழைப் பெருங்குலஞ் சூழ்சம ராபுரி வானவனே. 8

பேயன் பிழையையும் பித்தன் பிழையையும் பேசரிய
சேயன் பிழையையுந் தேரார் பெரியர் சிறியபுன்மை
நாயன் பிழைதனை நீபொறுத் தாளுதி நாயகமே
மாயன் திருமரு காசம ராபுரி வானவனே. 9

அருள்மேக மென்னகத் தூடெழும் ஆனந்த வாரியுண்மைப்
பொருள்மா தவருளம் புக்குறை பூரணம் போதநல்குந்
தெருள்வா சவன்முதற் றேவரும் போற்றிய தெய்வநெஞ்சின்
மருள்மாசு தீர்க்குஞ் சமரா புரிவரு வானவனே. 10

(XVII)

கண்ணிற் சிறந்த கருமணி யேகடை யேனிதயத்
துண்ணிற்கு மோரொளி யேவெளி யேயுயர் தேவரெல்லாம்
விண்ணிற் றருமலர் கொண்டே யிறைஞ்சுமுன் மென்மலர்த்தா
தண்ணிற் சிறந்தன் றேசம ராபுரிச் சண்முகனே. [ள்

விண்டலை கொண்டநின் சேவடிக் கன்புசெய் வித்தவரே
மண்டலை வாரிப் பவங்கடப் பார்மற்றை யோர்களெல்லாங்
கண்டலை மென்மொழி யார்கரு வாழி கடக்கறியார்
தண்டலை மண்டு சமரா புரிவரு சண்முகனே. 2

தீதே புரியுங் கொடியேன் அகத்துன் செறிகழல்தாள்
போதே யிருக்க வரந்தரு வாய்புனக் குன்றவர்தம்
மாதே புணரு மணிப்புயத் தாய்வண்டு மிண்டிமொய்க்கத்
தாதே சொரிபொழில் சூழ்சம ராபுரிச் சண்முகனே. 3

ஆலஞ் செறிந்த கறைமிடற் ரூற்கும் அகத்தியற்குங்
கோலஞ் செறிந்த மறைமொழி கூறுங் குருபரனே
சீலஞ் சிறிதும் அறியேனை யாண்ட திறனென்கொலோ
தாலம் புகழுஞ் சமரா புரிவரு சண்முகனே. 4

வஞ்சக நெஞ்சின னுயினும் மாதர் வலையிற்கொட்டும்
பஞ்சன நெஞ்சின னுயினும் உன்றன் பணிபுரியா
தஞ்சுறு தீவினை செய்தே னெனினும் அடியனுக்குன்
தஞ்சம லாதுள தோசம ராபுரிச் சண்முகனே. 5

அரையிருள் நோக்கும் விழிபோல் மலவிரு ளாமுமென்னைப்
புரையறும் உன்மலர்த் தாட்பிர காசம் புகுதவைப்பாய்
வரையுறு தோள்வள்ளி நாயகி கொங்கை மணந்தவனே
தரையுறும் அன்பர் புகழ்சம ராபுரிச் சண்முகனே. 6

தீதொன் றுநெஞ்சினன் என்றுகொல் உன்றன் திருவடியாம்
போதொன் றிரத நறைபெறு வேன்பொரு சேவிணைபோற்
காதொன் றுகண்ணினள் கானக் குறத்திதன் காதலனே
தாதொன் றுபூம்பொழில் சூழ்சம ராபுரிச் சண்முகனே. 7

விடையுடை யானுங் கருடத் துவசனும் வெங்குலிசப்
படையுடை யானும் அனக்கொடி யானும் பணிபெரியோய்
கடையுடை நாயிற் றிரியுமென் னுசை களைதிமிரத்
தடைவிடு நெஞ்சினர் சூழ்சம ராபுரிச் சண்முகனே. 8

காரார் பிறவிக் கடலைக் கடத்துமென் கல்மனத்தை
நீரா யுருக்குமென் நீடுயிர் மூடி நிறைந்திருண்ட
தீரா மலப்பிணி தீர்த்திடும் உன்றன் திருவடியே
தாரார் பொழில்புடை சூழ்சம ராபுரிச் சண்முகனே. 9

நாயேனுன் சேவடி வேண்டுகொ ளாது நலிபிணியால்
மாயாம லுன்னடி யேன்றனைக் காத்தனை மற்றதற்கோர்
பேயேன்பின் செய்யுங்கை மாறுள தோபெரி யாய்சிறியேன்
தாயே யெனதுற வேசம ராபுரிச் சண்முகனே. 10

(XVIII) நேரிசை வெண்பா

கலைமுகங்கள் போற்றுங் களிற்றுக் கிளையான்
இலைமுகங்கொள் வேலுக் கிறையான் - நிலைமுகங்கள்
ஆறுடையான் ஆறிரண்டு தோளுடையான் அம்போரூர்
வீறுடையான் என்றுளமே வேண்டு. 1

வேதாந்தச் சென்னி மிசையிருக்குந் தெய்வமே
போதானந் தச்சுடரே புண்ணியனே - நாதாந்த
இன்பத்தைக் காட்டி யெனையளிப்பாய் போரூரா
துன்பத்தை யெல்லாந் துடைத்து. 2

சும்மா இருவெனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலமென் றன்றுரைத்த - எம்மான்
அருணகிரி நாதன் அநுபவம் நாயேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு. 3

மன்னு பிரமத்தில் வாழ்அபின சத்தியிடத்
துன்னும் பினசத்தி யுண்டதனில் - துன்னும்
உலகுண் டதனை யுளம்பிடிக்கும் என்றான்
இலகும்போ ரூர்வாழ் இறை. 4

அறிவைவிடத் தோன்றிடா தம்புவியும் நெஞ்சுஞ்
செறியறிவாய் நில்லென்று செப்பிப் - பிறிவறஎன்
நெஞ்சைத் திருத்தி நிறையவைத்த போரூரன்
கஞ்சத் திருத்தண்டைக் கால். 5

இளம்பிடியும் மானும் இசைகற் பகமொன்
றுளங்குடியாக் கொண்டெனைவிட் டோவா-களங்கனிபோற்
கண்டத்தான் ஈன்றதது காரணமெய்ப் பூரணத்தார்
அண்டத்தான் சேய்போரூர் ஆங்கு. 6

தஞ்சமென வந்துன் சரணடைந்த நாயினேன்
வஞ்ச மனநினைவால் வாடினேன் - வஞ்சமனம்
நீக்கித் திருப்போரூர் நின்மலா நின்னடிமை
ஆக்கி யெனையாளு வாய். 7

உன்னடிமைக் கேவிரத முற்றசிறி யேன்மனமுன்
பொன்னடிமைக் காகாத பூணுமோ - நின்னடிமை
ஆக்குதற்கும் போரு ரணிநகராய் நாயேனைக்
காக்குதற்கும் உன்றன் கடன். 8

தீனமனம் போக்கிச் சிறியேனுக் குன்தாளுக்
கானமனந் தந்தென்னை யாளுவாய் - ஞானபர
முத்தாநம் போரூர் முருகாஎன் னுருயிருக்
கத்தா கருணை லயா. 9

ஆனந்தத் தேனிருக்கும் ஆறுமுகக் கற்பகமே
ஈனந்தீர் போத இரவியே - தேனுந்து
நீபத் தொடையாய் நிகழ்போரு ரையாஎன்
தாபத் திரயந் தவிர். 10

ஆ சுகடு

---

## 27. அடைக்கலப் பத்து

(1)

மணியே யனஐங் கரற்கிளைய
மன்னே பொன்னே வானமிர்தே
எணியே யிருவர் பணிந்தேத்தும்
ஈசன் உவந்த சிறுமதலாய்
நணியே யெனைவந் தாண்டுகொண்ட
நாதா இனிநா யேனைவிடேல்
அணியே சிறந்த போரூரா
அடியேன் உன்றன் அடைக்கலமே. 1

வேயே யனதோ ளுமையுதவும்
மிளிர்பொற் கலசப் பாலுண்ட
தூயோய் இருகன் னியர்கணவா
சோதி வேலா மயில்வீரா

நாயேன் இழைத்த பிழைபொறுத்துன்
நளினப் பாதந் தரல்வேண்டும்
ஆயே யனைய போரூரா
அடியேன் உன்றன் அடைக்கலமே. 2

மாண்டு பிறவா நெறியருளும்
மன்னு வானோர் முதலெவரும்
வேண்டும் பொருளே பொய்யவனேன்
மெய்யாந் துணையே நாயடியேன்
ஈண்டிங் கிழைத்த குற்றங்கள்
எல்லாம் பொறுத்தே யெளியேனை
ஆண்டுகொளவேண் டும்போரூர்
ஐயா வுன்றன் அடைக்கலமே. 3

வினையேன் இழைத்த பெரும்பிழைகள்
பொறுத்தாட் கொண்ட மெய்த்தேவே
நினையேன் வேறோர் புகலிடமும்
அறியேன் சிறியேன் நின்மலனே
கனைமா பிறவிக் கடல்கடப்பக்
கழல்தாட் கலனைத் தரவேண்டும்
அனையே யனைய போரூரா
அடியே னுன்றன் அடைக்கலமே. 4

பொன்னே யனைய அருள்தந்தாய்
பொற்பார் திருத்தாள் தொழத்தந்தாய்
மன்னே யதனை மறந்திகழ்ந்த
மதியி லேனென் றினியுய்கேன்
மின்னே யனைய பொய்வாழ்வை
விழைந்த கடையே னயிடினும்
அன்னே யனைய போரூரா
அடியே னுன்றன் அடைக்கலமே. 5

காரின் கருணை பொழிந்திந்நாட்
காத்துக் கடையேன் றனையளித்தோய்
கூருங் கொடிய னென இனித்தான்
குறித்து விடுத்தல் கணக்கோதான்
வீரஞ் செறிந்த வரைத்தோளா
விண்ணோர் பணிந்த திருத்தாளா
ஆரஞ் சிறந்த போரூரா
அடியே னுன்றன் அடைக்கலமே. 6

கலங்கு நெறியிற் செலுத்தாமல்
கதிசேர் நெறிக்கட் செலுத்தியெனை
இலங்க வைத்த பெருமானே
இனிமேல் விடுத்தா லென்செய்கேன்
துலங்கு பொறிச்செஞ் சேவலனே
துதித்துப் பணிவோர் காவலனே
அலங்கல் மார்பா போரூரா
அடியே னுன்றன் அடைக்கலமே. 7

ஏது செயினுங் கொடியேனுக்
கிரங்கி யாண்ட பெருந்தாதாய்
தீத னிவனென் றெனையிகழ்ந்தாற்
சிறியேற் குயுமோர் நெறியுளதோ
ஓது மதிபோல் அருளமிர்தம்
உதவும் ஆறு முகப்பெருமான்
ஆதி புதல்வா போரூரா
அடியே னுன்றன் அடைக்கலமே. 8

எளியேன் றனையோ ரன்பனென
ஏன்று கொண்டாண் டருள்செய்தோய்
களியா லுனது புகழிகழ்ந்த
கடையே னெனினும் விடேல்கண்டாய்

வெளியே யொளியே வியனறிவே
வேத நாலின் முடிமணியே
அளியா ரமிர்தே போரூரா
அடியே னுன்றன் அடைக்கலமே. 9

கண்ணின் மணியே யுயிர்க்குயிரே
கரும்பின் சுவையே பெருந்தேனே
நண்ணுங் கதியே சுரர்பதியே
நாதா அதிக சிவபோதா
எண்ணும் அடியார் பெருவாழ்வே
என்னுயகனு கியதேவே
அண்ணுங் கனியே போரூரா
அடியே னுன்றன் அடைக்கலமே. 10

(II) விருத்தக்கலித்துறை

பேறு தருந்தொல் யானை முகன்றன் பிரியவீரன்
நீறில குஞ்செம் மேனி யரன்தந் தருள்நீதன்
தேறில குந்தெண் ணீரென வுள்ளந் தெளிவீர்காள்
ஆறு முகன்றன் போரியை வந்திங் கடைவீரே. 1

மூதுணர் வொன்றும் வீடுற நண்ணும் முனிவோர்காள்
பேதமை யுந்து நூல்களி னின்றும் பிறழாதீர்
மாதுமை மைந்தன் மால்மரு கன்றன் வளன்ஈயும்
ஆதர வண்டும் போரியை வந்திங் கடைவீரே. 2

ஊனையி கழ்ந்தும் ஊனை மறந்தும் உழல்வீர்காள்
மோனசு கஞ்சும் மாவரு மின்றென் மொழிநாடிக்
கானில் விளங்கு மாமயி லன்பன் கதிர்வேலன்
ஆனவர் துன்றும் போரியை வந்திங் கடைவீரே. 3

பாலும் நறுஞ்செந் தேனும் விரும்பும் பழமோடே
ஏலுறும் இன்பம் போலறி வின்ப ஒளிமேவுங்
கோல நரந்தன் நீபசு கந்தன் குயில்மாமேல்
ஆலுறு நந்தம் போரியை வந்திங் கடைவீரே. 4

மாரனை வெல்லுஞ் சீலமு ணர்ந்த மதியோர்காள்
காரின் இயங்கும் மேதியன் வஞ்சங் கடவீர்காள்
சூரடு துங்கன் நாரியி டன்றன் சுதன் ஆகம்
ஆரம் அரும்பும் போரியை வந்திங் கடைவீரே. 5

பாசவி லங்கின் நாணி விடும்பண் பினராகித்
தேசம தெங்கும் ஓடி யுழன்றுந் திரிவீர்காள்
மாசறு கந்தன் வேலவன் அம்பொன் மயில்வீரன்
ஆசினி துன்றும் போரியை வந்திங் கடைவீரே. 6

நோய்பிணி பம்புஞ் சூனியம் வஞ்ச நுவல்பூதங்
காய்பசி வெம்புஞ் சோக புயங்கங் கடிவீர்காள்
நேய முறுந்தண் மாதர்கள் நண்பன் நெடுவேலன்
ஆய்கிளி கொஞ்சும் போரியை வந்திங் கடைவீரே. 7

பீடுறு மைந்தன் மாதெழில் புங்கம் பெயர்மாட
மாடணி தங்க நீடுற எண்ணும் மதியோர்காள்
வேடர் தரும்பெண் மானுறு கொண்கன் விறல்வேலன்
ஆடக மண்டும் போரியை வந்திங் கடைவீரே. 8

வேகது ரங்கஞ் சேனைக லிங்க மிளிர்பூண்மா
நாகப டங்கொள் மாநில நெஞ்சின் நசையீர்காள்
ஏகமெ னுஞ்சொல் லோர்பொருள் தந்தவ னெனையாள்வோன்
ஆகமம் விஞ்சும் போரியை வந்திங் கடைவீரே. 9

நாவலர் நெஞ்சந் தாவுறும் இன்ப நலன்நீபா
ஓவற என்றும் ஓதுற எண்ணம் உடையீர்காள்
தீவயின் அங்கம் பாவையின் அங்கஞ் செயும்நீதன்
ஆவிறை மைந்தன் போரியை வந்திங் கடைவீரே. 10

ஆ எசஉ

---

# 28. விடுபாட்டுகள்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

கட்டளைக்கலித்துறை

அகிலாவி யுண்டெனக் காதலின் நீசட மாமெனவே
முகிலோ டிகலிப் புழுகற லாடிமொய் வாசங்கொண்டு
நகிலே சுமந்து வருந்திடை சாய நனுங்குழலார்
தகிலே யெனுதுள மேபோரி வேலனைத் தாழ்ந்திறைஞ்சே.

நேரிசை வெண்பா

அன்னம் அளிக்குமூர் அண்டினரைக் காக்குமூர்
சொன்ன மழைபோற் சொரியுமூர் - உன்னினர்க்குத்
தீதுபிணி தீர்க்குமூர் செவ்வே யிருக்குமூர்
ஓதுதிருப் போரூரெம் மூர். 1

கண்டேன் கவலைநோய் காண்கிலேன் மும்மலமும்
விண்டேன் சுகவீடு மேவினேன் - தொண்டேனங்
காருரும் பூஞ்சோலைக் காலருவித் தேன்பாயும்
போரூரன் வாழும் பொருப்பு. 2

தேன்பாடும் பூஞ்சோலைத் தென்போரி வேலவனைத்
தான்பாடு மேலோரித் தாரணிக்கே - ஆன்பாலுஞ்
சோறும் பெறுவார்கள் சொல்லவொண்ணுப் பேரின்பப்
பேறும் பெறுவார்கள் பின். 3

மாதர்யம னும்அவர்த மைவிழியே வன்பாசம்
பீதிதரும் அல்குல் பெருநரகம் - ஓதிலதில்
வீழ்ந்தோர்க்கும் ஏற விரகில்லை போரூரைத்
தாழ்ந்தோர்க்கு மில்லை தவறு 4

ஈரிரண்டு தோள்முக்கண் ஈசனருள் ஆறுமுகன்
ஓரிரண்டு தாளை யுறமேவின் - ஓரிரண்டு
வாழைக் கிடையிருந்த வாளரவின் வாய்ப்படார்
பீழைக் கிடைவருந்தார் பின். 5

திருவடிக்கீழ் நாயேனைச் சேர்த்தியே யென்றுங்
கருவடிக்கீழ்ப் போகாமற் காக்கும் - மருவடிக்கொள்
நீபத்தான் நூபுரத்தாள் நேயர்க் கிருள்போக்குந்
தீபத்தான் போரூரிற் சேய். 6

கேட்டவர்க்கு நோய்போங் கிலேசம்போம் பாவம்போம்
நாட்டுதிருப் பேரின்பம் நண்ணுமே - வேட்டதங்கை
நன்னிதியம் போற்கருணை நல்குதிருப் போரூரன்
சன்னிதியி லூதுதிருச் சங்கு. 7

ஈராற்று நாப்பண் இருந்தானுங் காண்பரிய
ஓராற்றுச் செஞ்சடையான் ஒண்சுதனை - ஈராற்றுக்
கையற் கிளையானைக் கண்டுளமே போரூரில்
உய்யக் கிளையா றுறு. 8

ஈண்டுலகி லுன்னை யிணங்கறியா நாயேனை
ஆண்டருள்போ ரூர்வே லரசனே - மாண்டு
பிறவாம லுன்றன் பதப்பூப் பெருந்தேனை
இறைவா எனக்கருள்நீ யின்று.

தீர்த்தஞ் சிவானந்தஞ் செய்யதல மோமாகு
மூர்த்தி பரப்பிரமம் முத்திதருஞ் - சீர்த்த
திருப்போரூர் உண்மையிதைத் தேர்ந்த பெரியோர்
மருப்போதன் கைப்படார் வந்து. 10

ஆ ௭௨௬

திருப்போரூர்ச் சந்நிதிமுறை

முற்றிற்று



உ

சிவமயம்

திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள்

அருளிச்செய்த

# மீனாட்சியம்மை கலிவெண்பா

# வேதகிரீசுரர் பதிகம்

# குமாரதேவர் நெஞ்சுவிடுதூது

# பஞ்சதிகார விளக்கம்

உ

சிவமயம்

மதுரை

# மீனாட்சியம்மை கலிவெண்பா

## காப்பு

அங்கயற்கும் மாற்கும் அரியபெரு மான்இடஞ்சேர்
அங்கயற்கண் ணம்மைக் கணியவே - அங்கயத்தின்
மாமுகங்கொள் கோமானை வாழ்த்திக் கலிவெண்பா
நாமுகந்து பாடுவோம் நன்கு.

## கலிவெண்பா

சீராரும் பூங்கமலத் தெள்ளமுதே சேயிழையே
காராரும் மேனிக் கருங்குயிலே - ஆராயும்

வேதமுத லாகிநின்ற மெய்ப்பொருளே மின்னொளியே
ஆதி பராபரையே அம்பிகையே - சோதியே

அண்டரெல்லாம் போற்றும் அரும்பொருளே யாரணங்கே
எண்திசைக்குந் தாயான ஈஸ்வரியே - தெண்திரையில்

வந்தஅமு தேயென்று மாருமலேகினைப்பார்
சிந்தைதனி லேயுறையுஞ் செல்வியே - அந்தமிலா

5 மாயோன் தனக்கிளைய வல்லியே மாமயிலோன்
தாயே பராபரையே சங்கரியே - தூயவொளி

மன்னுங் கயிலாச மாமயிலே மேருவெனும்
பொன்னங் கிரியுடைய பூங்கொடியே - அன்னமே

அட்டகுல வெற்பாய் அமர்ந்தவளே ஆதிஅந்தம்
எட்டெட்டுந் தானாய் இருந்தவளே - முட்டஎங்கும்

அவ்வெழுத்தாய் நின்ற அரும்பொருளே ஆரணங்கே
உவ்வெழுத்தாய் நின்றதொரு உண்மையே-எவ்வெழுத்துந்

தானாகி நின்றதொரு தற்பரையே யெவ்வுயிர்க்கும்
ஊனாகி நின்றதோர் உத்தமியே - கோனாய்ப்

10 படியளக்க மால்பார் பதினான்கும் ஒக்க
அடியவரை யீடேற்றும் அன்னாய் - முடிவிலா

ஓங்காரத் துட்பொருளே உற்றநவ கோணத்தில்
ரீங்காரந் தன்னில் இருப்பவளே - பாங்கான

முக்கோணத் துள்ளிருக்கும் மூர்த்தியே மூவிரண்டாஞ்
சட்கோணத் துள்ளிருக்குஞ் சத்தியே - மிக்கபுகழ்

எண்ணிரண்டாங் கோட்டில் இருப்பவளே எவ்வுயிர்க்கும்
பண்ணிசைந்த பாட்டின் பழம்பொருளே - விண்ணுலகின்

மேற்பட்டங் கூடுருவி மேலாகி நின்றதொரு
நாற்பத்து முக்கோண நாயகியே - சீர்ப்பெற்ற

15 பஞ்சகோ ணத்திருந்த பைங்கிளியே பார்முழுதுந்
தஞ்சமது வாகிநின்ற தையலே - செஞ்சொல்மறைச்

சொல்லே பொருளே சுவையே அறுசுவையே
எல்லாப் புவிக்கும் இறைவியே - தொல்லை

எறும்புகடை யானைதலை எண்ணில் உயிர்க்கும்
உறும்பொருளாய் அங்கங் குணர்வாய்ப்-பெறும்பயனாய்

ஆறாறு தத்துவமாய் ஐயிரண்டு வாயுவாய்க்
கூறாய்த் திசைபத்தின் கூட்டமாய்ப் - பேரான

அஞ்செழுத்தாய் எட்டெழுத்தாய் ஐம்பத்தோ ரக்கரமாய்ப்
பஞ்சவர்ன மாய்ப்பஞ்ச தேவதையாய் - வஞ்சமற்ற

20 ஆறாதா ரப்பொருளாய் ஐயைந்தாய் ஐம்மூன்றாய்
வீறான சக்கரத்தின் மின்னொளியாய்க் - கூறுங்

கருவிகர ணாதிகளாய்க் கைகலந்து நின்ற
பெரியதொரு மாயைப் பிரிவாய் - உரியதொரு

சோத்திரத்திற் சத்தமாய்த் தொக்கிற் பரிசமாய்
நேத்திரத்திற் பேருருவாய் நீக்கமிலா - நாத்தலனின்

மெத்திரத மாய்மூக்கின் மேவுகந்த மாய்ப்பிறவாய்
மத்த பிரமத்த வயிரவியாய்ச் - சுத்த

துரியமதாய்ப் பின்னுந் துரியாதீ தத்தின்
அரிய சிலம்பொலியும் ஆர்ப்பத் - தெரிவரிதாய்

நாடுதனிற் சென்றிரந்து நற்பவுரி கொண்டுதொந்தம்
ஆடுகின்ற பார்ப்பதியே அம்பிகையே - நாடிக்

களங்கமற வேதான் கரும்புருவந் தன்னிற்
பளிங்கொளியாய் நின்ற பரமே - வளம்பெறவே

கண்ணிரண்டி னுள்ளே கருணைத் திருவடிவாய்ப்
புண்ணியமாய் நின்றருளும் பூவையே - பண்ணமைந்த

நாசி நுனிமேல் நடுவெழுந்த தீபமாய்
ஓசைவிந்து நாதாந்தத் துட்பொருளாய் - நேசமுடன்

அஞ்சு முகமாய் அகண்டபரி பூரணமாய்ப்
பஞ்சபூ தம்மான பைங்கிளியே - கஞ்சமலர்ப்

பாத மிரண்டாகிப் பச்சைநிறந் தானுகி
ஆதிமுத லாகிநின்ற அம்பரமே - தீதிலா

நெற்றிதனிற் கண்ணுகி நிட்களரூ பப்பொருளாய்
உற்றவெளி யாகிநின்ற வுத்தமியே - பத்திநிரை

ஆகாயத் தின்னெளியாய் அந்தரத்தின் ரூபமாய்
மேகாதிக் குள்ளே விளைபொருளாய் - வாகாம்

இடைபிங் கலையாய் இரண்டுக்கும் எட்டாக்
கடையுஞ் சுழிமுனையாய்க் காலாய் - மடலவிழ்ந்த

மூலாதா ரத்தொளியாய் மும்மண்ட லங்கடந்து
மேலாதா ரத்திருந்த வெண்மதியாய்ப் - பாலூறல்

உண்ணுஞ் சிவயோக வுத்தமியே மெய்த்தவமே
பண்ணுமறை வேதப் பழம்பொருளே - எண்ணரிய

மெய்ஞ்ஞான வித்தே விளக்கொளியே மெய்ச்சுடரே
அஞ்ஞான மேயகற்றும் அம்மையே - பைந்நாகம்

பூண்டசிவ னரிடத்துப் பூங்கொடியே பாங்குடனே
தாண்டவமா டப்பவுரி தாளமொத்தி - ஆண்டியுடன்

ஆடுங்கூத் தாடிச்சி யம்மனைபந் தாடிச்சி
தேடியும்மால் காணச் சிவசத்தி - நாடியுனைப்

போற்றும்அடி யார்கள்வினை போக்கியே அஞ்சலென்று
தோற்றுகின்ற அம்மை துடியிடைச்சி - ஏத்தரிய

பச்சை நிறத்தி பவளக் கொடியிடைச்சி
கச்சைப் பொருமுலைச்சி கைவளைச்சி - கொச்சை

மலையரையன் பெற்ற மலைச்சி கலைச்சி
நிலையறிவே தாந்த நிலைச்சி - அலையாத

அன்ன நடைச்சி யருமறைச்சி யாண்டிச்சி
கன்னல் மொழிச்சி கருணைச்சி - பன்னுதமிழ்

வாய்ச்சி சடைச்சி வடிவுடைய மங்கைச்சி
பேய்ச்சி இளமுலைச்சி பேதைச்சி - காய்ச்சியபால்

வெண்ணெய் மொழிச்சி வெளிச்சி வெளியிடைச்சி
அண்ணுபுரந் தீயிட்ட அம்படைச்சி – நண்ணிலரும்

கொப்புக் குழைச்சி குவளை பொருவிழிச்சி
அப்புச் சடைச்சி சிவாகமச்சி - மெய்ப்பாங்

கருப்புச் சிலைச்சி கலைச்சி வலைச்சி
மருப்புத் தனத்தி மவுனத்தி - பொருப்பிடத்தி

தாமப் புயத்தி சமர்த்தி தருமத்தி
நாமச் சிவபுரத்தி நாரணத்தி - தேமருவுங்

காரணத்தி பூத கணத்தி தனபார
வாரணத்தி அட்டதிக்கு மாரணத்தி - பூரணத்தி

பாத பரிபுரத்தி பங்கயத்தி செங்கரத்தி
சோதி மணிநிறத்தி சொப்பனத்தி - பாதிமதி

சூடுகின்ற சொக்கருடன் துய்யபுலித் தோலுடுத்திக்
காடுதனில் வீற்றிருக்குங் காரணியே - நாடறியுஞ்

சேணிச்சி நல்ல சிறுத்தொண்டன் பிள்ளையறுத்
தூணிச்சி நஞ்சமுதாம் ஊணிச்சி - பாணிச்சி

பாசாங்கு சத்தி பரத்தி பருப்பதத்தி
காசாம்பூ மேனிக் கனதனத்தி - மாசிலா

அம்பரத்தி ஐம்புலத்தி யானதொரு வேதாந்த
உம்பருக்கும் எட்டாத வுத்தமத்தி-செம்பொன்வளைச்

செட்டிச்சி வைகைதனிர், சென்றுவெட்டி மண்சுமந்த
ஒட்டச்சி பூதியணி யுத்தளத்தி - அட்டதிக்கு

மின்னே விளக்கே விலையில்லாச் சீவரத்னப்
பொன்னே நவமணியே பூங்கிளியே - இன்னமுதே

மாணிக்க வல்லியே மாமரக தப்பணியே
ஆணிக் கனகத் தரும்பொருளே - மாணுற்ற

சிங்கார வல்லியே செம்பொற் சிலைவளைத்த
கங்காளற் கன்பான கண்மணியே – மங்காத

தெய்வக் குலக்கொழுந்தே செம்பட் டுடைத்திருவே
ஐவருக்குந் தாயாய் அமர்ந்தவளே - மெய்யருக்குச்

சித்தி கொடுக்குஞ் சிவானந்தி அன்பருக்கு
முத்திகொடுக் குஞ்ஞான மூர்த்தியே - எத்திசைக்கும்

தாயகமாய்ச் சூழ்தா வரசங்க மம்விளக்குந்
தூயசுடர் மூன்ருன சூக்குமமே - வேயீன்ற

நித்திலமே கற்பகமே நின்மலமே நன்மணியே
சுத்தபரி பூரணியே சுந்தரியே - அத்தருடன்

வாதாடு மங்கையே மாமந்த்ர ரூபியே
வேதாந்தி யேகமல மெல்லியலே – நாதாந்த

மாயே சுவரியே மங்கையே மாமறைக்குந்
தாயாகி நின்ற சரஸ்வதியே - காயாய்ப்

பழுத்த பழமாய்ப் பழத்திரதந் தானுய்
முழுத்த பரானந்த முதலாய் - எழுத்துமுதல்

ஆறுசம யங்களுக்குள் அவ்வவர்க்கும் வெவ்வேருய்
வேறு பலரூப விகற்பமதாய்க் - கூறரிதாய்

அங்கங்குந் தானுய் அமர்ந்தவளே ஆதியந்தம்
எங்கெங்குந் தானுய் இருந்தவளே - திங்கள்நுதல்

அஞ்சுகமே தேனே யணங்கே யமுதமொழிக்
கிஞ்சுகமே பிஞ்சுமதிக் கிள்ளையே - கொஞ்சுகுயில்

கன்னி திரிசூலி கபாலி சிவகாமி
மன்னு கவுரி மகமாயி – பொன்னின்மலர்த்

தாளி சதுரி சவுந்தரிமுக் கண்ணுடைய
காளி பகவதி கங்காளி - தூளியாத்

தக்கன் தலையறுத்த தத்துவத்தி தற்பரத்தி
அக்கினிகை யீர்ந்த அமர்க்களத்தி - மிக்கபுகழ்

வீரசத்தி மேருவினை வில்லா வளைத்தவொரு
பாரசத்தி வேதப் பராசத்தி - தாரணிகள்

கொண்டகா ரிச்சிக்குங் குந்தளத்தி மாமதனன்
சண்டைகா ரிச்சி சகலத்தி - துண்டமதிச்

செஞ்சடைச்சி கஞ்சுளிச்சி செம்படத்தி கங்கணத்தி
பஞ்சசத்தி கொந்தளத்தி பைம்பணத்தி-அஞ்சனத்தி

முத்துவடக் கொங்கைச்சி முல்லை மகிழ்நகைச்சி
பத்தரவர் நெஞ்சகத்தி பாரிடத்தி - சுத்தவெள்ளை

அக்கு வடத்தி அறம்வளர்த்தி அன்புடைச்சி
செக்க ரிளம்பிறைச்சி செண்பகத்தி - தக்கமணி

ஓலைக் குழைச்சி உபதேச குண்டலச்சி
மாலைக் கழுத்தி மவுனத்தி - ஞாலமெல்லாம்

அக்கரத்தி பொக்கணத்தி அண்டபகி ரண்டத்தி
முக்கணத்தி நிட்களத்தி மோட்சத்தி - மிக்கபுகழ்

ஏகாக் கரத்தி இமயப் பருப்பதத்தி
நாகாதி பூண்டசிங்க நாதத்தி - வாகான

பத்மா சனத்தி பரிமளத்தி பாம்பணைத்தி
கற்பாந்.தரத்தி கருநிறத்தி - விற்காம

வேடிச்சி நல்லதொரு மீனவனுக் கன்றுமுடி
சூடிச்சி கொக்கிறகு சூடிச்சி - நாடிச்சீர்

பாதந் தனைத்தேடும் பங்கயத்தில் வீற்றிருக்கும்
வேதன் தலையறுத்த வித்தகத்தி - நீதிபுனை

பாடகத்தி கீதப்ர பந்தத்தி வெள்ளிமன்றுள்
ஆடகத்தி கூடலுக்குள் ஆதியே - ஏடெதிரே

ஏற்றுவித்து முன்சமணர் எண்ணா யிரர்கழுவில்
வீற்றிருக்க வைத்தமறை வித்தகியே - நாற்றிசையும்

கொண்டாடப் பெற்றதொரு கோமளமே யாமளையே
தண்டா மரைத்திருவே தையலே - மண்டலங்கள்

எங்குமொத்து நின்றருளும் ஈஸ்வரியே மாமதுரை
அங்கயற்கண் நாயகியே அம்மையே - துங்க

ஒளியே பெருந்திருவே ஓதிமமே உண்மை
வெளியே பரப்பிரம வித்தே - அளிசேரும்

கொந்தளக பந்திக் குயிலே சிவயோகத்
தைந்தருவே மூவருக்கும் அன்னையே - எந்தம்இடர்

அல்லல் வினையெல்லாம் அகற்றியே அஞ்சலென்று
நல்லசவு பாக்கியத்தை நல்கியே - வல்லபத்தின்

ஆசுமது ரஞ்சித்ர வித்தார மென்றறிஞர்
பேசுகின்ற வுண்மைப் பெருவாக்கு - நேசமுடன்

தந்தென்னை யாட்கொண்டு சற்குருவாய் என்அகத்தில்
வந்திருந்து புத்தி மதிகொடுத்துச் - சந்ததமும்

நீயே துணையாகி நின்றிரட்சி அங்கயற்கண்
தாயே சரணஞ் சரண்.

---

திருக்கழுக்குன்றம்

# வேதகிரீசுரர் பதிகம்

— ★ —

### நெடுங்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

மேருவி லாவதி ஞரை வாவொரு வெங்கணை மாலரியா
விரிதலை யுலகந் தேரா அதிலுறு மிகுசக டிருசுடரா
ஆரண நாலும் பரியா அம்புய னமைவுறு சாரதியா
அவைநீ யுற்றிகலழியா முப்புரம் அட்டிடும் அந்நாளிற்
சீருறு *மூவர்க ளழியா துன்னடி சேரா நின்றனராற்
சிந்தையி லுன்றனை மறவா தவர்தமைத்தெறவாரெவரேகாண்
வேரிந றுந்தொடை மாதொரு பங்குறை வெற்பே கற்பகமே
வேதகி ரிப்பவ ரோக வயித்திய வேணிமு டிக்கனியே.1

---

* பரமவிரதன், பரமயோகன், பரமகுணன் என்றும் மூவர், திருமால் செய்த மாயவிஞ்சைகளால் திரிபுராதிகள்

ஆயுத ரந்தனி லேயும் பொழுதும் ஐம்பே ரிடராகும்
அகிலத் துறுசிறு குழவிப் பருவத் தறியா மையினிடராம்
ஏயகு மாரத் திடர்கா மத்தால் எழில்மனை சுதரெனவே
ஏயும் பொழுதும் இடர்பிணி யாவிட ரிலதா மிடிவந்தாற்
காயும் பசியா விடர்பின் நரைதிரை காணுறு போதுமிடர்
காலனு தித்திடு போதுறும் இடரைக் கடவுள் நீயறிவாய்
மேய இடர்க்கடல் மூழ்குமெனைச்சுக வேலையின் நீவைப்பாய்
வேத கிரிப்பவ ரோக வயித்திய வேணிமு டிக்கனியே. 2

களபப் படிரப் புளகக் கொங்கைக் கன்னியர் போகத்தைக்
கருதிக் கருதிச் சுடர்விட் டிலினிற் கடையேன் மடியாமல்
இளகு மனத்தோ டுனையே நாடி யிருந்திங் கென்செயல்போய்
எல்லா நின்செய லாக நினைந்தென் இருளற நாளென்றோ
முளரிநி கர்த்திடு கண்ணற் கரசே முண்டக னுக்கரசே
முத்திக் கரசே பத்திக் கரசே மூதறி வோர்க்கரசே
விளரிய தெள்ளி பாடிமு ரன்றெழு வெறியார் பொழில்சூழும்
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே. 3

அளியுயிர் மேலு நின்மே லன்பு மாகந் தனையமனுய்
அறியுமு வர்ப்பு நின்றிடு ஞானம் அடியே னுக்கருளிப்
புளிதரு பழமும் ஓடும் போலப் புரைதீர் நெஞ்சினர்பாற்
போதவி ருத்தித் தீதகல் வித்துன் பொன்னடி என்றருள்வாய்
ஒளிதரு இமயா சலமுன் உதவிய ஒருமயில் களிகூர
உற்றிடு காரே கற்றவர் சீரே ஓதும றைப்பேறே
வெளியினில் வெளியே ஒளியினில் ஒளியே மிகுசுக சாகரமே
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே. 4

---

மயங்கிச் சிவபக்தியினின்றும் தவறியபோது இம்மூவரும் தவறாதிருந்தனர். அத் திரிபுராதிகள் அழியவும் சிவபெருமானது திருவருளால் தாம் பிழைத்துச் சிவகணங்களாகித் திருக்கைலையின் வாயிற் காவலைப் பெற்றனர். இம்மூவர் சுசீலன், சுதன்மன், சுபுத்தி யென்றும் பெயருடையவர்.

மறையா கமமுதல் எவையுந் தரும மாதிய ஓதியிடு
மற்றவை தம்முள் அறமும் பொருளும் மலிதுன் பத்தனவா
நெறியா கும்பினி ரண்டுஞ் சுகமவை நிகழ்விட யானந்த
நீடுறு சொரூபா னந்தம் எனவே நின்றிடு மவைதம்முட்
பொறியா னுகர்விட யானந் தந்துயர் போதா னந்தமதே
புகலரு மழியா நிரதிச யம்மிது பொருளென அருள்தந்தோய்
வெறியார் பாதச ரோருக மென்தலை மீதுற அருள்புரிவாய்
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே.5

ஆகா ராதிய நாலும் மிளிரும் அங்கியி னுறுகூறு [ணி
மவையுட் பயமொன் றகலச சொலுமவை யாமின் பெனவெண்
ஏகா துறுபய மொன்றுந் துன்பென் றெணியிச் சுகதன்பத்
திடையேபடிவே னுனையேநினையேனென் றுன்னருள் பெறவே
மேகா திகளுறு பிறவிக் கடலில் மூழ்கா துன்னருளா [ன்
மூரிக் கப்பலி டத்தே வைத்தெனை முத்திக் கரையுய்க்கும்
மீகா மனைநிக ராகிய வொருவா மிகுபூ ரணசொருபா
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே 6

தேகம் பூதச் சடமா மதிலே திகழ்கர ணம்பொறியாற்
சிறுவிட யத்தா னுண்டே சுழலுந் தீமையி றய்ப்பதுவசம்
போகம் புவனம் புறமா மிதிலே பொலிவுறு நீயாரே
புந்தியி லாதிவை யானென தென்று புலம்பித் திரிகின்றாய்
ஏகம தாய்மிகு சுகமா யெங்கு மிருந்திடு பூரணமாய் [ளி
இலகு முனைத்தொடர் பிறவியி லுய்த்திட ரெய்தா யென்றரு
வேகம னப்பரி நிறுவிச் சொருபம் விளக்கிடும் ஆரியனே
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே.7

அகிலச ராசர மெனவையுந டத்துனை யைந்தொழி லாலிவையுள்
ளானசி ருட்டிய ளித்தல ழித்தலு மாகம திற்சாரும்
புகலும றப்புந் தெளிவுற் றலுமே பொலியுயி ரிடைசாரும்
போத மகற்றுதி ரோத மெனக்குப் போக்கிற் குறைபடுமோ

பகருமறிவா னந்தச் சுடரே பரகதி யெனையுய்க்கும்
பண்பார் துணையே யென்பா லமுதே பாகே மாகடலே
மிகுநெறி தவமார் தெய்வக் *கங்கம்விளங்கியிருந்தொழும்
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே. 8

தனதா னியமிட மாடா டாதி தயங்குபொ ருட்சார்பும்
தருதாய் தந்தைகள் மின்னா ராதி சாருமு யிர்ச்சார்பும்
இனமார் சார்புக ளிவைமே லாசை யிகந்தா மையினைந்து
எழில்பெற வுட்கொண் டசையா தென்றுமி ருந்தச மாதியிலே
மனமார் வாதனை யறவே யென்றும தித்தசு முத்தியனாய்
மன்னிரு ளற்றுனை யென்றனை நிற்பேன் மாதவ மாகடலே
மினலார் மேகந் தங்கப் பொழில்வாய் வெண்தா மரைத்துளிகால்
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே. 9

வீடென் றறைதரு சொற்குப் பொருளோ விடுதலை யாதலினால்
வீக்குண் டோனுங் கட்டும் முன்னர் விளங்குந் திடமாகப்
பீடுறு கட்டுத் தானாய் விட்டுப் பெயரா திதுசடமாம்
பிணிபட் டோனசு தந்தர னுமிப் பிணிபெய ரசசெய்வோன்
நீடுசு தந்தர மூளனு மொருவ னேருமிவ் வேதுவினால்
நிகழ்பதி பசுபா சம்மெனு முப்பொருள் நித்திய மென்றருளி
வேடனை வெல்லுங்குருவாயெனையாள்மெய்ப்பொருள்நீயன்றோ
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே.

---

* கங்கம் - கழுகுகள்.

உ

சிவமயம்

### விருத்தாசலம்

# குமாரதேவர் நெஞ்சுவிடு தூது

••••••••••••••••••••••

### காப்பு

தஞ்சமென்றோர்க் கின்பந் தருகுமர தேவன்மேல்
நெஞ்சுவிடு தூது நிகழ்த்தவே - விஞ்சும்
பழமலைவாழ் ஆழத்துப் பாழிமத வேழக்
கழலிணைவா ரீசமே காப்பு.

பூவாய்த்த கற்பகப்பூம் பொங்கடரித் திற்சிறந்தோன்
தூவாய்த்த செங்கமலத் துள்ளிருந்தோன்-மாவாய்த்த

மார்பகத்தோ னுகமுற்றோர் வஞ்சகக்கூற் றைக்கடந்த
சீர்மிகுத்த காயத் திறல்முனிவோர் – ஏர்மிகுத்த

மாணிக்கப் பைவிரித்து வாழுரகர் பாருறைவோர்
ஆணிப்பொன் போன்றமறை ஆகமங்கள் - பேணி

உருவே அருவே ஒளியே வெளியே
தெருளே யருளே சிவமே - பொருளே யென்

றேத்துஞ் சுகசொருப மின்னருளே யோர்வடிவாய்
நாத்துதிசெய் பேரு நயந்தருளித் - தீர்த்தனென

வந்தபிரா னுயேன் மலதிமிரம் போக்குதற்கென்
சிந்தைகுடி கொண்ட செழுஞ்சோதி - வந்தணைசெய்

அன்பர்க் கெளியான் அதிகரே யாயிடினும்
வன்பர்க் கரிதாய மாணிக்க - மன்புக்க

மந்தரமே மத்தாக வாசுகியே நாணுகச்
சந்திரன்தூ ணுக்கடலே தாழியா - வந்தார்தம்

வன்பிற் கடைய வருமமுதம் போன்றெழா
தன்பிற் பெருகியெழும் ஆரமுதந் - துன்பத்

திரையாழி வீழ்ந்தவரைத் தீதறியா முத்திக்
கரைமேல் விடுக்குமொரு கப்பல் - விரவிவரு

மாகமே யாதி யநேகபிர பஞ்சமெலாம்
ஏகமாய்க் காட்டு மெழிற்சித்தன் - மாகசுரர்

ஏமாக்க எம்மனோ ரியாரும் இறுமாக்கக்
கோமாக் கருணைமழை கூர்மேகம் - பாமரருங்

கண்ட பொழுதே கசிந்துகசிந் துள்ளுருகித்
தொண்டுசெய மேவுஞ் சுவைக்கரும்பு - பண்டு

பிரமன் அகந்தை பிறங்கா தடங்கப்
பரம வொளியாய்ப் படர்ந்து - சிரமனந்த

கோடி படைத்துக் குலவுலகெ லாந்தானாய்
மூடிநிலை பெற்ற முதுகிரியான் - நீடிக்

குறிஞ்சியுள் நின்று குறவர் குடில்சாடி
யறிந்துவிழ மால்யானை மாய்த்துச் - செறிந்த

அகிலுங் கழைமணியும் அந்திரையா லுந்திச்
சிகிநிறச்செம் பாலைவெப்பந் தீர்த்துப் - பகரரிய

முல்லை புகுந்து முடைகெழுமு மாய்ச்சியர்தம்
பல்லையொத்த முல்லை பறித்தெறிந்தங் - கொல்லை

தயிர்ச்சாடி மத்துடனே தாங்கி மருதத்
தியற்பள்ள ரார்ப்ப எழுந்து - வயற்புடைகள்

ஏரி குளங்களெலா நிறைத்து நெய்தல்நிலஞ்
சார எழுந்து தரும்பரவர் - நேரும்

வலைமலையெ லாந்துணித்து வன்படவு தள்ளிக்
குலவுகட லோடுறவு கொண்டு - நிலவலையம்

ஆழமொடு நீளம் அளத்தற் கரிதாகி
ஏழ்கடல் வெள்ள மெனச்சிறந்து - மூழ்குமுடல்

தம்மை யழுக்கறவே தான்துடைத்த லன்றியுயிர்
வெம்மை யழுக்கு மிகத்துடைத்துச் - செம்மைதரு

வீட்டின்ப வெள்ளத்து மேன்மைபெற வேமூழ்க
நாட்டு மணிமுத்தா நதியுடையான் - மீட்டரிய

மெத்துகட மாதி வெறும்பொய்க் கதிட்டானச்
சத்தெனுமோர் மேன்மைத் தகுநாடன் - மொய்த்து

வரும்பே ருருவமாய் மன்னுபொரு ளெல்லாம்
ஒருங்கே சுகமான வூரான் - விரும்பியமெய்ப்

பத்திப் பழவடியார் பைந்தமிழ்ச்சொல் மாமலரால்
வத்திக்கக் கட்டுபா மாலையான் - முத்திபெற

ஓரறிவு காணுமிடத் தொன்றென்றுஞ் சுட்டாது
சீரறிவாய் நின்றமனச் செம்பரியா - னேர்மருவு

பக்குவநான் கானபெரும் பாதங்கள் சோதிதர
மிக்கமறை யாகமமாம் வெண்மணிகொண் - டுக்காத

இச்சைஞா னங்கிரியை யென்னுமுத்தா னம்பொழிந்தன்
கச்சமறத் துறத்தல் ஆசையறல் - துச்சமறு

கோடாக ஏந்திக் குளிர்கருணை மெய்யுணர்வாம்
வீடாத கண்கள் மிகவிழித்துச் - சேடார்

இரண்டற்ற அத்துவித மென்னுங்கை நீட்டித்
தெருண்ட தவம்பத்திச் செவிகொண் - டிருண்டபெருந்

தத்துவசா லங்களெனச் சாற்றுங் கவளமுண்ட
சுத்தமெனுஞ் சீர்வாய் துலங்கவே - பொய்த்த

கருமவீக் கூட்டங் கடியாது வீசுந்
தருமமா நல்வா றயங்க - ஒருமையிலா

ஆறு சமயக் குருடர் அறியாத
வீறுபரி பூரணமா மேனியுடன் - கூறுமலம்

போக முனிந்துயிரின் போதமழித் துத்தோன்றும்
ஆகமிக ளேத்துமறி வானையான் - தாகமுடன்

வந்து தனையடைந்தோர் வன்பவநோய் தீர்ப்பதற்கே
அந்தமறக் கட்டும் அருட்கொடியான் - சந்ததமுஞ்

சேம நிதிபோல் திகழ்மறைநான் கிற்சிறந்த
சாம மறையாந் தகுமுரசோன் - காமர்செறி

கஞ்சனும் வேளுங் கடுங்கூற்றுந் தன்னடியார்க்
கஞ்ச நடாத்துதிரு வாணையான் - விஞ்சியபேர்

இன்பம் உளந்ததும்ப எல்லோருங் கொண்டாடும்
நன்குமர தேவனெனும் நாமத்தான் - மன்பயிலுஞ்

சாதனநான் கானபெருஞ் சம்பத்தைக் கைப்பிடித்து
மாதன மாதர் மனைதுறந்து - தீதறுசீர்

உள்ளிருந்த ஞானம் புறனுமுதித் தாங்கு
வெள்ளைநிற நீறணிந்து மேனியெலாங் - கள்ளமுறு

காமனை வென்றதிருக் கண்ணிற் பிறந்ததனல்
யாமவனை வெல்வதற்கீ தாமென்று - தோமறுசீர்

அக்கமணி மாலை யதுதரித்தும் அவ்வுறுப்பின்
மிக்க பணியா மிகப்பூண்டு - தொக்கபகை

கொல்வார்மஞ் சள்தோய்த்துக் கூறைகொளு மாறவித்தை
வெல்வான் கருதும் விருதாக - நல்லசெக்கர்க்

காவிதோய் துண்டங் கருதுமுழம் நான்குகட்டி
மேவுகரு விப்படையை வெல்வதற்குத் - தாவிலாக்

கச்சைகட்டி ஞற்போற் கனவுதரப் பந்தனமேல்
எச்சமறக் கட்டி இடர்ப்பிறவி - அச்சம்

பிரிந்ததெனக் காட்டுமொரு பெற்றிபோல் தோன்றும்
விரிந்தசடை பின்தாழ விட்டுத் - திருந்தும்

உயிரங்க மீதில் உயர்பரம லிங்கஞ்
செயலறவே தோன்றுந் திறம்போற் - பயனுர்

மருமத்தி லிங்க மகிமையுடன் தாங்கிக்
கருமத் துரிசு கழன்றே - ஒருமித்த

நெஞ்சுடனே வீடுதொறும் நீடுபிச்சை யேதெனினும்
வஞ்சமற வேகரத்தில் வாங்கியுண்டு - விஞ்சுங்

குருபர நாமக் குமாரதே வன்பால்
திருவடிபெற் றஞ்ஞானந் தீர்ந்தே - உருநாமம்

உள்ளவெலாஞ் சற்சிற் சுகமா வொருங்குணர்ந்து
தெள்ளியபே ரின்பவெள்ளந் தேக்கியே - விள்ளலிலா

தெல்லாஞ் சிவமாய்க்கண் டேயுற்றுமாதவரும்
மல்லார் திருவுடனே வாழ்ந்தாலும் - நல்ல

இடையன்பாற் கும்பம் இருஞ்சென்னி தாங்கித்
தொடரும்மறிக் குட்டியுடன் தோற்பை-புடையெடுத்துக்
கம்பளந் தண்டாதி கைக்கொளினும் அச்சென்னிக்
கும்பமிசை நெஞ்சுவைத்த கொள்கைபோல்-எம்பிரான்
தாளிலே நெஞ்சுவைத்துத் தாங்குடும்பி போல்நடிக்கும்
மீள்கிலா அன்புடைய வித்தகரும் - மாளாத்
தகைமை யுடையோராய்த் தக்க பணிசெய்தே
அகமும் முகமும் மலர்வாருஞ் - சுகசொரூபம்
ஒன்றென்றே சொன்னால் உலகமே தென்றிடவே
நின்ற பழுதையிடை நீளரவம் - மன்ற
உதிக்குமா றப்பொருளில் உண்டாமென் றோத
விதித்த பழுதை விளங்கின் - மதித்தபாம்
பேகும் அதுபோல் எழில்சிவங்கண் டும்வுலகம்
ஏகாது தோன்றல் எனையென்ன - மோகமறக்
கானலில்நீ ரில்லையெனக் கண்டுநீர் தோன்றுதல்போல்
ஈனமில்பொய் யாத்தோன்றும் என்றிசைப்ப - ஆன
பழுதையினிற் பாம்பும் பகர்கானல் நீரும்
எழுமோர் தகையாய் இவைதாங் - குழுமியே
நானாவாய் ஓர்பொருளில் நண்ணுவதேன் என்றிசைப்ப
ஆனாத பொன்மண்ணில் ஆபரண - நானா
கடமாதி தோன்றும்ஒரு காரணம்போல் தோன்றுந்
திடமாநீ காணென்று செப்பத் - திடவான்
ஒருவன் தொழிலால் உளவாம் அவைதாம்
மருவுமிவை யாவரால் வந்த - துரையெனவே
விண்ணினிடைப்பீலி வெயிற்குஞ்சந் தோன்றுவபோல்
நண்ணு மெனவே நயந்துரைப்ப - எண்ணும்அவை
பற்பல வானாலும் பகருருவொன் றாமிவைதாங்
துப்புடைநா னாவுருவாய்த் தோற்றுவதென்-செப்புகெனக்
காந்தருவ மாநகர்போற் காணெனவே அந்நகர்தான்
போந்தவிவ காரமின்றாப் பொய்யாகும் ஏய்ந்த

70 இவற்றுள் விவகாரம் ஏய்வதெவ னென்னக்
கவற்றுங் கனவுவிவ காரம் - நவிற்றுதல்போல்

ஆமென் றுரைப்ப அதுநினைவின் வாதனையாந்
தோமுறுபொய் வாதனைதான் தூய்தாய - சேமப்

பொருட்கே தெனவந்தப் பூரணத்தில் தோன்றுந்
தருக்கா நினைவாகுந் தானென் - றுரைப்ப

அதற்கு நினைவெழுமோ யாதென்று கேட்பக்
கதித்த கனலீலை கண்டாய் - இதைப்பொய்யென்

றுன்னுது கேட்டி யுளஞ்சற் றசைந்தக்கால்
முன்னும பரமுயிர்கள் மொய்த்தெழுந்த - மன்னு

75 உலகமிவை தோன்று முளமிறந்தா லிந்தக்
கலகமெலாம் பொய்யாய்க் கனதை - இலகியதோர்

மெய்யொன்றே யாகு மிளிரு முளத்துருவம்
நையா வுருவமொடு நாமமாம் - பொய்யுளந்தான்

உன்னினைவு தீதென்றே யூகத்தான் நோக்குமிடத்
தந்நினைவு நாமவுரு வாகுங்காண் - அந்நினைவு

கோடி கணத்திற் குதித்தெழலால் இவ்வுலகு
நாடற் கருவுருவ நாமமாய்ப் - பீடுபெறத்

தோற்று நினைவைத் துணித்தாற்சற் சிற்சுகமே
மாற்றற கரிதாய் வயங்கலுறுஞ் - சாற்றுமிதால்

80 உள்ளமே யிவ்வுலகாம் இவ்வுலகே யுள்ளமாம்
உள்ளமலா தேயுலக மொன்றில்லை - உள்ளே

மதுரந் தருஞ்சாத்தன் வன்கோயில் முன்னே
சதுரங்க மாபலமாத் தங்குங் குதிரைகரி

தேரா ளெனும்பெயருஞ் செப்பியபேர் கொள்ளுருவும்
நேராது பொய்யென்று நீக்கியே - தேருமிடத்

துற்றிடுமுக் காலத்து முள்ளமண்ணே மற்றெல்லாம்
வெற்றவெறும் பொய்யாய் விடுமிவைபோற் - சொற்ற

பெயருருவ மானவெல்லாம் பேணது நீக்கிற்
செயிரறுசித் தொன்றே திகழும் - இயல்பாங்

கடலில் திரைநுரை காண்திவலை மொக்குள்
இடமுற் றெழினு மிதுபொய் - திடமுறுமெய்

யாவ தெதுஎன் றறியுமிடத் தப்பொருளின்
மேவு திரைநுரை வெண்திவலை - தாவியெழு

மொக்குளெனும் பேரு மொழிபேர் கொளுமுருவும்
ஒக்கவெறும் பொய்யா முருசியுடன் - தக்க

நெகிழ்ச்சி குளிர்ச்சிமய நீரொன்றே மெய்யாம்
பகுக்கு மவைப்போலப் பாரில் - தொகைக்கரிதாய்க்

காணுமுரு நாமங் காணது பொய்யாகும்
மாணுறுசற் சிற்சுகமே வாய்மையாம் - மாண

விருப்பதுசத் துச்சத்தா லெண்ணுருவ நாமம்
இருப்பதுபோல் தோன்றும்வே றில்லை-உரைப்பரிதாய்த்

தோன்றுதல்சித் துச்சித்தால் தோன்றும் உருநாமந்
தான்தனித்துத் தோன்றுவது தானில்லை - ஆன்றசுகந்

தானே யுளதிதனல் தங்கும் உருநாமம்
ஆனச் சுகம்போல் அணுகியிடும் - நான்ஓத

வேறேது மில்லை விரிதிரை யாதிகள்தாங்
கூறுசல மொன்றே குறிக்குங்கால் - தேறிற்

பொருளொன்றே யாகும் புனிதமுறு நெஞ்சால்
தெருளொன்றிக் காணென்று செப்ப-அருளொன்று

நெஞ்சுடையா யென்று நிகழ்த்திவழுத் திப்பணிந்து
தஞ்சமெனப் பொருந்திச் சார்வாரும் - எஞ்சவிலா

தெம்மருங்குஞ் சூழ்ந்துவர இன்னியங்கள் ஐவகையின்
சும்மைக் கடலின் தொனிகாட்ட - மெய்ம்மைதரும்

ஏரார் பரிபுரண இன்போர் வடிவாகிப்
பேரோத வந்த பிரான்வந்தான் - சூரான்

மிடியா இருள்போக்கு மேதகையான் வந்தான்
வடிவால் உவமையிலான் வந்தான் - அடியார்

பவத்துயரை மாற்றப் பரிந்துவந்தான் வந்தான்
தவத்தலைவர் சற்குரவன் வந்தான் - உவக்கும்

முதுகிரியான் வந்தான் முகிலனையான் வந்தான்
வதிதலுறு பேரின்பன் வந்தான் - அதிக

கவிராசர் போற்றுங் கனைகழலான் வந்தான்
தவிராத தண்ணளியான் வந்தான் - அவியாத

ஞான கிரணமுறு நற்சூரி யன்வந்தான்
ஈனமொன்று மில்லா இறைவந்தான்-தேனனைய

நற்குமர தேவனெனு ஞானபரன் வந்தானென்
றெற்பெருகு சின்ன மெடுத்தியம்பச் - சொற்பிரமன்

முன்னோர் அனமாய் முடிகாணோன் ஈண்டிரண்
டன்னமாய்க் காணகுவலென் றூக்கெழில்போற்-பொன்னார்

கவரி புடையிரட்டக் கண்டோர்க் கிவனைத்
தவறில்லை யில்லையென்று சாற்றும் - உவமையால்

ஆலவட்டம் வீச அடியார்கள் அங்கநோய்
சாலவொட்டா தோட்டுந் தகைமையாய் - ஏலும்

எனது களங்கமுந்தீ ரென்றிந்து வந்து
தனது பணிசெய்யுந் தகைபோல் - இனமருவு

முத்துக் குடைநிழற்ற முத்திபெற வேண்டுமென்றோர்
இத்திசைவா ரீர்வாரீ ரென்றென்று - மொய்த்துக்

கரத்தால் அழைப்பதுபோற் கானார் கொடிகள்
உரைத்தார்போல் எவ்விடத்தும் ஓங்க - உரைப்பரிய

மெய்யர்கர மாமே மென்மலர்க ளாம்பெரிய
துய்யமழை யெங்குஞ் சொரியவே - செய்ய

மறைமுடிவு காட்டும் மணியே யெமது
குறைதவிர வந்தபெருங் கோவே - நிறையும்

மதியே செழும்பாகே வானமுதே கீரோ
ததியே உலகுயிர்க்கோர் தாயே - கதியேயெந்

தாதையே செந்தருவே தண்ணளியே நாயடியேன்
தீதையே போக்குமிருந் தெய்வமே - ஓதுட்

டிமிர திவாகரனே செய்ய முதுகுன்றிற்
குமரதே வேயென்று கூறித் - தமிழ்தெரிந்த

வந்திகர்பல் லாண்டிசைப்ப மாமகர தோரணமுஞ்
செந்திருவு மோங்குந் திருமறுகில் - அந்தணளி

மோனந் தயங்கி மொழிபொருளெல் லாந்தானும்
ஆனந்த போதகமீ தாங்கேறித் - தானந்

தவங்கள் சிறப்பத் தருகுமர தேவன்
உவந்து பவனிவர வுற்றே - நவஞ்சேரும்

அவ்வீதி யுள்ளோ ரனைவோரும் வந்துவந்து
செவ்வி பெறவே செறிந்தெங்குந் - தவ்வாத

இம்மேனி கொண்டதிவன் எம்மனோர் உள்ளிருந்த
பொய்ம்மை அறவென்றே புகல்வாரும் - எம்மானே

ஓர்வடிவு கொண்டதிது வுண்மையாம் எங்ஙனெனில்
ஏர்வடிவாற் காணலாம் என்பாருந் - தேர்வரிய

பூரணமா நோக்குவிழிப் புண்டரிகன் என்பாரும்
ஏரிணங்கு பேரின்பன் என்பாருஞ் - சீரிணங்கு

கற்றோர்க் கினிய கரும்புகாண் என்பாரும்
உற்றான் எமக்கிவனென் றோர்வாரும் - முற்றா

இளமையான் என்பாரும் எம்போல்வார்க் குற்ற
வளமையான் என்பாரு மாகிப் - புளகம்உடல்

கொள்ளப் பணிந்தவர்கள் கொண்டாடும் வேலைதனில்
நள்ளத் தமியேனும் நண்ணியே - விள்ளாது

மின்திரண்டு மொய்த்ததொரு மென்மைபோ லேமிளிருந்
தென்திரண்டு பின்தாழ்ந்த செஞ்சடையும் - நன்றிதரு

மூன்று பிறைநிரையா மொய்த்ததெனப் புண்டரஞ்சேர்
ஆன்றதிரு நெற்றி யழகினையுந் - தோன்றுந்

துளக்க மிலாமதிபோற் சோதி முகமும்
வளக்கமல நோக்கிணையின் வாகுங் - கிளக்குமறை

அஞ்ச முதித்தங் கழகுதரு நாசியையும்
விஞ்சோர் மொழிமலர்வாய் மென்னகையுந் - தஞ்சமுறு

மந்தரம் ஓரிரண்டின் மாமுடிமேல் ஓரிரண்டு
சுந்தர பானு துலங்குவபோற் - சந்தமுறுங்

காதிணையிற் பூண்ட கனகசெப்புக் குண்டலங்கள்
தீதறவே காட்டுமிரு திண்புயமும் - ஓதவிடம்

போக்கி மிளிரும் புனிதத் திருமிடறும்
நோக்கிணைக்கின் பென்ற நுவல்மார்பும் - நீக்கரிதா

ஐயந் திரிவகற்றி யச்சமற நிச்சயஞ்சொல்
செய்யமுறை கொண்ட திருக்கரமும் - மையலுறு

சீவ பரமிரண்டுந் தேருமிடத் தேகமென்று
மேவியசின் முத்திரைகொள் மென்கரமுந் - தாவிலாச்

செக்கர்வா னம்பவளச் செம்மலையைச் சூழ்ந்ததுபோல்
தக்ககா வித்துகில்சேர் தண்ணிடையுந்-தொக்கஅதின்

மேலொருமின் சூழ்ந்து விளங்குதல்போ லத்திகழும்
மேலுதர பந்தனத்தின் இன்னழகுஞ் - சாலவே

பற்று விடாத பழஅடியார்க் கின்பவெள்ளம்
வற்று தளிக்கும் மலர்ப்பதமும் - முற்றவரு

மாணிக்க மால்வரைமேல் வண்தூசுபோர்த்ததுபோற்
காணத் திருநீற்றுக் காப்பணிந்த - ஆணிப்பொன்

மேனியையும் அம்மேனி மீதிலே யக்கமணிந்
தானியிலா லிங்கம் அமைத்ததையும் - நானேதிக்

கண்ணிணைக்கோ ரின்னமுதாக் கண்டு பணிந்தேத்தி
உண்ணினைவு தோன்று துறுபோதில் - எண்ணவொணு

மெய்யரெலாம் நிற்ப வினையேனைத் தானோக்கி
ஐயனருள் மாலளித்தான் அன்றுமுதல் - துய்ய

அவன்தருமின் பம்பெறவே யாசைமிகக்கொண்டேன்
உவந்தஅன்பால் தூதுவிட வுன்போல் - நிவந்த

கடல்சூ ழுலகனைத்துங் காண்கிலேன் நெஞ்சே
இடர்போக்குந் தூதாநீ யின்று - திடமாகச்

செல்லவே வேண்டுஞ் சிறியே னுயிர்த்துணையே
நல்ல எனக்குதவு நாயகமே - புல்லறிவால்

நாயேன் பிறந்திறந்த நாளெல்லாம் என்னுடனே
நீயே பிரியாது நின்றதனல் - நீயேயென்

தாதையுந் தாயுந் தமரும் பெருநட்புஞ்
சூதையே செய்வார் துணைவரோ - நீதயவாய்

என்பா லொருமித்திங் கேகாந்த மாயிருந்தால்
உன்போலும் என்போலும் ஒப்பாரார் - உன்பெருமை

ஆகமமும் ஆரணமு மான பலகலையும்
யோகிகளுந் தாமே வுரைக்குங்காண் - மோகக்

கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டென்
றுரைத்த தரனுமைக்கென் றுன்னி - விரித்துப்

புகழ்ந்த தலவே புகலரிய நெஞ்சே
மிகுந்த பிறப்புவீ டென்னுந் - தகுந்தொகைக்கு

காரணமும் நீயே கருதும் உலகமெலாம்
ஏரிணங்கு நின்னையல்லா தில்லைகாண் - பாரிணங்கும்

நீசற் றசைந்தால் நிகழும் உலகாகும்
நீசற்றுந் தோன்றாது நின்றக்கால் - மாசற்ற

மெய்ச்சிவமே யாகு மிளிருமிதா லுன்பெருமை
அச்சிவந் தானே யறியுங்காண் - மெச்சும்

உறவால் உயர்வால் உனைப்போ லெனக்குப்
பெறயா வுளவிதனாற் பேணி - அறவாழி

யான்குமர தேவன்பா லன்புடனே தூதுசெல்ல
நான்கருதி யுன்பால் நவிற்றினேன் - யான்புகலும்

அவ்விறைவ னென்றும் அமருமிடஞ் சொல்லக்கேள்
மௌவல் மணக்கும் மலர்ச்சோலை - செவ்விதரு

முத்தா நதிசூழ் முதுகிரியாம் ஆங்குநீ
வித்தார மாய்ச்செல்லும் வேலைதனிற் - கத்துஞ்

சமயரெனும் பொய்வேடர் தம்மை மிகநாடி
அமரும் உறவாமென் றணுகேல் - கமைவில்

அரிவையர்தா மென்றியம்பு மாமரவை நாடேல்
கருது விடயமெனுங் கானின் - மருவு

நெறிதப்பிப் போயதனுள் நின்று மயங்கேல்
பொறிமத்த மாவொடுபோ ராடேல் - செறிவுற்ற

காமமெனும் பங்கத்திற் காலிடேல் கோபமெனுந்
தூம்அழல் மிதித்துத் துள்ளியிடேல் – நாமவுரு

முன்பின் புடைபெயர்ந்து முன்னிநோக் காதேகி
அன்பெலாம் ஒருருவே யானவரும் - இன்பமய

மாகி யிருப்போரும் அரியதவச் செல்வர்களும்
ஏக மெனுந்துணிவை யெய்தினரும் - மோகமறு

வீரசைவ நாயகரும் வேத முனிவரரும்
ஓரா கமசைவ வுத்தமரும் - பாரோரும்

நாற்றிசையுஞ் சூழஅவர் நாப்பண் உடுச்சூழ
மேற்றிகழும் இந்து விளங்குதல்போற் - போற்றுங்

குமாரதே வென்னும் இருங் கோமான் இருப்பன்
நமாவென் றவன்சபையை நாடி - எமாலன்பு

தன்னடிக்கீழ் வைக்கத் தருகருணை செய்தானைப்
பொன்னடியென் சென்னி பொறித்தானை - மன்னு

பவள மலைஉபய பாரிசத்துஞ் செம்மை
திவளருவி தூங்குந் திறம்போல் - நவமார்

கழுநீர்த் தொடையல் கலந்த புயத்தானை
வழுநீத்த பாமாலை மன்னைத் - தொழுவார்க்கு

வேண்டிய வேண்டிய எல்லா மிகஅளிக்கும்
ஈண்டிய தெய்வ இருந்தருவை - மாண்டறியா

ஆனந்த செல்வம் அளிக்குஞ்சிந் தாமணியை
வானந் துதிக்கவரு மாதவத்தைத் - தீனனேன்

ஏதுபிழை செய்தாலும் ஏழையே னுக்கிரங்கித
தீதனிவன் என்னாத தெய்வத்தை - ஓதும்

பழமலையான் பாகம் பதியா இளமை
அழகுடனே வாழும்உமை தன்னை - வழுவாது

தந்தசச்சி தானந்த சாகரத்தி னூடாடுஞ்
செந்திருவா முங்குமர தேசிகனைச் - சிந்தைநீ

பொன்னே மரகதமே பூரணமே ஆரணமே
அன்னே முதுகிரியார் ஆரமுதே - மன்னேயென்

றேத்திப் பணிந்தங் கெழுந்து கரஞ்சிரமேற்
சேர்த்துப்பின் கைகட்டிச் சென்றுநின்று - தீர்த்தனே

உன்பவனி கண்டங் குனதுகடைக் கண்ணோக்கம்
அன்புடனே பெற்ற அரிவைதான் - இன்பம்

பெறுவ தலாலவித்தைப் பேரிருளில் வாடி
உறுவளோ யாவு முதிக்கச் - செறியும்

பகுதியெனும் பவ்வத்துப் பாடொலியி னாலே
மிகுதி வருந்துவளோ மேனி - அகமென்று

மூலஅகங் காரமெனும் மூரிமத வேளினார்
சால மயங்கத் தகுவளோ - கோலியே

கத்துசம யக்குயிலின் காரொலியால் ஆனந்த
நித்திரைபண் ணுது நிகழ்வளோ - சுத்தமுறுஞ்

சாத்தீக மாயையெனுஞ் சந்திரனல் வெம்புவளோ
காத்தாள்வாய் மற்றிவளைக் காணென்றே - யாத்தன்

திருவடியில் விண்ணப்பஞ் செய்து வணங்கி
இருமைதரும் இவ்வுலக மெல்லாம் - ஒருமைபெறு

பேரின்ப மாகியென்றும் பேரா திருந்தஇந்தச்
சீரின்ப நாயேன் செறிந்தோங்கத் - தாரன்பாய்

இன்றிவளுக் கீதல் எழில்வள்ளால் என்றியம்பி
நன்றெனவே சம்மதிப்ப நன்குரைத்து - மன்றலுறு

சற்குமர தேவன் தருங்குவளை மாலைநெஞ்சே
இற்பெறவே வாங்கிவா இன்று.

---

எவ்வுயிர்க்குந் தாயாய் இருந்தின் பமுதளிக்குஞ்
செவ்விதரு சற்குமர தேவன்பால் - அவ்வியந்தீர்
நெஞ்சமே செங்குவளை நீண்மாலை வாங்கிவரச்
செஞ்சவே தூதாகிச் செல்

சிவன்திரு வுருவாம் ஐந்து சின்மய எழுத்தும் வாழி
நவந்தரு நீறும் வாழி நயனநன் மணியும் வாழி
கவின்தரு குமார தேவன் கழலிணை யிரண்டும் வாழி
அவன்திரு வடியார் தம்மோ டாருயி ரனைத்தும் வாழி.

---

உ

சிவமயம்

விருத்தாசலம்

# குமாரதேவர் பதிகம்

••••••••••••••••••••••••

பதினான்குசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

கங்கையும் அரவுந் திங்களுஞ் சடையுங்
கண்ணமர் பாலமுங் கமமுங்
கடுக்கையொண் தொடையுங் கரியுரி யுடையுங்
காரிகை வாழிடப் புறமும்
பங்கயக் கண்ணன் விழியமர் பதமும்
பரிவுடன் கரந்தரு ளுருவாய்ப்
பாரினி லடியார் பவக்கடல் துடைத்துப்
பனிப்பறு பிரமசா கரத்தின்
மங்கிடா தழுந்தித் தங்கவைத் தாள
வந்தனை எளியனென் பவமும்
மாயுமென் றேத வழக்கதுண் டெனக்கு
மாய்த்திடல் உன்கட னமால்
கொங்கவிழ் குழற்கூட் டகிற்புகை வேள்விப்
புகையொடுங் குழுமுறும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 1

செங்கையின் நீறு பெற்றுளோர் வெய்ய
தீவினை யற்றுளோர் நின்தாள்
திகழ்புன லுண்டோர் அன்னையர் கொங்கைத்
தீயபால் மீட்டுணர் நின்னை
அங்கையால் தொழுதோர் சிரத்தினிற் பணிந்தோர்
அவனிபொன் னுலகினைப் புரக்கும்
அரசராய் வாழ்ந்து வீட்டினை யடைவா
ராமெனில் நின்பெரு மையினை

இங்குநான் மறையுஞ் சேடன் ஆயிரவாய்
இரட்டைநா வும்புகழ் வரிதாம்
என்னவே துணிந்தும் எளியனேன் புகழ்வான்
எண்ணிடை நகைப்பதா மன்றே
கொங்கைகள் ததும்ப மங்கையர் சிலம்பு
குமுறவே நடித்திடும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்கும்
குமாரதே வென்னுமா முனியே. 2

அஞ்சலென் றுன்கை அடியனேன் முடியில்
அருளொடும் வைத்துமா மலர்மேல்
அயனியா னுதிக்க அனுதினந் தீட்டு
மாணியை நாணுற முறித்தோய்
வெஞ்சினத் தறுகட் செங்கணேற் றெருமை
மேல்வருங் காலனு ரென்னை
வீக்குவன் பாசக் கயிற்றினை யறுத்தோய்
வினையனேன் தனக்கினி தமைத்த
எஞ்சலில் இருபத் தெட்டுயர் கோடி
யெனுநர கக்குழி யனைத்தும்
இடருடன் அகலத் திடரது செய்தோய்
ஏழையேன் இயற்றுகைம் மாறென்
குஞ்சரக் கோடுந் தரளமும் அகிலுங்
கொணருமுத் தாறுசூழ் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 3

ஆம்பல்செந் தேறற் கொப்பளித் திடுத
லனையநின் வாய்மொழி வலிய
ஐம்புல மென்னுங் கரியினை யடக்கும்
அங்குச மோமன மென்னும்

மேம்படு புரவி கொட்புற லடக்கும்
வெவ்விய கலினமோ கொடிய
வினைதரு கருமேந் தியமெனும் வீர
விறலினர் தஞ்சிலு கடக்குந்
தூம்புடை எயிற்றுக் கட்செவிக் கயிறோ
துறந்திடு முடலெனுந் தேரின்
தொடக்கினை யறுக்கும் அரங்கொலோ அமுதோ
சுவைக்கரும் போகனி ரசமோ
கூம்பலின் றலர்ந்த நீலமுஞ் சேலுங்
குலவிய பண்ணைசூழ் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 4

அந்திவெண் பிறையை யனையவொண் ணுதலார்
அகிற்கமழ் முகிற்குழல் தனக்கே
ஆலமும் அமுதும் அமர்ந்தகட் கயற்கே
ஆம்பலை யனையவாய் மொழிக்கே
கந்தடு களிற்றின் கோட்டினைக் கோங்கைக்
கமலநாண் முகையினைப் பழித்துக்
கனகமந் தரத்தைக் கடுக்கும்வண் ணகிற்கே
காதலாய் அறநெறி யறுத்திங்
கிந்தமா நிலத்திற் பிறப்பெனும் ஒரேழ்
இருங்கட லிடைவிழுந் திளைத்த
என்னைநின் கருணைக் கலத்திடை யிவர்வித்
தினியவீ டுறஅருள் புரிவாய்
கொந்தவிழ் மலர்ப்பூம் பொங்கரும் எயிலுங்
கோதறச் சூழ்தரு விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 5

அருக்கனே அகத்தில் ஆணவ இருளுக்
கன்றிய மாயையாம் வெய்யில்
அகற்றிட எண்ணெண் கலைகளான் நிறைந்தே
அருளமு தந்தனைப் பொழிந்து
திருக்கிள ரடியார் கண்மலர்க் குவளை
திறந்துநீர்த் தேன்பொழிந் திடவே
சிவப்பிர காசங் காட்டிமீ தெழுந்த
திங்களோ காமிய மென்னுஞ்
சருக்கமில் கடற்கு வடவையோ பாவத்
துகளெனுங் காட்டினுக் கனலோ
துன்னிய காமக் கனற்குமா முகிலோ
சுடருநின் பதத்தியல் புணரேன்
குருக்கிளர் மணிகள் குயிற்றுபொன் மாட
கூடங்க ளொளிர்தரும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 6

விரைவுறும் அந்தக் கரணமோ டுழன்றும்
வீண்படு விடயமே விழைந்து
மிருத்திடு காமக் குரோதமே முதலா
மேதையில் குணங்களான் மெலிந்துந்
தரையினில் துக்க சுகமவை யடுக்குந்
தன்மையா லனுதினந் தளர்ந்துந்
தக்கவே டணைகள் மூன்றினல் தவித்துஞ்
சால்வே மயங்குமென் றன்னைக்
கரையறு முத்தி யிலவண நீரைக்
கார்முகந் ததைக்கச டறத்தீங்
கலவவே செய்யு மாறுபோல் நீயென்
கசடறுத் தாண்டருள் புரிவாய்

குரைகட லெழுந்த இனன் இவர் தேரைக்
குளிர்பொழில் தடுத்திடும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 7

அரிய ஆணவமாம் அண்டம்வின் டடியேன்
அவனியில் வெளிப்படப் பெரிதும்
அரியதோர் கமடம் அழகிய வன்மீன்
அஞ்சிறைப் புள்ளிவை போலக்
கருதுநெஞ் சதனை லுன்னியே கடைக்கட்
கருணையால் நோக்கியே பரிசங்
களிப்புடன் செய்தே யளிப்பது கொடியேன்
கணித்தினி தெங்ஙனம் அறிவேன்
எருமையின் குலங்கள் சரோருக மலரை
இக்கினைச் செந்நெலைக் கறிக்க
இருகடை வாயாற் சொரியும்வெண் தரளம்
இளநிலா எறித்தலிற் குமுதங்
குருமதி யெனவே நனைமுறுக் கவிழ்ந்து
கொங்குயிர் பண்ணைசூழ் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 8

இரவுநண் பகலு மிலாதமத் தியத்தில்
இருந்திடுந் துருவனைப் போல
இரண்டுதட் டகத்தும் நிறைபொருட் சமனாய்
இருந்தநல் தராசுமுள் போலப்
புரையுறு சகல கேவல மதனிற்
பொருந்திடா தினியசுத் தத்திற்
பொருந்தியே அகந்தை தவிர்ந்துநான் வாழப்
பொருந்தவைத் தாண்டருள் புரிவாய்

இரவியின் இரதம் இழுக்குமேழ் பரியின்
எழிற்குரந் தாக்கவே தெங்கின்
இருங்கனி தகர்ந்தங் கிழிந்திடும் இளநீர்
இலஞ்சியிற் பண்ணையில் ததும்பிக்
குரைபுனல் முத்த நதியினிற் பெருகுங்
குறைவிலாச் சீர்திகழ் விருத்தக்
குன்றினி லயர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 9

கன்றினுக் கிரங்கிச் சுரபிவந் தின்பால்
கதறியே யினிதளித் திடுமக்
கன்றினுற் சுரபிக் கணுவள வேனுங்
கைம்மாறி லாதது போல
ஒன்றுநன் கறியா ஏழையிங் கிவனென்
றுன்னிரு தாட்சரோ ருகமென்
உச்சிமேல் வைத்துத் தலையளி செய்தாய்
உனக்குநான் செய்வதொன் றிலதால்
துன்னிய செந்நெல் கன்னல்பூங் கதலி
தோமறு பூகம்ஒண் தெங்கு
துருமமும் நெருங்கி வரிசையின் இருத்தல்
சுரரிழந் தேநதி மூழ்கிக்
கொன்றைமா லிகையான் பதந்தொழு தேகும்
படியெனக் குலவிடும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. 10

உ

சிவமயம்

# பஞ்சதிகார விளக்கம்

◆◆◆◆◆◆◆◆◆◆◆

## பாயிரம்

## கடவுள் வணக்கம்

### காப்பு

### விநாயகர்

முகமதியுங் கட்கடுவுங் களவளையும்
உத்தரிய முகப டாத்துப்
புகர்மதமா மழகளிறுங் கரமலர்க்கற்
பகதருவும் பொருவில் பாதத்
திகழுறுபங் கயநிதியுந் தோன்றுபரைப்
பாற்கடலிற் சிறந்து தோன்றும்
உகலரும்ஐங் கரஅமுதை உளங்குளிரப்
பூரித்தே உவகை பூப்பாம்.

### நடேசர்

பெருங்கருணைக் கடல்ததும்பித் திருவுருவந் தரித்துப்
பேசருமா சான்மறைந்த வாருயிரை யெடுத்தே
இரும்புகழ்சேர் விஞ்ஞான கலராதி மூவர்
எனத்தொகுத்துத் தநுவாதி யிந்துமும்மா யையினில்
வருஞ்சகலர்க் கிருவினையொப் பாக்கிமல பாகம்
வருவித்துத் திருவடிக்கீழ் வைப்பான்மன் றதனுள்
அருங்கருணை ஐந்தொழிற்கூத் தாடுமிறை யடிகள்
அககமலத் தொளிவளரக் கருதியிருத் திடுவாம். 1

## சிவகாமியம்மை

மலர்விரையுங் கதிரொளியும் உயிருடலும் மணியின்
வளர்தேசு முருநிழலு மலிபொருளோ டுரையும்
நிலவுதல்போல் நிட்களத்தைப் பிரியாது மருவி
நிகழ்சகளத் தப்பதிக்கு நிறைமனையாய் மன்னி
உலகுயிர்மைந் தர்கள்பிறவிப் பசிகெடஎந் நாளும்
ஓவாதா நந்தவமு தூட்டியவ்வீட் டிருத்தும்
திலகநுதற் சிவகாம சுந்தரியார் பாதச்
செங்கமலந் தலைமீதில் திகழுறவைத் திடுவாம். 2

## விநாயகர்

கவுட்குழிமா மதகுதிறந் தருள்மதநீர்ப் பாய்ச்சிக்
கருதுறுமெய் யடியருளப் புலத்தஞ்சக் கரமாம்
நவப்பெருவித் திட்டதனின் எழும்அன்பாம் முளையை
நசைவிடயக் கிளிகள்நறுக் காதவகை காத்திங்
கவக்களைக்கட் டருள்ஞானப் பயிரேற்றி யென்றும்
யானெனும்ஆ ணவவேழம் அணுகாது துரத்தி
உவப்புறுமெய்ச் சிவபோகம் விளைவிக்குங் களிற்றை
உளமவுனக் கூடத்திற் பிறிவறவைத் திடுவாம். 3

## சுப்பிரமணியர்

கனைகடலின் முடிமீதிற் சுடர்விடுஞா யிறுபோற்
கடிநீலக் கலபமயிற் றுரகமிசைத் தோன்றி
வனசரர்தந் தருள்மானுங் கடவுளர்கோன் உதவும்
மாதவயா னையும்இருபால் மன்னுறஎந் நாளும்
நினையடியார் பவநோயிற் சாராமற் காத்து
நிறைசுகபூ ரணவாரி குறைவறவே யுதவும்
புனைமலர்நீ பத்தொடையான் நூபுரமாம் முளரிப்
பொன்னடியெஞ் சென்னியிலும் புந்தியிலும் வைப்பாம்.4

## குருவணக்கம்

ஐந்தொழிலி னுலகற்றி அநுக்கிரக மொன்றும்
அருளுடனே கொண்டுபர திருஞான வடிவாய்
வந்தருளித் தீவகத்தாற் பறவையகப் படுத்து
மாறதுபோல் நாயேனை வழியடிமை கொண்டு
சிந்தைதனிற் சிவஞானப் பேரொளியைக் காட்டித்
திரிமலவல் லிருள்துரந்து சிற்சுகத்தே வைக்கும்
நந்துலவு நதிபுடைசூழ் முதுகிரிவாழ் குமர
நாயகனைத் தூயவுளத் தேமிகவைத் திடுவாம். 5

## அவையடக்கம்

கருவிகளோ ராறுறுஞ் சடமாகுஞ் சீவன்
கருதுறுதற் செயலாயொன் றறியாதிங் கிவற்றை
மருவியந்தச் சடசித்தோ ரிரண்டிற்குந் தொழிலும்
மன்னறிவுந் தன்னருளால் வருவிப்பன் இறைவன்
புரையறவா கையினுலவ் விறையருள்கொண் டடியேன்
புகல்குவன்பஞ் சதிகார விளக்கமென்றிந் நூலைப்
பரவுரவோர் கொள்ளுவரெள் ளாரிதுவும் இறைவன்
பணியெனவே யெச்செயலும் பரன்செயலென் றுனலால்.

## நூல்

திருவளரும் ஒருவனொரு தொழில்புரியின் அதுதான்
திகழ்தருதன் பயனயலார் பயனுடனப் பயனைக்
கருதிவரு மவையுளதன் பயன்மும்மைத் தாகுங்
கழறுமிடத் திடரகலல் சுகமுறுதல் புகழை
மருவுதலாய் வருமயலார் பயனருளைக் கருதி
வந்திடுமப் பயன்விளையாட் டாகிவரும் இவையுள்
நிருமலனைந் தொழில்புரிதல் தன்பயனோ பிறர்கள்
நேர்பயனோ அவப்பயனோ நினையுமிடத் தெனிலே.

மலரகித னுகையினல் ஆநந்த மயனுய்
மன்னுறலால் ஒப்பார்மிக் கிலியாய்மன் னுறலால்
நிலவுமிட ரகலுதலுஞ் சுகப்பேறும் புகழும்
நேர்தரவேண் டாமையினே தன்பயனன் ருகும்
இலகருள்பே ரறிவுடைய னுதலினல் விளையாட்
டெண்ணியொரு தொழில்புரியா னுதலினப் பயனன்
றுலகுயிர்மேல் வைத்திடுபே ரருளாலிங் கிறைவன்
உறுதொழில்செய் குவனிதைநீ பிறர்பயனென் றுணரே.

ஆருயிர்கட் கிறைதொழிலால் என்பயனிங் கென்னில்
அவ்வுயிர்கட் கீரறிவுண் டதுவிடய அறிவும்
சோர்வறுநற் சொரூபஅறி வெனவுமவை தம்மைத்
துகளிருகூ ருய்மூடுஞ் சொல்லரிதாய் நின்றே
ஏர்விடய வாரகநற் சொரூபாவா ரகமென்
றிவ்விருளால் அவ்வுயிர்கள் எண்ணவருந் தமையும்
தேர்வருமவ் விறைவனையுஞ் சிறிதேனும் அறியாச்
செய்திதனக் குரைதருமோர் திட்டாந்தங் கேளே.

உறுமருளன் விடத்தான்மூர்ச் சித்தயர்வுற் றிடவங்
கொருவன்மருந் தாலருள்கொண் டம்மூர்ச்சை நீக்கிச்
செறிமருளுக் கவுடதமுங் கொடுத்திதையுந் தீர்த்துத்
திகழ்சுகமுற் றிடவைக்குந் திறமதுவே போல
அறையிருளிற் செறிவுயிர்கட் குடன்முதலா மாயை
அதனிடைதந் திருள்விடயா வாரகமுன் நீக்கி
மறைகுருவால் அனுபவத்தாற் சொரூபாவா ரகமும்
மாற்றியின்பந் தருமிறைவன் மாதொழிலால் அறியே.

உயிர்களுமோர் படித்தனைமூ டாணவமோர் தன்மைத்
துறுமிறையே கன்பக்க பாதமிலி யானுல்
செயிரறுவிஞ் ஞானகலர்க் குடலாதி தந்த [னின்
செய்தியின்மற் றிருவர்க்குஞ் செய்தாலென் னென்

இயல்பொடுகண் களுமவைமூ டும்படலந் தானும்
இருந்திடஅப் பிணிகுணகுற் றங்களைநன் கறிவோன்
தயவொடுநன் மணிமருந்தூ சியினல்நீக் கிடுமால்
சாற்றியமூ வகையாக்கித் தணிக்குமலம் இறையே. 11

ஐந்தொழிலா வனஎவையென் றிடிலவைதாஞ் சிருட்டி
யானதிதி சங்காரந் திரோபாவத் துடனே
வந்திலகும் அநுக்கிரக மென்றுமச் சிருட்டி
மாயையினில் தனுகரண புவனமுடன் போகம்
தந்திடலாந் தனுஎண்பத் தொருநான்கொ டுற்ற
தகுநூறு யிரபேதஞ் சாற்றியவக் கரணம்
நந்துமுயிர்க் கரணம்வித்தி யாகரணம் உடனே
நற்சிவமா கரணமென நண்ணுறுமீங் கிவையுள். 12

சீவனிடைக் கரணம்விட யாதிகளைத் தேருந்
திறமதுவாம் வித்தியா கரணமுறை செப்பில்
ஓவறுபோ கந்துய்ப்பத் திரிகால மாயும்
உறுபோகம் வினைகட்கீ டுறவரைவ தாயும்
தாவிலுயிர்க் குக்கிரியை அறிவிச்சை யெழுப்புஞ்
சார்பாயும் விடயத்தில் தங்குகறங் கொப்ப
மேவிஇயக் குதலாயும் விடயந்தா னென்ன
வேறறமால் தரலாயும் விளங்குறுமால் என்னே. 13

மன்னியநற் சிவகரணம் வித்தியா கரணத்தை
மருவிநடத் தும்புவன மிருநூற் றிருபானுன்
குன்னுறுபோ கஞ்சிவிகை கவிகைபரி கரிதேர்
உயர்கலையா திகள்கந்தஞ் சடுரசமாந் தொகுதி
துன்னுறுபல் லுருவங்கள் வனிதாதி பரிசந்
தோற்றிடுகீ தாதிகளா மற்றிவையுள் தனுவைப்
பன்னலுறு கரணத்தை யானெனவொன் புவனம்
பகர்போக மெனதெனவா ருயிர்கருத வைத்தே. 14

சுகதுன்பந் துய்ப்பித்தல் திதியாகும் உயிர்க்குத்
தோற்றியஎல் லாம்ஒடுக்கல் சொல்லுறுசங் காரம்
மிகுசிருட்டி திதிசங்கா ரத்துமூன் றும் இடரை
வெறுக்காது ருசிப்பித்தல் விளம்புதிரோ பாவம்
பகர்பொருளைப் பகுத்தறிவித் திடுதல்அநுக் கிரகம்
பரம்பரன்ஐந் தொழிலாலே யுறுசடசித் தெவைக்கும்
அகல்தொழிலும் அறிவும்உதித் திடுமிதனல் அன்றே
அகிலமுமிவ் கவன்அசையில் அணுவசையும் எனுமால். 15

அவ்விறைவன் இவ்வகைஐந் தொழில்புரிவ தானல்
அவனையெவ்வா றறிவதெனில் அநுமானத் தாலே
செவ்விதின்முன் அறிவித்தங் கவனடியைச்சேருந்
திகழுறுநல் விரகுமினிச் செப்புதுநீ கேட்டி
தவ்வலருஞ் சந்திரசூரியர்உடுவிண் மேகஞ்
சாகரமா மலைதீகால் சரஅசர பேதம்
ஒவ்வலுரு துறுபஞ்ச பூதமுமற் றுளவும்
உயிராலுண் டாக்குதல்கூ டாதமுறை யானும். 16

சந்திரசூ ரியர்உடுவந் தரமதிலெந் நாளுந்
தத்தம்முறை வழுவாது கொட்புறுத லானும்
கந்தரம்வா ரியின்மொண்டே பொழிதருத லானுங்
கடல்தன்எல் லையைமீறிக் கடவாமை யானும்
செந்தழல்மா ருதமீறிச் செறியாமை யானும்
திகழ்காலம் பலவிதமாய்ச் சேர்ந்துறுத லானும்
மந்திரத்தாற் பாம்பாதி வசமாகை யானும்
மன்னுயிர்பா ரம்பரைமா ரூதுறைத லானும். 17

செந்நீரில் வெண்ணீர்போய்ச் சேர்ந்தொருபால் திங்கள்
சிந்துதிரஞ் சிந்தாமற் பந்தமுறத் தங்கி
அந்நீர்கண் மண்ணதனற் சித்திரிகன் பதுமை
ஆக்குதல்போல் ஒருவரும்பண் ணுதாக்கை யாகித்

தந்நீர்மை குறையாமல் தாயுதரத் திருந்து
தகுகடப்பூ சனிப்பிஞ்சு தான்பருத்து வெளியில்
மன்னீர்மை குன்ருமற் கடமும்உடை யாமல்
வருவதுபோல் யோனிவழி குழவிவர லானும். 18

ஆணைமுதல் யாவைகளும் ஆண்பெணவை கூடில்
அவ்வுருவ வேடம்போட் டாங்குவர லானும்
ஊனமிலாண் பெண்கூடா துயிர்தோன்ற லானும்
உறும்விதைவர்க் கப்படிதா வரம்எழுத லானும்
தீனமில்இந் தியபங்கர் அங்கமதிற் பங்கர்
திகழுருவி லார்நோயர் இவைகளிலா வடிவர்
ஆனமிடி யினர்செல்வர் அறிஞரறி வில்லார்
அதிபாவ புண்ணியர்க ளாகியுற லானும். 19

ஒன்பதுவா யுடன்ஒருவாய் விட்டுடலில் உறைய
உயிர்கட்குக் கூடாமை யினுமொரங்க நீங்கின்
தன்சுயமாய் வருவிக்கக் கூடாமை யானுந்
தனுக்கள்தொறும் ஓர்காற்றுத் தங்கியுற லானும்
அன்புடன் ஆண் பிளேவேண்டிற் பெண்ணுறுத லானும்
அழகியபெண் வேண்டுமிடத் தாணுறுத லானும்
தென்பயிலாண் பெண்வேண்டிற் சிகண்டியுற லானுஞ்
சிந்தையிலெண் ணியவாறே சேராமை யானும். 20

மகவினிவேண் டாமெனவும் மகவருத லானும்
மகவுக்காய்ப் பாலருத்த மரித்துறுத லானும்
மிகைசெய்தான் றனையொருவன் வெட்டுமிடத் தொருவன்
விடுவித்தாள் கையினனும் விளம்புறுமற் றெருருவன்
பகைவர்தமக் கஞ்சியொளித் துறவுமவர் கையிற்
படலானுந் தாவரங்கள் பரிந்துதமைக் காக்குந்
தகையறிவி லாதிருந்துந் தங்கியுற லானுஞ்
சாற்றியமுற் பிற்பிறவி தாம்அறியா மையினும். 21

இம்முறையே அளவிறந்த பேதமதாய்ச் சடமும்
இலங்குயிருஞ் சுதந்தரமின் றாய்நிகழ்த லானும்
கம்மியனற் குயவன்கைக் கோளன்றே காரங்
கடபடமுண் டாக்கிடுமோர் காரணமே போலச்
செம்மைதரு மருள்கோடா திறையுயிர்கள் செய்த
தீவினைநல் வினைக்கீடாய்ச் செறிதனுவா திகள்தந்
தம்முறையே அளித்தழிப்பன் அருள்தருவான் அதனல்
அக்கடவுள் உளனெனநீ மிக்கதிடத் தறியே. 22

நன்றேநீர் உரைத்தனசம் மதித்தேன்நான் முகவ
னாதியர்கா சிபன்விசுவா மித்திரனா தியர்கள்
ஒன்றேடொன் றெவ்வாத சமயகட வுளர்கள்
உறுதொழில்செய் குவரென்ப தென்னையது கேள்நீ
குன்றாவோர் குடையிற்கு வலயமுழு தாள்வோன்
குரைகழல்சே விதரவன்றன் தொழில்புரிவா ரெனினும்
தென்றாரவ் வரசனதா ணையைவிடவே நிகழாச்
செய்தியின்மெய் யிறையருளாற் செய்வரவர் தொழிலே.

இந்தவுல காளிறைவன் றனையறியா தமைச்சர்
எண்ணுறுமற் றயலோரோர் தொழில்புரிவா ரதுபோல்
அந்தஇறை தனையறியா தயன்முதலா மவர்கள்
ஐந்தொழில்கள் சிற்சிலசெய் யாரோஇங் கென்னின்
நந்துறுபல் லுயிர்கள்தமை மலத்தினைவிட் டெடுத்த
நாள்தொடங்கி வீட்டிருந்து நாள்காறும் அவைசெய்
பந்தவினை யறிந்தருத்து மஃதல்லா லந்தப்
பண்ணவர்மா முனிவர்க்கும் பண்ணுவன்ஐந் தொழிலே.

நனியுயர்ந்தோர் யாவர்க்கு மியாவைக்கு மேலோர்
நாயகனுண் டென்றறிவித் திடநீகைக் கொண்டாய்
இனியவன்றன் சீரடிசேர் விரகுமுரைத் திடுதும்
இதைமாறு திதயத்திற் பரிவாகக் கொள்வாய்

முனமுரைசெய் ஐந்தொழில்போற் சூக்குமகா ரணத்தும்
உண்டதனைத் தெளிவதவன் திருவடியைச் சேரும்
தனிவிரகிங் கதுவெதெனிற் சாற்றியஐந் தொழில்கள்
சடசித்தோ ரிரண்டினிடை தாம்பகுப்பாய் நிகழும். 25

சடமதனிற் சிருட்டிதிதி சங்காரம் நிகழுந்
தகுமுயிரில் திரோபாவம் அநுக்கிரகந் தங்கும்
திடமுறுமத் திதியிரண்டாஞ் சுகதுன்பம் அருத்துஞ்
செய்தியினம் முறையாற்செய் தொழிலாரு மவையுள்
படிதருநற் சிருட்டியினிற் சுகம்அருத்துந் திதியிற்
பகரும்அநுக் கிரகத்திற் பன்னலுறும் உயிர்க்குக்
கடிதலில்இன் பாந்துன்பத் திதிசங்கா ரத்திற்
கழறுதிரோ பாவத்திற காணுறுதுன் பாமே. 26

சகலமதே சிருட்டியதாங் கேவலஞ்சங் காரந்
தகுசுத்தந் திதியாகுஞ் சாக்கிரஞ்சொப் பனத்தோ
டிகல்சுழுத்தி துரியந்துரி யாதீதம் இவற்றுள்
இயம்புமுதற் சாக்கிரமே சிருட்டியது வாகும்
புகல்கனவு திதியாகுஞ் சுழுத்திமுதல் மூன்றும்
போக்கிடுசங் காரமதாம் பொருநனவிற் கனவிற்
பகர்சுகதுன் புண்டாகுஞ் சுழுத்திமுதல் மூன்றிற்
படிறிடராம் இவைபாண்டிற் சகடெனவே வருமால். 27

நனவினில்ஐம் புலனுகரும் பொழுதைந்திந் தியத்து
நவின்றிடும்ஐந் தொழில்களும்வர் முறைமவையிக் குரைப்பின்
முனமுறையோ ரிந்தியத்தைப் பொருந்தியதே சிருட்டி
முதிர்விடயம் அருந்துவதே திதியாகும் விடயம்
தனையறியுந் தனைவேறுச் சாற்றவொண்ணு தழுந்தல்
சங்காரம் இதைருசிப்பித் திடுதல்திரோ பாவம்
இனிதினிதன் றெனவுணர்தல் அநுக்கிரக மாகும்
இம்முறையுட் கரணத்தும் இயங்குறும்ஐந் தொழிலே.

ஒருபொருளை நினைந்தெழுதல் சிருட்டியது தனையங்
குனிமகிழ்தல் திதியதனை மறந்திடல்சங் காரம்
மருவிய தின் மயங்குதலே திரோபாவம் பின்னர்
மற்றதனைத் தெளிந்தறிதல் அநுக்கிரக மாகும்
கருவிகளொவ் வொன்றிலுயிர் கலந்துறுபோ தெல்லாங்
காரணன்ஐந் தொழிலுளமுன் கழறுமுறை காணின்
விரவுகரு வியின்மூன்றும் உயிரினிடத் திரண்டு [போல்.
மேவுறும்ஐந் தொழில்களுமுன்மெய்க்குயிர்க்கோ திய

நாலிருபத் தொருநான்கை நண்ணிலக்க விதமா
நவிலுடலில் தொழில்இறைவன் புரிவதுதூ லமதாம்
தூலவுடல் அவத்தைகளிற் கருவிகளொவ் வொன்றில்
தொழில்புரிதல் சூக்குமமாம் நீக்கமற நின்றே
ஏலுறுமிவ் வுடலுயிரோர் கருவியினிற் பிறந்தும்
இருந்தும்இறந் துங்கணத்திற் சுழலுமிவ்வா றளவில்
காலமவற் றுற்றிடரே கண்டதலால் அந்தக்
கடவுளடி சேர்சுத்தங் கண்டதிலவ் வுயிரே. 30

இறைவனடி சேர்சுத்தம் எங்ஙனென்னின் அதுதான்
இயம்புறுகா ரணபஞ்ச கிருத்தியத்தால் அறியும்
முறைமையதாம் இஃதுமினி மொழிகுதுநாம் முன்னர்
மொழிந்தனகேட் டறிவதுபோல் அறிவதுவன் றிதனை
நெறிகொள்சமா தியினிலிருந் தறிவதுவாம் அறிந்தால்
நேர்படுநற் சுத்தமிது நிகழ்ந்துறவே விளங்கின்
அறிதரலாந் திருவடியும் ஆநந்தப் பேறும்
அதனால்முன் னுறுதுயர்க ளியாவுமகன் றிடுமே. 31

அறைந்தசமா தியினிலிருந் தறிவதெவ்வா றென்னின்
அறுவகையாம் பயனின்முயற் சிகளைவிடுத் ததன்மேல்
செறிந்திடுபோ கங்களின்மேற் பற்றுகளோர் சற்றும்
சேராமற் கைவிட்டோ ரேகாந்தங் கைக்கொண்

டுறைந்தவிடத் தினிலொன்றைச் சாராமற் செவ்வே
உடல்வளையா மற்றேகக் கொன்றுசுகா தனமுற்
றிறந்திடுகால் அங்கிகழ்கா லம்எதிர்கா லத்தில்
எய்துபயன் கருதாதே காக்கிரசித் தமதாய். 32

பிருதிவிதத் துவமுதலாம் நாதமதீ ருகப்
பேசியநா லொன்பானு ளோரொருமா கருவிக்
குருவமுடன் தரிசனசுத் தியமிவையென் றுன்னி
ஒவ்வொன்று நியதிகளைந் துயர்நாதம் ஏறிக்
கருவிகளை யென்னுலே கண்டதனுற் சடமாங்
கண்டிவற்றைக் கழன்றவனுன் காட்டியது கடவுள்
திருவருளென் றறிந்தருளைச் செறிந்திடுதி யிதனுட்
சிவன்ஐந்து தொழில்நடக்குஞ் செய்தியது கேளே.

கருவிகள்ஒவ் வொன்ருகத் தோன்றுதலே சிருட்டி
கண்டதனில் நின்றுதரி சித்தல்திதி யதனை
ஒருவுதலே சங்காரம் அருள்மீதிற் பேரன்
புற்றெழுதல் சொல்திரோ பாவமதே யாகும்
திருவருளே கண்ணுகக் காண்பதநுக் கிரகந்
திருவருளிற் பிறிவறநீ தினமுமிருந் திடுபோ
தொருநினைவங் குற்றெழுதல் சகலமறைப் பாகி
உறுவதுகே வலமாமிங் கிருவகையும் ஒருவ. 34

ஒருறுதி சொல்லுதுநீ கேட்டிநினை வெழுந்தால்
உறுநினைவின் வயமாவை யுற்யபினர்த் தெளிந்து
சீரருளின் சிற்பையிதில் நின்ருலந் நினைவுன்
செங்கைவய மாமிவணஞ் செறிந்திடுமப் போது
சேருநினை வெழுந்ததனின் வயமாகு மதனைத்
திரோபாவ மென்றறிதி திருவருளைச் சென்று
சார்தல்அநுக் கிரகமெனத் தெளிதியருள் தன்னைத்
தான்வேண்டிற் சின்னுளிற் சகலமறுந் தானே. 35

சகலம்அறில் கேவலந்தான் வந்துவந்து தாக்குந்
தகைமைத்தாம் எங்ஙனெனில் தண்மதியை மேகம்
இகலொடுவந் தடிக்கடிமூ டுதல்போல இதுமுன்
இருஞ்சகலத் தொடுகலந்து வருந்தகைமைத் தாகும்
புகரில்சமா தியினிலுடல் கற்றூணைப் போலப்
பொற்பின்வளை யாதுற்றுப் பித்திகையிற் சாயா
திகலறுபே ரருளாலே கண்டதனைத் தடுக்க
இசைந்திடுகே வலமும் அறும் இருவகையும் அறவே.

மாயையுங்கன் மமும்அந்தச் சகலத்தோ டொழியும்
வழுத்தியகே வலத்துடன்ஆ ணவமாயு மிவைதாம்
ஆயஅசுத் தம்மிவைக ளகன்றதுவே சுத்தம்
அதனையுரைத் திடின்மலைவாய்க் கதிர்வீழ்கா லம்போல்
தூயஅரு ணோதயம்போல் தோன்றுமிதைப் பெரியோர்
துன்னும்இராப் பகலற்ற விடமென்றும் மறப்பும்
மேயநினைப் பும்மில்லா இடமென்றும் இறப்பும்
மிகுபிறப்பும் இல்லாத இடமென்றும் புகல்வார். 37

சுத்தத்தைப் பெற்றதனில் உன்போதஞ் சிறிதுந்
தோன்ருமல் நின்றிடவே தோன்றும்பே ரருள்தான்
எத்திக்கும் பலகோடி சூரியரோ ருழியின்
எய்தியவா றையம்அறும் பேரொளிய தாகித்
தித்திக்கும் அமுதகடல் உலகமெலாம் பரந்த
செய்தியினே சடசித்துக் குட்புறனுய் நிறைவாய்
வர்த்திக்கும் நிர்வயமாய் நிட்களமாய் நிமல
வடிவாகிக் கேடில்லா வான்பொருளாய் எங்கும். 38

இப்படிதோன் றியஅருளில் உன்போதந் தோன்றும்
எங்ஙனெனின் முனர்மாயா போதத்தைக் கொண்ட
செப்பரிய பிரவஞ்சம் அறிவதுபோ லிந்தத்
திருவருட்போ தத்தாலே யவ்வருளைச் சிவத்தைத்

தப்பரிய நின்போத மெதிரிட்டுக் காணுந்
 தற்பரனையப்போதந் தணந்தணைய வேண்டும்
அப்பொருளைப் பகுத்ததனில் நிற்குநிலைக் குவமை
 அலர்விழிதே சைக்கதிரைப் பிறிபடநோக் குதலே.

உன்போத மறவிரகுண் டுரைசெய்துங் கேள்நீ
 உறுவிழிதே சைக்கதிரைப் புடைபெயர்ந்து நோக்கா
தன்போடக் கதிரெதிரங் கசைவறநின் றிடவே
 அதுஇதுஎன் றிரண்டறவே தோன்றுமது போல
நின்போத அருள்சிவனா னென்றுபகுக் காது
 நிகழ்சிவநேர் நின்றிடவொன் றிரண்டாகா அயிக்கம்
இன்போடெய் துறுமிதனைக் கண்டுகொள்நீ கண்டே
 இதனிலெழும் பேரின்பம் ஏழ்கடலிற் பெரிதே. 40

முன்னருறுங் கருவிதுகள் பசுவினறி வெனவே
 மொழிந்தவையுள் ஒன்றேனுங் கண்டிலன்ஈ தென்னை
துன்னுமிருள் உடுமதியின் சுடரிவைகள் கதிர்முன்
 தோன்றுவா சிவத்தின்முனர்த் தோன்றுஎன் றறிவாய்
உன்னலருஞ் சுகமதனில் உதித்ததெவ்வா றென்னின்
 உறுபெண்ஆண் கூறுமிடத் தற்றெழும்இன் பேபோல்
மன்னுயிரா கியபெண்ணுஞ் சிவமென்னும் ஆணும்
 மணந்திடும்போ தெழுந்திடும்பே ரானந்த வாரி. 41

திருவடிசேர் விரகென்முன் னுரைதந்தீ ரந்தத்
 திருவடியிங் கேதென்னில் திரோதம்அரு ளென்னும்
இருவகையும் இறைபாதம் இவைகீழ்மேல் நோக்கி
 இருந்திடுங்கீழ் நோக்கியதா ளெய்துறுமா ருயிர்க்கு
வருவினையொப் பாக்கிமல பரிபாக மாக்கும்
 மற்றதுபே ரானந்த வாரிதரு மிவைகள்
பொருவிலுயிர்ச் சிரசின்மிசைப் பிறிவறவே தங்கும்
 பொற்சபையின் நின்றநிலை திட்டமது காணே. 42

இவ்வடியைச் சேர்ந்தவிடத் தைந்தொழிலே தென்னின்
இயை தருமா யையிலுதித் தாங் கருளிலுதித் ததுவே
செவ்வியநற் சிருட்டியதாஞ் சுகப்பேறே திதியாஞ்
சீவனிருட் போதம்அறல் சங்கார மாகும்
அவ்வியமாம் பிரவஞ்சந் தோன்ருத அதுவே
யானதிரோ பாவமதா மாயவொரு நான்கும்
தவ்வலற விளங்குதலிங் கநுக்கிரக மாகுந்
தணப்பில்சுகா தீதத்திற் கிளக்கவொண்ணு துறுமே.

அளவறுநாட் பிறவியிடர்க் கடலலையிற் கிடந்த
அடியேனைத் தூக்கியும தருள்நடனங் காட்டி
உளமகிழ்வுற் றறியாத யாவைகளும் உணர்த்தி
உயர்மவுன னந்தத்தண் கடல்வைத்தீர் அடிகள்
களவினனீ துக்கோர்கைம் மாறறியேன் உமது
கமலபதம் எந்நாளும் அருளுடனே வாழி
வளனுறுநும் அருளடியார் நடைபுகல வேண்டும்
வாரீசத் திருவாயான் மதுரநறை போல 44

புங்கமுறு மெய்ஞ்ஞானப் புதல்வா கேள் அடியார்
புன்னெறியே தும்மறியார் நல்நெறியைத் தானே
எங்குமுறுஞ் சிவமொன்றே கண்டிடுவர் காணுர்
எண்ணரிய பலவிதமாய் நண்ணுறுமா யைகளைத்
தங்கியபல் லுயிர்கட்குந் தண்ணளியே புரிவார்
தாய்போற்சேய் போல்நாளைக் கென்றுன்னுர் சற்றும்
மங்கியுமுற் பவமுற்றும் வருமவர்போற் பிறரை
வருபகைவர் உறவரென வாடார்மகி ழாரே. 45

ஆணவமே யாருயிர்கட் குட்பகையென் றறிவார்
அளவறுநா ளுறமூடித் துயருறவைத் ததனல்
தானுளமைக் கேளாது தண்ணளியா லெடுத்துத்
தனுவாதி தந்ததனைப் பரிபாக மாக்கி

மாணுறும்இன் பந்தரலான் அக்கடவுள் தானே
மன்னுறவா மென்றறிவார் அன்னவனைத் தொழுவார்
காணுயிர் தற் சுதந்தரமாய்ச் சுகதுன்பந் தருமோர்
காரணம்இன் மையின் அதனைப் பொதுவாகக் காண்பார்.

ஊழ்வினையா லேபிறருக் குயர்நன்மை செயினும்
ஒருவர்தமக் குத்தீமை யுறுநன்மை செயினும்
தாழ்வறுபே ரருளாளன் தன்செயலா நினைவார்
தம்பாலோர் தீமையுறில் தம்மைவெறுத் திடுவார்
காமுறுநெஞ் சினர்பிறருக் கொருநன்மை செயினும்
கருதயலார் தீதுதமக் குச்செயினுங் காண்பர்
ஏழ்கடலிற் சுகதுன்ப மியாம்பிறரென் றுன்னி
இவைமாறிச் செய்யுமிடத் தீசன்மேல் வைப்பார். 47

முளையாதி சராசரமோர் முன்னிலையா லெழினும்
மொழிந்தவையோர் முன்னிலையாற் காக்கப்பட் டுறினும்
வளைகடல்சூழ் உலகினில்லோர் உயிர்க்கோர்முன் னிலையான்
மலிநாசம் வந்துறினும் நூல்பிறரான் மனத்தால்
உளைவுறுமா மயக்குறினும் அவைகளினல் தெளிதல்
உற்றிடினும் முன்னிலையைச் சற்றெனினும் உன்னார்
தளையவிழும் பூங்கொன்றைச் சங்கரனார் புரியுந்
தன்னளிஐந் தொழிலென்றே யெண்ணிவியந் திடுவார்.

பருத்தியசத் தின்மயிர்மண் பாடாணு திகள்தாம்
பரன்சிருட்டி யவனருளாற் பகர்சீவ சிருட்டி
விரித்தபடங் கம்பளமட் கடஞ்சிகரி கோயில்
விளம்புமிவை யாதிகளா மிவைபோல வுலகம்
அருத்தியுடன் விளங்குறினுஞ் சீவர்கள்போல் மயங்கார்
அருள்வினையாட் டாநினைவ ராதலிற்புற் புதமாய்
உருக்கொளினுஞ் சிருட்டிதிதி சங்கார முளஎன்
றுன்னிடுவார் துன்னிடுவார் உயர்சுகவா ரியதாய்.49

காமமுறின் மோகமும்லோ பமும்தோன் றும் அந்தக்
காமமறில் இரண்டுமறுங் காமமறு தலையில்
ஏமமிகுங் கோபமுறு மிதனின்மத வயிரம்
எழுமதறி லிவையறுமென் றிச்சைசினஞ் சாரார்
யாமறிவிங் கிவ்வறிவி லெழுமின்பும் எமதென்
றெண்ணிடுவார் மண்ணவனி யாமெமதென் றெண்ணார்
சேமநிதி இறைவனவன் இறைவியவ ளதுதான்
சிற்சுகமென் றெண்ணிடுவார் நற்சுகபூ ரணரே. 50

நெய்யிழுதா கியவாறே நிகழ்சுகபூ ரணமாய்
நிறைந்தவடி வோர்வடிவா யெழுந்தருளி நாயேன்
பொய்யறநுந் திருநடனந் தூலமுதன் மூன்றுப்
புகன்றடியேன் றனையின்பப் புணரியிலே வைத்தீர்
செய்யநும தருளடியார் நடையுமுரைத் திட்டீர்
சிறியேன்மேல் வைத்திடுபே ரருள்நாளும் வாழி
ஐயமற என்முடிமேல் வைத்ததிருச் செந்தாள்
அருள்வாழி யடியர்குழாம் வாழிசகம் வாழி. 51

உ

சிவமயம்

சிதம்பரதேசிகன் திருவடி வாழ்க

# அரும்பதவுரையும் குறிப்பும்

## திருப்போரூர்ச் சந்நிதி முறை

[திருக்கோவலூராதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அருளிச் செய்த அரும்பத வுரையும் குறிப்பும், திருவளர் செல்வி - ஆதிலக்ஷ்மியம்மையார் அவர்களால் எழுதி உதவப்பெற்றது.]

வேம்படி விநாயகர் துதி:—மறை-வேதம். கலை-சாத்திரம். அக்கரம் - அகரம் முதலிய எழுத்துக்கள். ஐங்கலை - நிவிர்த்தி முதலிய ஐந்து கலைகள். மந்திரம்-ஈசானம் முதலிய பதினொரு மந்திரங்கள். ஆன - உயர்ந்ததான. வாக்கு - சூக்குமை முதலிய நால்வகை வாக்கு. மண்டி - நெருங்கி. குண்டலி - சுத்தமாயை. ஐஞ்சத்தி-பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி. பணடை மாமல திமிரம் - பழமையான வலிமிக்க ஆணவ இருள். விண்டுபோக - நீங்க. விண்டுவே - விஷ்ணுவே. நிம்ப நீழற் குலவு - வேம்படியில் விளங்கும்.

1. காப்புப் பருவம்:—1. பூ - தாமரை. பொறிச்சிறகர்- புள்ளியுடைய சிறகு. பொங்கர் - சோலை. விருந்தயர் - தேன் விருந்துண்டு அயரும். குரவனை-ஆசாரியனை. காமேவு-கற்பகச் சோலைமேவு. துணர்-பூங்கொத்து. நறை-தேன். பிலிற்றும் - ஒழுக்குகின்ற. கண்ணகல்-இடம் விசாலமான. சசி கணவன் - இந்திராணியின் புருஷன், இந்திரன். புரக்க - காப்பாற்றுக. சிற்சோதித-ஞானம் சோதிக்கின்ற. பொருப்பு - மலை. தோம்

அற இவர்ந்து - குற்றம் நீங்க ஏறி. தேமேவும் - இனிமை பொருந்தும். திருமின் - இலக்குமியாகிய மின்னல். கருங் கொண்டலே - கரியமேக நிறமுடைய விஷ்ணுவே. செங்கட் கருங் கொண்டல் என்பது முரண்தொடை. 2. காரென - (கைம்மாறு கருதாத) மேகம் போன்று. மாளுறும் - இறந்து படும். சின்மயரூபன் - (சித்மய) ஞானமய வுருவன். ஓர்வுஅரி தாம்-அறிவதற்கு அருமையாயுள்ள. நேர்வினையொத்து - இரு வினையொப்புப் பெற்று. மலப்பகைபோய்-மலபரிபாகம் எய்தி. ஒண்சுகம்மேவிட (சத்திநிபாதம்) திருவருட்பதிவு பெற. ஐந் தொழில் - சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியம் (ஆக்கல், அளித் தல், அழித்தல், மறைத்தல், அருளல்). இருவகையுஞ் செறி பொருளாய்-(உருவம் அருவம் ஆகிய) இரண்டு வகையுங் கூடிய சதாசிவமாய். செம்மையில்-மலம் அற்ற நிலையில். 3. விடய ஆவாரகம் - பொருள்மறைப்பு. சொரூப ஆவாரகம் - உயிர் மறைப்பு. விரிமலக்கங்குல்-பரந்த ஆணவமலஇருள். தனுவாதி நாலையும்-தனு (உடல்), கரணம் (மனம், புத்தி, சித்தம், அகங் காரம் ஆகிய கரணங்கள்), புவனம், போகம் என்னும் நான்கை யும். தடையதாகச் செய...தடைவிடுந்தகு பரையை - திரோ தான சத்தியாயிருந்து மறைப்பாகிய தடைசெய்து மலத்தைப் பரிபாகம் பண்ணிப் பின் தடைநீக்கும் அருட்சத்தியாகும் பரா சத்தியை. அடல்-பலம். அவுணர்-அரக்கர். அலகை வேதாளம்- பேய். கூகை - கோட்டான். 4. கரவணை - கையாகிய அணை, படுக்கை. அகரமும்...பிரணவமெழு - அ, உ, ம் ஆகிய மூன் றெழுத்து ஒலியுங் கூடியபோது உண்டாகும் ஓம் என்ற பிரணவ ரூபமாயும் மந்திர வடிவாயும் உள்ள. களிறே - யானை முகக் கடவுளே. 5. மகரக்குழை-மகரமீன் வடிவான காதணி. சுருதி இரைக்கும்-வேதம் ஒலிக்கும். மாதுவளரும் - அழகு மேம்படும். பசுமலத்தை-உயிரின் அஞ்ஞானத்தை. குறி-அடையாளம், 6. கரியகளச் செம்புயல் - கருமையான கழுத்தையுடைய சிவந்த மேகம்போன்ற சிவபெருமான் (முரண்தொடை). மணியை -

உருத்திராக்க மணியை. குறுமுனி-அகத்தியர். தெரியல்-மாலை. கோடுழவலரும் - காம்பு உறுத்த மலரும். புறங்காத் தளித்திடவே-காப்பாற்றவே. 7. பந்தனைக் கார்கடல் - ஆசையாகிய கரியகடல். இவர-ஏற. கலனை-கப்பலை. சிவனுரிய பெயர் ஐந்தினை-பஞ்சாக்கரமாகிய திருஐந்தெழுத்தை (ஈசானாதி பஞ்சப் பிரம மந்திரங்கள் என்பாருமுளர்). அகத்தேக்கனை-அகத்துள் தேங்கி யிருப்பவனை. தருணகுமரனை - இளமையான குமாரக் கடவுளை. தண்டலை-சோலை. 8. குவடு-சிகரம். அப்புயல்-அந்த விஷ்ணு. நால்வகை மலர் - கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ. மினல் - மின்னல். எல் - ஒளி. திருப்பரங்குன்று...பழமுதிர்சோலை-முருகப்பெருமான் ஆறுபடை வீடுகள். கற்குவடு தொறும்-குன்றுதோறாடல். இருகால் மலர்-இரண்டு திருவடித் தாமரைகள். 9. செய்தல், காவி (நீலோற்பலம்), வள்ளைக் கொடி, குமிழம்பூ, முல்லையரும்பு, குமுதம் (ஆம்பல் பூ), தோன்றி (காந்தள்பூ), கன்னிகாரமுகை (கோங்கரும்பு) என்பவை முறையே சரஸ்வதியின் கூந்தல், கண், காது, மூக்கு, பல், வாய், கை, முலையாகியவற்றுக் குவமைகளாயின. இருகாவிபொரு வள்ளை-காதளவு நீண்ட கண்கள் என்பது கருத்து. எகினம்-அன்னப்பறவை. சொற்றிருந்தென-சொல்லியிருந்தது போல. கைதை-தாழை. மகரமும்-மகரந்த மணமும். புளினம் மலி கயறு புலவை-மணல்மேட்டிலுள்ள உலர்ந்த மீன் நாற்றம். செய்தலஞ் சமரபுரி-செய்தல் நிலத்திலுள்ள அழகிய திருப்போரூர். குகனை-அடியார் இருதய குகையில் இருப்பவனை. 10. எண்திசையோர்......சோமனும் - இங்கு முறையே அஷ்டதிக்குப் பாலகர், அஷ்டவசுக்கள், அஷ்டவயிரவர், சப்த மருத்துக்கள், ஏகாதச உருத்திரர், துவாதச சூரியர், தேவகுரு, நவவீரர், பிரமன், சப்த மாதாக்கள், சந்திரன் ஆகிய பல தேவர்கள் கூறப்படுகின்றனர்.

2. செங்கீரைப் பருவம் :—1. இருவேறற்ற அத்துவிதம் - உயிர் இறைவன் என்றும் இரண்டும் வேறு என்பது நீங்கியநிலை.

ஆன ஞானம் - உயர்ந்த ஞானசத்தி. ஆறுறகன்ற சிவவாரி... அமுதம் - முப்பத்தாறு தத்துவமும் நீங்கிய சுத்த சிவாநந்தம். செங்கீரை - ஒருகாலை மடக்கி ஒருகாலை நீட்டி இருகைகளையும் நிலத்திலூன்றித் தலைநிமிர்ந்து முகமசைய ஆடுதல். 2. தஞ்சம் - பற்றுக்கோடு. தவள யானைக் கடவுள் - இந்திரன். விஞ்சக் கரம் புனையும் - அதிகமான கைகள் அலங்கரிக்கும். முதல்வர் - உருத்திரர். விபுதர் - தேவர்கள். 3. சுடிகை - உச்சிக்கொண்டையில் வைக்கும் நாகாபரணம். குதம்பை - காது வளர்க்கும் குழை. கஞ்சமலர் - தாமரை. கடிதடத்து - அரையில். சர - அசைகின்ற. அசரங்கள் - அசையாப் பொருள்கள். 4. முத்தொழில் சடத்தும் அறிவிடத்தோரிரண்டும் - ஐந்தொழில்களுள் முதல் மூன்றும் சடமாகிய உடம்பினிடத்தும் ஏனைய இரண்டும் சித்தாகிய உயிரினிடத்தும் நிகழ்வன. விழைவு வெகுளி - ஆசை கோபம். 5. ஏழ்வாரிதி - எழுவகைப் பிறப்பாகிய கடல். சீரருள் பெற்றுளார் கரைதந்தாளெங்கோனே- சிறந்த அருளைப் பெற்றவர் தங்குகின்ற முத்தியாகிய கரையை எனக்குத் தந்து ஆளும் அரசே. நீ மிசை இந்தா - இந்தா நீ இதைச்சாப்பிடு (இந்தா என்ற சாதாரண வழக்கிலுள்ள சொல் நூல் வழக்கில் இங்கும் கந்தபுராணம் வள்ளியம்மை திருமணப் படலத்திலும் மீண்டும் வருவது காண்க). 6. அகமுகமாயொரு சுழிமுனை சேர்பவரங்கேயுந் தேவே — உள்முகமாக அந்தர்யாகம் செய்து சுழிமுனை நாடியின் வழிச்சென்று கூடுவோருக்கு அங்கே பொருந்தி நிற்கும் கடவுளே. சடானன - ஆறுமுகனே. 7. மகபதி சக்கிரி - இந்திரன், மால். அளி - வண்டு. எண் கூடும் - நினைவு கூடும். உயிர் மயில்கள் - உயிர்களாகிய மயில்கள். அயில் - வேல். கடவுள் மடப்பிடி - தெய்வயானை. மொய்ம்பு — பலம். இதயபுரி - இருதயமாகிய ஊர். 8. குவளைப்பிழி......கூடி - குவளை செவ்வாம்பல் தாமரை மலர்களின் தேன். சேதகம் - சேறு. கூனற்கொழுவுமுசிதை - வளைந்த காரையுடைய கலப்பைநுனி. கடைசியர் - பண்ணைப்

பெண்கள். சினவி - கோபித்து. பவளக்கடிகைப் பேரணி - பவளத் தண்டாலாகிய சூடகம் என்ற பெரிய கையாபரணம். திடரில் - மேடுபோல. தண்டீர நன்னாடு - தண்டீரன் ஆண்ட தொண்டை நன்னாடு. 9. கோடரம்-குரங்கு. இருலிழிபிழி - தேன் கூண்டிலிருந்து இழியும் தேன். அகடு-வயிறு. 10. ஓதிம சாலம் - அன்னங்களின் கூட்டம். மேதி - எருமை. ஞிமிறு - வண்டு.

3. தாலப் பருவம் :—1. சோமசிலைத்தகடு - சந்திரகாந்தக் கல். குலிசத்தூண் - வயிரத்தூண். மாழைத்தசும்பு - பொற் குடம். பொறை - பாரம். குறுந்தாள் - சிறியகாம்பு. தறை - பூமி. 2. பரவை - சமுத்திரம். அளறு - சேறு. வயம் - வலி. அகலக்குலிசவரை - மார்பாகிய வைரமாலை. தகர - பிளவுபட. அரிமாமுகன் - சிங்கமுகன். சூதம்-மாமரம் (சூரன்), தாருகன், சிங்கமுகன், சூரபதுமன் ஆகிய மூவர் வதையும் இப்பாட்டிற் கூறப்பட்டுள்ளது. 3. மூலநிலத்தில் - மூலாதாரத்தில். அதோ முகம் - கீழ்நோக்கிய முகம். முகிழ்த்து - மூடிக்கொண்டு. மூரிப் பாம்பை - பலம்பொருந்திய குண்டலி சத்தியை. கார் அனலை- பிராணவாயுவாகிய நெருப்பை. நிலம் ஆறு - ஆறு ஆதாரம். காலும் - ஒளி கக்கும். பந்தம் - தீப்பந்தம். விறிசு - தீப்பொறி புள்ள ஓர்வகை வாணம். விந்து - சுத்த மாயை. தடம் - பெரிய. 4. கார் - மேகம். பிளிறிட - கர்ச்சிக்க. திருகு மருப்பு - முறுக்குடைய கொம்பு. பேராயிர முடி உரகன் - ஆதி சேடன். வடவரை - மேரு மலை. குலவரை - கூட்டமான மலை. திசைவரை - திக்குமலைகள். பனி-குளிர்ந்த. கோளகை - மேல்வட்டத்தை. படி-பூமி. தகர்-ஆடு. 5. இரணிய-பொன்மய மான. முச்சுடர் - சூரியன், சந்திரன், அக்கினி. கமை-பொறு மை. (க்ஷமை). தமர் - சுற்றம். 6. வெயில் - காந்தி. நீளிய - நீண்ட. தெய்வத - தேவ. வேளை - மன்மதனை. புயலொத் தவன் - விஷ்ணு. 7. பூகத்திரள்-பாக்குமரக் கூட்டம். தேமா - தேமா. பலவின் இனம் - பலாக் கூட்டம். கன்னல் - கரும்பு.

பணை - வயல். மருதம் - மருத நிலம். பொன்னம் பூமி - பொன்னுலகு. மாழை - மாமரம். தன்னம் - அழகு. 8. வன மேதி - காட்டெருமை. கனை - சப்திக்கின்ற. வெங்கண் - கொடியகண். பணி - பாம்பு. மணி - இரத்தினம். குவை - குவியல். கழை - மூங்கில். முச்சங்கம் - சரஸ்வதி, யமுனை, கங்கை ஆகிய மூன்று நதிகளின் சேர்க்கை. நல்வேணி - நல்ல நதி. துங்கம் - உயர்ந்த. வரன்றி - வாரிக்கொண்டு. துடிஅடி- யானை. முழை - குகை. கண்படு - தூங்குகின்ற. 9. கஞ்சனை - பிரமனை. முனிந்து-கோபித்து. காமன்-மன்மதன். மஞ்சன்- மேகத்தை வாகனமாகக்கொண்டவன் (இந்திரன்). குஞ்சரி - தேவயானை. விஞ்சுறும் - மிஞ்சும். குரவு அணி - குராப்பூ அணிந்த. 10. அடு - கொன்ற. கோளரி - சிங்கம். கும்பத்திடு- குடத்திலிட்ட. திருவில் - இலக்குமிபோல. பண்டை - பழமையான. பலி - பிச்சை. நசை - விருப்பம். வாகா - தோளை யுடையவனே. சதுரா - சமர்த்தனே.

4. சப்பாணிப் பருவம் :—1. பொருனைநதி - தாமிரபரணி ஆறு. சந்தப்பொங்கர் - சந்தனமரச்சோலை. பொலம்-பொன். குவடு - மலை. சப்பாணி - ஒருகையோடு மற்றொருகை சேர்த்துத் தட்டுதல். 2. குருகுலகோமகன் - துரியோதனன். அடற் படை - வலிய சேனை. வாகுவலயம் - கேயூரமெனும் அணி. பற்குனன் - அருச்சுனன். கடவி - செலுத்தி. மறுமன்னர் - விரோதி. செல் - மேகம். 3. களங்க முயல் - களங்கமாகிய முயல். குரிசில் - பெருமையிற் சிறந்தோன். 4. நனவில் - விழிப்பிலும். பொறி - ஐம்பொறிகள். புருடனில் - புருடதத் துவத்தில். பகுதி - பிரகிருதி, (இயற்கை). காலபரம் - கால பர தத்துவம் (பரசொப்பனம்). வியோமம் - பரசுழுத்தி. பரமதுரியம் - சிவசாக்கிரம். விந்து - விந்து தத்துவமும். விசுவ முண்ட - சூழ்ந்துள்ள. நாதம் - நாததத்துவம். உபசாந்தம் - சிவசுழுத்தி. இருளும் விள்ளும் - ஆணவமலமும் நீங்கும். தனபதி - குபேரன். எனுவன் - தோழன். 5. சுலவு-சுற்றிய.

பூனதக் கிம்புரி - பொன்னலாகிய பூண். கும்பம் - மத்தகம். பிடி - பெண்யானை போன்ற உமாதேவியார். பிணக்கு - மாறுபாடு. கடியும் - போக்கும். திரிபொருள் - முப்பொருள் (பதி - பசு - பாசம்.) கைக்குறிப்பு - திருக்கரக்குறிப்பு. அன விட்ட - வருத்த. 6. இவர்ந்து - ஏறி. மாசுணம் - பாம்பு. தாரை - நுனி. சுடிகை - உச்சி. கொடி - கோழிக்கொடி. எண் - எண்ணப்படுகின்ற. வலம்புரி - சங்கு. சும்மை - ஓசை. 7. பந்தி - வரிசை. ராசி - கூட்டம். இளவெயில் - இளமை ஒளி. கறை - களங்கம். நித்திலம் - முத்து. மதாணி - மார்பி லணியும் (பதக்கம்) அணி. திரகதம் - நிலைபெற்ற. செக்கர் வானம் - செவ்வானம். துகில்-வஸ்திரம். குரகதம்-வாகனம். நடவி - நடத்தி. கூர்ஊர் - கூர்மை தங்கிய. அயில் - வேல். 8. உவணத்திரள் - கருடக்கூட்டம். பட்டம் - காற்றாடி. குருதி - இரத்தம். அதள் - தோல். மிடல் - பலம். கொற்றவ - அரசே. 9. ஆடகம் - பொன். சிகரி - கோபுரம். பொற்குடம் - பொற்சிகரம். தெற்றி - தெருத்திண்ணை. அளகையாளன் - குபேரன். கூடல் - மதுரை. செழியன் - பாண்டியன். அழல் - சுரநோய். 10. குலிசப்பாணி — இந்திரன் (வச்சிராயுதம் கைக்கொண்டோன்). வளைப்பாணி - விஷ்ணு (சங்கை கையிற்கொண்டவன்). கரகப்பாணி - பிரமன் (கமண்டலம் கைக்கொண்டோன்). பூசுரர் - அந்தணர். மதிக்கதிர் - சந்திர சூரியர். அயிற்படை - வேலாயுதம்.

5. முத்தப் பருவம் :—1. கயல் - மீன். கரிக்கோடு - யானைக்கொம்பு. ஏனம் - பன்றி. கழை - மூங்கில். கதலி - வாழை. சாலி - நெற்பயிர். நந்து - சங்கு. புடவி - பூமி. பொன்றும் - அழியும். கேழ் ஒளி - விளங்கும் ஒளி. பொருந்தும் - பொருத்தமான. இயல்பு - இயற்கை. முயல்வுற்று - முயன்று. 2. மந்தாநிலம் - தென்றற்காற்று. தளைக்கும்-சேர்ந்திருக்கும். நாண் - கயிறு. கழை - கரும்பு. இந்து - சந்திரன். கவிகை - குடை. சுகப்பரி-கிளியாகிய குதிரை. குழைப்படை-

கூந்தலுடைய பெண்கூட்டம். பணி - வணங்கும். 3. குருகின் சிறை - கொக்கின் இறகு. பிறைக்கொழுந்து - இளஞ் சந்திரன். கொழிக்கும் - வெளிவிடும். முருகு - வாசனை. 4. பனியில் - பனியை விட. தரங்கம் - அலை. பணிலம் - சங்கு. இரசிதம் - வெள்ளி. பூம்பணிச்செப்பு - ஆபரணப் பெட்டி. எய்ந்த - ஒத்த. முரண் இனம் - சிப்பிக் கூட்டம். உளைந்து - வருந்தி. திடர்தோறும் - மேடுதோறும். படவர் - செம்படவர். புனைப் போது - புன்னைப்பூ. முத்தா - (பாசத்திலிருந்து) விடுபட்டவனே. 5. பூனதமாழை - சாம்பூனதப்பொன். தொடிநிரை - வளையல் வரிசை. வியன் - பெரிய. அலம்ப - சப்திக்க. முடப்படம் - வளைந்த பாம்பின் படம். 6. கருடத்துவசன் - விஷ்ணு. ஐயன் - பரசிவம். நீபத்தொடை - கடப்பமாலை. 7. தேசிகம் - ஒளி. மூவா - கெடாத. 8. கவை - பிளவு. குடமடி - குடம் போன்ற மடி. வரால் - மீன். உகள-முட்ட. உள்ளி-நினைத்து. செஞ்சாலி - நெல். 9. வனசம் - தாமரை. சேலே-சேல்மீனை. சினைபடு - கருப்பங்கொண்ட. களிறு-களிற்று மீன். நிலவிறிசு-நிலத்திலுள்ள விறிசு வாணம். தேன் - சாறு. மூலிச்சுதை-மூலமான தேவ அமுதம். பாலி - பாலாறு. 10. சிமயம் - சிகரம். சிறுகிளாய் - சிறியகிளியே. அனலம் - நெருப்பு. குலிகம்-ஜாதிலிங்கப்பூ. சுதைநறு - அமுதத்தேன். அளை-சேர்ந்த. அருக்கன்-சூரியன்.

6. வருகைப் பருவம் :— 1. குவடு - மலை. வாளைக்களிறு - வாளைமீன். கந்திக்குடம் - பாக்கின்குடம். உடுமண்டலம் - நட்சத்திரமண்டலம். 2. ஆவியின் - உயிர்போன்ற. கரந்து - மறைந்து. புனை - புன்னை. பஞ்சரம் - கூண்டு. 3. உழை-மான். உகள - குதிக்க. ஆனனம் - முகம். அரிமருப்பு - பன்றிக் கொம்பு. புரிநூல் - முப்புரி நூல் (யக்ஞோபவீதம்). மறை பொருவு களன் - கறைக்கண்டன், சிவன். 4. வாகுபுரி - வாகு வலயம். கயம்-யானை. கமடம்-ஆமை. 5. அளகு-கோழி. விகல-சிறிய. சுவேதத்து - சுவேதவராக கல்பத்தில். சலராசி - கடல்.

பிரசண்டம் - சண்டமாருதம் (பெருங்காற்று). நச்சுப்புழை - விஷத்துவாரம். உரகன் - பாம்பு (ஆதிசேடன்). 7. மறை - மறைந்துகிடக்கும் பொருள். தருக்கு - செழிப்பு. மன்பதை - மனிதக் கூட்டம். 8. வட்டாட்டு - சூது. பொழிவேழம்-ஐம் பொறியாகிய யானைகள். மாவை - குதிரையை. மலச்சிறையை- மும்மலமாகிய சிறைக்கூடத்தை. தட்டாது - நீங்காது. மயல்- மயக்கம். 9. இரிய - நீங்க. உததி - கடல். இயல் - இயற் றமிழ். இசை - இசைத்தமிழ். உதய - தோன்றுகின்ற. 10. அறைய அரிய - சொல்லுதற்கு அரிய. கருவி அடவி-தத்துவக் காடு. அருக - நீங்க. ஒழுகு - ஓடுகின்ற. நதியமே - ஆறே. கஞலி - நெருங்கி. புணரி - கடல். எழிலி - மேகம்.

7. அம்புலிப் பருவம் :—1. உழைதந்த மானை -(இலக்குமி யாகிய) மான் ஈன்ற (மான்போன்ற) வள்ளியை. அறுவர் - கார்த்திகைப் பெண்கள். சோனை - கார்காலம். நிகர்தி - ஒத் திருக்கின்றாய். அம்புலீ - நிலாவே. 2. தேய்வை - கலை குறைந்து போவாய். களங்கன் - களங்கத்தை உடையவன். உர அரவு - பலம் பொருந்திய (இராகு - கேதுவாகிய) பாம்பு. ஊர்பரி - செலுத்துகின்ற வாகனமாகிய மயில். 3. வன்-வலிய. பவசலதி - பிறவிக்கடல். வெயில் - சூரியன். உலையாது - அலை யாமல். துகள்சிறை - களங்கமாகிய சிறையை. கூறுத - சொல்லற்கரிய. கயநோய் - க்ஷயப்பிணி. முளரிக்கரம் - தாமரைபோன்ற கை. 4. கஞ்சாதனத்தன் - தாமரையை இருக்கையாக்கொண்ட பிரமன். கவிஞன் - நக்கீரன். கடிய குன்று - கிரவுஞ்சமலை. அடுவன் - கொல்லுவான். கும்பன் - அகத்தியன். எஞ்சாத -குறையாத. அரிவை - பெண். நளின மங்கை - இலக்குமி. இணை - சமானமாக. வெகுளி-கோபம். 5. குறவியர்வின்......உதித்தோன் - வீரபத்திரன். மகசாலை - யாகசாலை. 6. விரவு - கலந்த. உட்டை - உருண்டை. கழற் காய்-கழற்சிக்காய். விரிகருவி ஆறாறும் - 36 தத்துவம். ஏவலை- ஏவும் பணியை. ககனம் - ஆகாயம். அரி - விஷ்ணு. 7. மேக

சாலம் - மேகக்கூட்டம். கலாபம் - தோகை. விச்சித்ரகிரி - விசேடமலை. விண்டு - விஷ்ணு. அளறுபட - சேறுண்டாக. பரமனுலகு - கைலாயம். பரந்தாமனுலகு - வைகுண்டம். கமலனுலகு - பிரமலோகம். புருகூதன் - இந்திரன். ஆகு இறைவர் - விநாயகர். 8. புலன் - ஐம்புலன்கள். மறுகு - சுழலும். காலில் - பிராணவாயுவில். பயின்று - பழகி. நடு நாடி — சுழிமுனை. கணபணம் - கூட்டமான படங்கள். துளக்க மறு - அசைவறு. தசநாதம் — 10 விதமான ஓசை. அலகில் பல - எண்ணற்ற. 9. கானவர் - வேடர். மான்-வள்ளிநாயகி. சரவண அணை - நாணற்புல்லாகிய ஆதனம். கண்துயில் - உறங்கும். அளை - வெண்ணெய். கட்டுணி - கட்டுண்ட. இடையன்-கிருஷ்ணன். அனையும் - தாயும். அத்தன் - தகப்பன். உன்னி-நினைந்து. 10. குறுமுள்தாள் - சிறிய முள்ளுடைய தண்டு. வெண்கமலக் கோயிலிருந்தவள் - சரஸ்வதி. பச்சைக்கொண்டல் - விஷ்ணு. வெள்ளைத்தந்தி - ஐராவத யானை. அரசு - இந்திரன். தரு - கற்பக விருட்சம். தங்கக்கிரி - மேருமலை. தெறவோ - அழிக்கவோ. மறு - குற்றம்.

8. சிறுபறைப் பருவம் :—1. கனக குவடு - பொன்மலை (மேருமலை). கவுள்குழி - கன்னத்தின்குழி. கலுழி-கான்யாறு. மனகதி - மனோவேகம். குரகதம் - குதிரை. உரும்என - இடி போல. பண்டு - முற்காலத்து. தினகரன் - சூரியன். சின்மய-ஞானசொரூபனே. தூய - பரிசுத்தனே. சிறுபறை - பறை வாத்தியம். 2. குடமுழா — ஒருவகை வாத்தியம். கொண்டல் நிறக்கடவுள் - விஷ்ணு. தமருகம் - உடுக்கை. நூபுரம்-சிலம்பு. வடநதி — கங்கை. உழை அலற - மான் சப்திக்க. ஆடக மணிச்சபை - பொற்சபை. 3. ஆறுசமயக் கடவுள் - விநாயகர், முருகர், சிவன், அம்பிகை, விஷ்ணு, சூரியன். முத்திதரு - வீடுபேற்றைத்தரும். வித்து - விதை. வதனம் - முகம். 4. கட்டை முள் — சிறிய முள். நெட்டிதழ் - நீண்ட இதழ். நான்முக எகினம் - 4 முகங்களையுடைய அன்னம் (பிரமன்).

பச்சைப் பன்றி - திருமால். வானவன் – சிவபெருமான். வழி வரும் - பரம்பரையில் வந்த. காழி–சீர்காழி. சேவரை-மக்களை. வதுவை – திருமணம். இரும்புண்ட நீரென – இரும்பிற்பட்ட நீர்போல. வீடு – முத்தி. கவுணியர் விளக்கே – ஞானசம்பந்தரே. வரமுதவும் – வரம் தருகின்ற. 5. அமல உளம் – நிர்மலமான மனம். பரத்தில் – கடவுளிடத்து. தொளைக்கரம்–துதிக்கை. அலவற்பகை – நண்டின் விரோதி. கவி – குரங்கு. வந்திக்க - வணங்க. கிரிவாரம் – அடிவாரம். 6. புகர்படு – புள்ளிகளையுடைய. தொண்டை – துதிக்கை. சிகி – கேதுவெனும் பாம்பு. மகவுடு – மகநட்சத்திரம். குழை – தழை. தகர – உடைய. கயமுனி – யானைக்கன்று. அப்பிடி – அந்தப் பெண் யானை. தைவந்து - தடவி. 7. முடைகதுவிய – முடை நாற்றம் பொருந்திய. ஆய்ச்சியர் – இடைச்சிகள். தொறுவர்கள்–இடையர்கள். விளரி–ஒருவகைப்பண். மாமுல்லை–பெரிய முல்லை நிலம். குளமலி கண்ணன் - நெற்றிக் கண்ணன், சிவன். 8. கேழ்கலன் - நிறமுடைய அணி. மயில்நடம் - மயிலைப் போன்ற நடிப்பு. 9. எக்கிய வயிறும் - ஆழ்ந்த வயிறும். கதழெரி - உக்கிரமான நெருப்பு. 10. இருமூவளமுள - ஆறு வகையான வளம் பொருந்திய. நிசிசரர் - அரக்கர்.

9. சிற்றிற் பருவம்:—1. ஊன்கழிந்த வலம்புரி - மாமிசம் நீங்கிய வலம்புரிச் சங்கு. மாதவிப்பூ - குருக்கத்திப்பூ. கயற்கண் ஆயம் இழைத்த வண்டல் - மீன்போன்ற கண்களையுடைய பெண்கள் கூட்டமாகச் செய்யும் விளையாட்டு. 2. அங்கை - உள்ளங்கை. முனிவர் ஏறு - அகத்தியர். புடைத்தெழுந்த - பருத்த. களபம் - சந்தனம். சிதையா வீடு - சுவர்க்கம். பூஞ் சிற்றில் - அழகிய சிறுவீடு. 3. செடி - குற்றம். இருள்-அஞ்ஞானம். சிதையாது - குறையாது. 4. வாச்சியம் - உண்மைப் பொருள். தொடை - மாலை. கறை-விஷம். இதழி-கொன்றை. கண்ணன் - கண்போன்ற. புழுதி அளவி - மண்கலந்து. 5. நிமல- நிர்மலமான. காட்டத்து - விறகினிடத்து. மடியாது - அழி

யாது. உயிர்க்கலசம் - உயிராகிய பானை. இருந்து - நிட்டை கூடி. செடிதீர் - குற்றம் நீங்கிய. வாலை - அம்பிகை. 6. வடவனல் - வடவாமுகாக்கினி. மாறுபடு - பகைபட்ட. வனம் - காடு. காரே - மேகமே. தேறும் - தெளிந்த. 7. அகில்திரள் - அகில்மரத்தின் கூட்டம். கழைமணி - மூங்கிலின் முத்து. கடு - விஷம். ஊற்றிருந்த - ஊற்றிக்கொண்டிருந்த. எயிறு - பல். முழுமணி - பெரிய இரத்தினம். தரங்கக் கரம் - அலையாகிய கை. விரவி - கலந்து. வேலை - கடல். இராசவுரகம் - ஆதிசேடன். கதுவல் - சேருதல். 8. தரு - மரம். வல்லி - கொடி. தெரியல் - மாலை. சூரிச்சுதை - சுண்ணும்பு. புஞ்சம் - கூட்டம். 9. கமலக் களை - தாமரையாகிய களையை. களையும் - பிடுங்கி எறியும். கலித்த - ஒலித்த. சம்பராரி - மன்மதன். தனு - வில். பொருவ - ஒத்திருக்க. தூணி - அம்பறாத்தூணி. ஞாயில் - மதிலுறுப்பு. எய்க்கும் - ஒக்கும். திமிலம் - திமிங்கில மீன். 10. தபனம் - உஷ்ணம். (சுடுகை). புரவி - குதிரை. முகில்நீர் - மழைத்துளிகள். சாலி - நெற்பயிர். கவரி-சாமரம். பொதியக்கால் - தென்றல்.

10. சிறுதேர்ப் பருவம் :—1. மதுகரம் - வண்டு. இடறு - தடுமாற்றமடைய. மதுமாரி - தேன்மழை. தொங்கல்-மாலை. ஆகண்டலன் - இந்திரன். விதுகரம் - சந்திரக்கிரணம். மட்க - மங்கிப்போக. சூர்மகற்கு - பானுகோபனுக்கு. கதழெரி - சொலிக்கின்ற. செங்குஞ்சி - சிவந்த தலைமுடி. மால் - திருமால். 2. வளைத்துண்டம் - வளைந்த மூக்கு. மரகத நிறக்கடவுள் — திருமால். முறுகெரி கடுக்கும் - மிகுந்த எரியொத்த. சிகை - உச்சிக் கொண்டை. வின்னா அடி - பிளவுபடாத கால். ஆரணம் - வேதம். நா - நாவு. முண்டக மனைக்கடவுள் - தாமரையை வீடாக்கொண்ட பிரமன். 3. பாத கிகிரி - பாதமாகிய சக்கரம். நாடியுரு ஆணி - நாடியாகிய ஆணி. மருமம் - மார்பு. கூவிரம் - தேர்க்கொடிஞ்சி. பொறி-ஐம்பொறியாகிய. ஆடி - கண்ணாடி. காதல் - ஆசை. குஞ்சிக்கொடிஞ்சி - தலை

மயிராகிய மேல் மொட்டும். கலித்த-ஒலித்த. பல்லிய(ல்)ராசி-பலவாத்தியக்கூட்டம். நானுபேதமுறு - பலவகை வேறுபாடுற்ற. ஆருயிர்ப்பிள்ளையை - அரிய உயிராகின்ற குழவியை. இருத்தி - இருக்கவைத்து. மனப்புரவி - மனமாகிய குதிரை. வினைவட வழி - இருவினையாகின்ற தேர்வடங்களின் வழி. வலவன் - தேர்ப்பாகன். 4. உறும் அறிவை - ஞானமய ரூபனே. மயல்இல் - மயக்கமில்லாத. பரம்-இறைவன். சுட்டுப்பொருள் - உலகம். இயக்கிவரும் - நடத்தி வருகின்ற. காண் - பார். சிலைமனம் - கல்போன்ற மனம். 5. மூன்றும் - சத்து சித்து ஆனந்தமாகிய மூன்றும். மருளிரிய - மயக்கம் நீங்க. பழுதை-கயிறு. மதித்தவர்க்கு - அறிந்தவர்க்கு. அரவு இன்மையின்-பாம்பு (என்ற ஐயம்) இல்லாமையால். இலங்காது-விளங்காது. 6. உதரம் - வயிறு. மிடறற்றூடும் - தலைநீங்கி யாடுகின்ற. வெர்தக்குழு - மிண்டங்களின் கூட்டம். வெங்களம் - யுத்தகளன். 7. கவை - பிளவு. ஞெண்டு - நண்டு. கண்டல் - தாழை. அதுகாலும் - அத்தாழை மலர் கக்கிய. உவமையில் - ஒப்பற்ற. 8. புல்லி - புறஇதழ். அல்லி - அகஇதழ். பங்கேருகம் - தாமரை. பால் - வாழைப்பால் பரியும் - வெளிவிடும். கதலி - வாழை. முண்டகம் - தாழை. புன்னாகம் - புன்னைமரம். சினைவளை - கருவுற்ற சங்கம். செய்தியின் - செய்கை போல. உசிதம் - மேன்மை. 9. துகிர் - பவளம். முரண் - சிப்பி. தந்தி - யானை. நாவி - கஸ்தூரியும். அகில் - அகிற்கட்டை. சந்தக்குறடு - சந்தனக்கட்டை. நண்ணுறல்-சேருதல். பண்ணுற - ஒழுங்குபட. நிருபரெல்லாம் - சிற்றரசரெல்லாரும். முறைமாறும் - முறையை ஒக்கும். 10. முழைதோறும்-குகைதோறும். கொடிமினல் - மின்னற்கொடி. வான்தரு - வாளை ஒத்த. கவைநா - பிளவுபட்ட நாக்கு. பாதத்தின் - பாதநூலிற் கூறியபடி. கடவும் - செலுத்தும். பாலசமுத்திரமே-இளமை மிகுந்தவனே.

11. அலங்காரம் :—காப்பு. முராரி - திருமால். தங்கை - உமை. பருமயிலோற்கு - முருகனுக்கு. ஒக்க - சமானமாக.

மால் யானையை-பெரிய யானையாகிய விநாயகரை. 1. பூமேவு நாபன் - திருமால். புரந்தரன் - இந்திரன். தார் — வெற்றி மாலை. கோமேவு - தலைமைபெற்ற. தூமேவு - பரிசுத்தமான. 2. தெய்வப்பிடி - தேவயானை. துகிர்க்கிரி - பவளமலை. நெய் வைத்த - நெய்பூசிய. 3. தாரகப் பொருள்-பிரணவப்பொருள். 4. சிற்றறிவு - ஆன்மா. நினைப்பு - உணர்வுநிலை. நித்திரை - மறைப்புநிலை. சேர்ந்து — பொருந்தி. இயங்கும் - இயக்கமடையும். இவை - மேற்கூறிய இரண்டு நிலைகள். அதுதான் - அவ்வான்மா. பேரறிவூடே - சிவத்தினிடத்தே. பற்றறுமுத்தி - விருப்பமற்ற முத்திநிலை. 5. கருமலம் - ஆணவமலம். துனி - துன்பம். 6. நக்கும் - நடவும். குழை - காது வளர்க்கும் அணி. வேட்கும் - மன்மதனுக்கும். மகிடன் - (எருமை வாகனனாகிய) எமன். 7. தம அங்கரங்களில் - தத்தமக்குரிய அழகிய திருக்கரங்களில். தொண்டு அன்பு - வழிபடும் அன்பு. 10. கோக்குஞ்சரம் - அரச யானை. நாந்தம் - கஸ்தூரி. புழுகு - புனுகு. 14. நாகம் - குரங்கு. 15. நாகங்கள் - யானைகள். கோடிற - கொம்பாகிய தந்தங்கள் முறிய. 17. அறை-பாறை. தருக்குழை - மரத்தின் இலைகள். 18. தொண்டை—துதிக்கை. கயமுனி - யானைக்கன்று. கல்லு சில்லு - கல்லின் சிறுதுண்டு. பொரு - ஒத்த. ஒருவாது - நீங்காது. 20. கொதுகு - கொசு. விது - சந்திரன். கல் - சந்திரகாந்தக் கல். 23. பூவை-நாகணவாய்ப்புள். அசுணம் - கேகயப்புள். 24. கட்டான் - கன்தான். முட்டாடுவைத்திட - முள் தாள் துவைத்திட. சினை - முட்டை. 25. மயக்கு இடைமடுப்ப - பாசத்திடை வீழ்த்த. உடும்புமுகக்கொழு - உடும்பின்முகம் போன்ற கலப்பையின் நுனி. கடுப்ப - ஒப்ப. வனசப்பிழி - தாமரையின் தேன். 26. பாசு அடை - பசிய இலை. கோகனகத் தச்சன் - பிரமன். பண்ண - சிருட்டிக்க. 27. பின்னைக்கு - பதிலுக்கு. மலப்பிணி - மும்மலப்பிணி. உடறபிணி - பிறவியாகிய பிணி. 31. வள்ளை — ஓர் இலை. சைவலக்கூந்தல் - கொடிப்பாசி போன்ற தலைமயிர்.

32. கரும்பு - கருப்பு. சாளரம் - சன்னல். 33. கரண்டம் - நீர் காக்கை. தெருண்டவர் - தெளிந்தோர். 35. கருகடல் - பிறவியாகியகடல். வருக்கை - பலாப்பழம். 39. ஆசினி-பலாப் பழம். 41. வல்லை - சூதாடு கருவி. துரந்த - ஓட்டிய. நுளை மாதர் - செம்படவப் பெண்கள். கவி - குரங்கு. தாலப்பழம்- பனம்பழம். 43. துகிர் - பவளம். சுரிமுகம் - சங்கு. பக்கத் துடன் - பட்சத்துடன். சுகபாரணர் - சுகத்தைப் பூரணமாய் அனுபவித்தவர். 46. ஏதம் - துன்பம். இதம் - இன்பம். போதம் - ஞானம். வாதம் - காற்று. யோகினில்-நிட்டையில். 47. வலவன் - பாகன். உன்கோல் - சாட்டைக்கோல். நேரோ- சமானமாகுமா. தெளிந்தவர்க்கு - யோகியர்க்கு. 48. நாவி - கத்தூரி. தனக்களிற்று அன்னம் - தனங்களையுடைய தேவ யானை. 50. சுதை - சுண்ணும்பு. களவு - களாப்பழம். 51. வள்ள - கிண்ணம் போன்ற. 52. பூதரவில் - (மேரு) மலையா கிய வில். ஆதரவால் - அன்பிஞல். சீதரன் - திருமால். தாது அரம் - இரும்பு அரம். தணந்தன - நீங்கின. 53. ஒட்டாரம்- பிடிவாதம். கட்டாணி - பேதிக்க இயலாத. 54. ஆள்-புருடர். வேட்டாடும் - வேட்டையாடுகின்ற. அமை-மூங்கில். வேட்ட- விரும்பிய. ஆங்கு ஏகல் - அங்கு போகாதே. மேல் வீடு - முத்தியாகிய வீடு. 62. சேலோர் இரண்டு - சேல்மீன் போன்ற இருகண்கள். துஞ்சற்கும் - இறப்பதற்கும். உஞ்சற்கும் - பிழைத்தற்கும். 68. தரைபக - பூமி பிளக்குமாறு. புலிநகவாய்- புலிநகம் போன்ற வாயை. ஊழிமேகம் - யுகாந்தகாலமேகம். 72. மலைவாலைப் பருவமின்-பார்வதியார். 89. விழுது ஒட்டும்- விழுதுபோல் வீசும். இன்புக்கு - இன்பத்திற்கு. 91. ஆழி - மோதிரம். மாதணி - மார் பதக்கம். ஓர் தெய்வம் - ஒப்பற்ற கடவுள். 92. நீசன் - கடையவன். புன்போதம் - புல்லறிவு. 93. செப்பு - கரண்டகம். குரம் - குளம்பு. துப்பு - வலிமை. மாவிற்கு - குதிரைக்கு. எப்பெற்றியால் - எக்காரணம் பற்றி. 94. மெய்யாம் நெறி - உண்மை மார்க்கம். செய்ஆரும்-சிவந்த.

கந்து - கட்டுத் தறி. 95. புன்னினைவு - தாழ்ந்த எண்ணங்கள். 101. திரவணி நீடிய - நிலைபெற்ற. சரவணவாவி - சரவணப் பொய்கை. குரவண்பாதம் - குராப்பூவணிந்த திருவடி. அரவு அணிவோன் - பாம்பை ஆபரணமாகவுடைய (சிவபெருமான்).

12. மாலை:— காப்பு. கருக்கோடை - பிறப்பாகிய கோடையை. மதக்காரால் - மதமாகிய மேகத்தால். நிம்பம் - வேம்பு. கம்ப - அடியவராது இதயமாகிய கம்பத்து. கடமா களிறு-பிணிப்புண்ட பெரிய யானை (விநாயகர்). 1. தூவாய்ந்த-களங்கமற்ற. வேள்-மன்மதன். 5. அற்பித்தால்-கொடுத்தால். மிச்சில் - எச்சில். நேயமுற - பத்தியுண்டாக. 7. துறவி-துறவு பூண்டோன். நல்லறத்து - சிவபுண்ணிய நெறியில் நிற்கின்ற. அறத்தின் - தருமத்தில். போரூரா என்றே - போரூரா என்று சொல்லியே. ஈடேறுவேன் - கடைத்தேறுவேன். 10. அளகை யர்கோன் — குபேரன். அனங்கன்-மன்மதன். ஏரும்-அழகும். அளகவடமீன் - கூந்தலையுடைய அருந்ததி. அணங்கு - பெண். உண்ணாது - விரும்பாது. என் - என்? ஆதரவு - அன்பு. 11. சிந்துரம் - யானை. உள்ளி - நினைந்து. கனகமலை - பொன்மலை. அளித்து - காத்து. அரசு - முருகன். 14. இருளில் - கேவலாவத்தை. தநுவேயாதி - தனு கரண புவன போகங்கள். தெருளுற்று - தெளிந்து. அவையை - அவ்வுடம்பு முதலிய வற்றை. நிற்கு ஈதல் - உனக்குத் (திருப்பிக்) கொடுத்தல். 17. முசிப்பு - வாட்டம். நடித்தேன் - கூத்தாடினேன். 25. போய்-சென்று. ஊர் - யமபுரம். அங்கு அண்டேன் - அவ்விடம் நெருங்க மாட்டேன். 31. மலையரையன் ஈன்றபிடி - மலை அரசன் பெற்ற பெண்யானை (பார்வதி). யானை - ஆனைபோல்வான். கலையரையன் - பிரமன். கால்பிள்ளை - காலில் அணைந்த குழந்தை. 32. நீதி - தருமம். ஆறு - வகை, ஆறெழுத்து. 47. அமராவதி - இந்திரவுலகம். தாயுதரப்பை - கருப்பை. 54. வாளைப்பகடு-ஆண்வாளை. பகட்டும் - பயமுறச் செய்யும். ஐவண்ணம் - ஐந்துவர்ணம். அரசிருக்கும் - அரசர் வீற்றிருப்

பர். மைவண்ணம் - மையுந்தன்மை. 56. சூக்குமை-நுண்ணிய. துனி - துன்பம். என்போதம் - சிவபோதம். திருந்த - திருத்தமடைய. பாவிப்பாய் - தருவாய். 59. திரகதமாய்-நிலைத்து. மாட்சி - பெருமை. 73. வள்ளவள-கிண்ணம்போன்ற. பிள்ளை மடவன்னம் பெடை - இளம் பெட்டையன்னம். உள்ளலொடு-நினைப்போடு. சிரல் — மீன்கொத்திப் பறவை. எவ்வாய்ப்பு-எவ்விதம் பொருந்தும். 90. மானை - பார்வதியை. இடத்தில்-இடப்பாகத்தில். மானுதவு - இலக்குமிதந்த. வேடிச்சி - வள்ளி. நாடி - தேடி. இச்சி — ஆசைகொள். 91. நாட்கமல பதம் - அன்று பூத்த தாமரை போன்ற திருவடி. 100. உற்பவியா - பிறவாத. நண்ணுத - அடையாத. பார்தொழு - பூவுலகத்தவர் வணங்கும்.

13. தாலாட்டு :—1. பூமாது — இலக்குமி. நாமாது - சரஸ்வதி. போதசுகமா மாது - ஞானசுகமுடைய பார்வதி. 4. கற்புப்பிடி - தெய்வயானை. பிணைமான் - வள்ளிநாயகி. 5. நெட்டிலை - நீண்ட இலை வடிவாகிய. 39. சொன்னமோ - பொன்னே. 40. தானற்ருர் - ஞானிகள். தண்ணளியோ — தயையோ.

14. திருப்பள்ளி எழுச்சி :—1. திருமலி — அழகுமிக்க. குணதிசை - கிழக்குத்திக்கு. அருணன் - சூரியனது தேர்ப் பாகன். இருவினைச் சமம் - இருவினையொப்பு. மலபாகம் - மலபரிபாகம். பாரகம் - பூவுலகம். அவர் - அப்பெரியாரது. இலகும் - விளங்கும். அருக்கன் - சூரியன். பொருப்பு - மலையில். இருள் - அஞ்ஞானம். 2. ஆடுறு - ஆடும்படி. பீடுறு - பெருமைதங்கிய. மரகதக்குரகதம் - பச்சைக் குதிரைகள். பூண்ட - பூட்டிய. பெருந்தடந்தேர் மிசை - மிகப்பெரிய தேரின்மேல். கதிரோன் - சூரியன். மாதவர் - தவசிகள். ஏடுஅவிழ் - இதழ்கள் விரிந்த. பொழில்-சோலை. பொதுளிய-நெருங்கிய. 3. பகர்அரு - சொல்லுதற்கரிய. அயில் - வேல்.

பதகர் - பாவியர். புகர்உடு - நட்சத்திரங்கள். மழுங்கின - மங்கிப்போயின. விகசிதமாகி - மலர்ந்து. பொலிந்தன - விளங்கின. முளரிகள் - தாமரை மலர்கள். தடந்தொறும் - குளங்கள்தோறும். உயிர்ச் சிறுபோதம் - உயிருக்குள்ள அற்ப அறிவு. தேய்ந்தென - குறைந்ததுபோல. மதி - சந்திரன். இகலறு கதிர் - பகையற்ற சூரியன். 4. ஆளுறும் - ஆட்கொள்ளும். மலர்ந்தெழு சமயம் - திறக்கின்ற தருணம். உள இருள் - உள்ளத்தின் அஞ்ஞான இருள். நோக்கால் - பார்வையினுல். ஒல்லையில் - சீக்கிரமாக. எல்லினை-சூரியனை. கூவி-கூப்பிட்டு. நீடுறு - பெரிய. மனைதொறும் - வீடுதோறும். 5. விருதுகள்-குயில்கள். பொழில்வாய் - சோலையில். கரப்படை - கையிலுள்ள சங்கப்படை. தொனித்தது - ஒலித்தது. தென்மலி - அழகுமிக்க. மலரவன் ஊர்திகள் - பிரமன் வாகனமாகிய அன்னங்கள். தடத்து - குளத்தில். சிலம்பின - சத்தம் செய்கின்றன. பத - பதங்கள் (அமைந்த). எச்சரிக்கை-ஒருவகைப் பண். பண்ணுவபோல் - செய்வனபோன்று. பாழி - பலம். மலஇருள்தெறும் ஆரிய - எனது அஞ்ஞானமாகிய இருளைப் போக்கும் ஆசாரியனே. 6. முரசுஅதிர் - முரச வாத்தியம் முழங்குகின்ற. சிகரியின் வாய்தல் - கோபுர வாயிலில். ஐந்தெழில் - ஐந்து வகையான அழகிய. பொன்னில மடவார் - தேவமாதர். புரிந்தனர் - நடித்தனர். இருந்தகை - பெருந்தன்மையுடைய. 7. ஒருபால் - ஒருபக்கத்தில். தீனம்இல்-எளியர் அல்லாத. எண்டிசைப்பாலர் - திக்குப்பாலகர். பாதலர் - பாதாள உலகத்தவர். தானமதுதவிய - தானங்கள் வழங்கிய. பொழிந்தனர் - சொரிந்தார்கள். எனல் அம்புனம் - அழகிய தினைப்புனம். மலி - மிகுந்த. சாரல் - மலைச்சாரல். 8. மறைமுடி - உபநிடதம். பரிசாரகர் - தொண்டுசெய்வோர். வளவர்-வேளாளர். குழுமி - ஒன்றுகூடி. வடமொழி - (ஆரிய) வேதம். தென்மொழி - தமிழ். பாவால் - பாட்டுக்களால். நிறைதயவுற-நிறைந்த அன்புடன். தண்டென் - தடியைப்போல. எறிமணி

அருவி - முத்துக்களை வீசும் அருவி. 9. வெயில்விடு - ஒளி வீசும். குலிசகேயூரம் - வயிரத்தோளணி. அளவு அறு - அள வில்லாத. ஆழி - மோதிரம். கவிர்-கவசம். இதழ் நேத்திரம்- கண்ணடக்கம். உறப்பணிந்தார் - மிகவும் வணங்கினார்கள். எலை - எல்லை. 10. முக்கணம் பொருப்பு - சிவபெருமான். பரிவொடு - ஆசையுடன். பனிவரை - இமயமலை. பசும்பிடி - பார்வதி. அருள்பால் - அருளாகிய பாலை.

15. பெரிய கட்டியம் :— 1. உபயதிசை - இருபக்கமும். சொரிமுறை - பொழிவது போன்ற. கரட - (மதநீர் பாயும்) சுவட்டையுடைய. பர இபம்-மேலான(விநாயகராகிய) யானை. அதிகதேவே - உயர்ந்த தெய்வமே. துவித மயல் - இரண்டு என்னும் மயக்கம். குவடு இலகு - மலையில் விளங்கும். வர முதவு கா - கற்பகச்சோலையே. 2. நடனபரத-பரதசாஸ்திரத் துன்ன நடனம். கலை - சாத்திரம். விதரணிக - சமர்த்தனே. புரண - பரிபூரணனே. சுரர் அரசு - இந்திரன். தருநிழல் - கற்பகமரத்து நிழல். மதி சுமட - அறியாமையுடைய. கரவு நெறி - வஞ்சக மார்க்கம். கதியமுது - மோக்ஷம். உதாரா - மிக்க கொடையாளியே. 3. லிபிகள் - பாஷைகள். முறைமை தரு - ஒழுங்காகப் படைத்திருக்கின்ற. செயிர அற-குற்றமற்ற. சடிலமுடி - சடைமுடி. ஒரு சொல் - பிரணவப் பொருள். 4. அமுதவுததி - பாற்கடல். சமர - யுத்தம் செய்த. அடு - கொன்ற. உகிர் - நகம். உரகர் - நாகலோகத்தவர். ககன மதி - ஆகாயத்தில் சந்திரன். திமிரதினகரன் - இருள்போக் கும் சூரியன். 6. சமரகணம் - போர் செய்யும் சிவகணம். நீதா - நீதியுடையவனே. கடவுள் இபம் - தெய்வயானை. ஒருபதிரு - பன்னிரண்டு. சவ்வாதா — நல்ல பேச்சையுடைய வனே. 7. உததி - கடல். சுவறிட - வற்றும்படியாக. குவடு- மலை. குதிகொள் - மிகுந்த. குலவிவரும் - விளங்கிவரும். ம்ருகமதம் - கஸ்தூரி. உரனே - மார்புடையவனே. பரிபுரம்- காலணி. 8. மலயம் - பொதியமலை. முனி - அகத்தியர்.

இடர் உததி -துன்பக்கடல். அவன் - அம் முனிவரது. பலகை- சங்கப்பலகை. புலவன் - நக்கீரன். குலனே - சிலாக்கிய மானவனே. நிலைமைநெறி - கற்புநெறி. நிலவி - தோன்றி. வலனே - வல்லமையுள்ளவனே. தலைமைசெறி - முதன்மை யான. பிரமசுகம் - பேரின்பம். நிலனே-நிலமே. 10. பசிதம்- விபூதி. அரன் நயனமணி - உருத்திராக்கமணி. வீரியா-வீர முடையவனே. அளவிடும் - அளவுபடுத்திய. கூரியா-கூர்மை யுடையவனே. சசிதரன்-(சந்திரனைத் தாங்கிய) சிவபெருமான்.

16. சின்ன கட்டியம் :—1. நிசகலை - உண்மைக்கலைகள். பர அறிவு - ஞான அறிவு. போதா - போதிப்பவனே. 2. நீபா – கடப்பமாலையணிந்தவனே. பூபா - அரசனே. 3. நெட்டுர - திடமுடைய. நித்தம் இடும் - நடனமிடும். வித்தகர்- ஞானியர். 5. சூடி - சூட்டிக்கொண்ட சிவபெருமான். ஆற - தணிய. தேறுகலை - தெளிந்த நூல்கள். 6. பயங்கரனே - பயத்தை உண்டுபண்ணியவனே. உரனே - மார்புடையவனே. 7. தெய்வ சிந்துரம் - தேவயானை. பொய்வரும்-அழிந்துபடும். மணவாளா – தலைவனே. கணாளா - அருள் நோக்குடையவனே. 8. பரவை-கடல். துறைவா-கரையாயுள்ளவனே. பொறைவா- சாந்தவுருவனே. 9. காலவேல்- யமனை ஒத்த வேலாயுதம். உசிததமிழ் – மேலான தமிழ்.

17. பெரிய கட்டியம் :—1. மழையின் இலகிய-மேகத்தைப் போல. மழகளிறு - இளமையான யானை. குலமணி - இரத் தினம். மழ்வும் - மழுஆயுதமும். கழைகள் - மூங்கில்கள். கணி - வேங்கை மரம். இருநிதி - கல்விச்செல்வம் பொருட் செல்வமாகிய இருசெல்வம், சங்கநிதி பதுமநிதி எனினும் ஆம். தகைமைசெறி - மேன்மையுற்ற. 3. அறுபதம் – ஆறுகால்களை யுடைய வண்டு. துதையும் - நெருங்கிய. ம்ருகதம்-கஸ்தூரி. அருண - கூட்டம். பூபா - தலைவனே. 4. மரகதமலை - பச்சை மலை. கடவும் - எறிச் செலுத்தும். தவளகர மலை - வெள்ளை

யானை. வனிதை - பெண் (தேவயானை). முடுகி அடு - ஓட வைத்துக் கொன்ற. பிரமரசம் - பேரின்பம். கோளா - கொள்கையுடையவனே. 5. திடகரமலை - யானை. பிளிற - கர்ச்சிக்க. வடகலை - வடமொழி. இடருதவு - துன்பந்தரு கின்ற. பவவுததி - பிறவிக்கடல். மருவே - வாசனையே. படி - பூவுலகு. ககனர் - தேவர். உரகர் - பாதாள உலகர். பரவு - துதிக்கின்ற. எணியதரு-கற்பகத்தரு. எண்ணிபன்ற - கொடுக்கின்ற. 7. வெருவு - பயமுறும். வனசரர் - வேடர். அரிவை - வள்ளிநாயகி. வெயில்விடு - ஒளிவிடுகின்ற. மிளிரும்- விளங்கும். 8. அகமும் - உள்ளும். எழுபுவி - எழுலகு. நறையே - தேனே. பகர் - சொல்லுகின்ற. படிறு உளமும்- வஞ்சக மனமும். மறையே-வேதமே. துகள் அகலும் - குற்றம் நீங்கிய. நெறி - நன்னெறி. துதி - தோத்திரம். முறையே- ஒழுங்கே. 9. சுருதி - சாத்திரம். குரு - ஆசாரியன். அனு பவம் - அனுபவித்தறிதல். ஒருமையில் - ஒருமை மனத்து. மருவு - சேர்கின்ற. கருவி - தத்துவம். நியதிகளையும் - ஈதல்ல என ஒதுக்கும். சசி - சந்திரன். அனல் - நெருப்பு. இறைவர் - சிவபிரான். இசைதனினும் - (பிரணவப்பொருளாகிய) இசைப் பாட்டினும். தழை - செழித்த. தண்ணே - குளிர்மையே. பண்ணே - பாவே.

18. சின்ன கட்டியம் :— 2. கலையே - சாத்திரமே. சனன கடலரை - பிறவிக் கடலிலுள்ளவரை. வாரும் - அள்ளி எடுக் கின்ற. 7. தென்மாறன் - பாண்டியன். பலகை-சங்கப்பலகை. இயலே - இலக்கணமே. 9. மாரவேள் - மன்மதன். வெரிட - முதுகு காட்ட. மாகர் - தேவர். சிந்துரம் - யானை. லிபி - எழுத்து. 10. வெயில் — வெப்பம். கனம் - மேகம். நசை - விருப்பம். மரும அணை — மார்பாகிய படுக்கை. அனமே - அன்னப் பறவையே. இனமே - உறவே.

19. எச்சரிக்கை :— 1. குறம் ஆனள் - குறப்பெண் ஆன வள்ளி. 5. ஆன அமுது - கெடாத அமுதம். 13. குக்குட

விருதா - கோழிக் கொடியோனே. சிற்சுகவடிவா-ஞானசொரூபியே. சதுரா - சாமர்த்தியமுள்ளவனே.

20. திருவடிப்பற்று :—2. வேயென்றஉறு – மூங்கில்போன்றுள்ள. வெற்பன்ன - மலைபோன்ற. ஊர் - தங்கிய. விள்ளா - விடாது. கைம்மாறு - பதில் உதவி. விடநாடான் – விட்டுவிடமுயல மாட்டான். எள்ளார் - இகழ மாட்டார். ஒன்றிய - அடைந்த. சேயை - குழந்தையை. புடை - பக்கத்தில். தள்ளான் - தள்ளமாட்டான். தமியேனை-அடியேனை. அண்டினன் - நெருங்கினன். 3. கலை-சாத்திரம். உயர்நன்கு-மிக்க மேன்மை. தாது - மகரந்தம். வனசத்தடம் - தாமரைப் பொய்கை. வண்கா – வளப்பமான சோலை. 5. ஒரும் – ஆராயும். ஆரும்-பொருந்திய. பதிகதி - உயர்ந்தநிலை. சிரபுரமாநகர்-சீர்காழி. தரு - கற்பகத்தரு. மிகுநிதி - (மிகுந்த செல்வம்) பதுமநிதி. சுரபி - காமதேனு. 8. நண்ண - பொருந்த. சுகவாரிக் களியே—சுகக்கடல் மகிழ்ச்சியே. என் - என்ன காரணம். கண்மாயம் - கண்மயக்கு வித்தை. அளியே - கிருபையே. மறைமுடிவு – உபநிடதம். பஞ்சப் பிரணவம் - ஐந்து அக்கரமாகிய பிரணவம். தளிர் - கொழுந்து. சுதை - சுண்ணும்பு.

21. துயிற்பத்து :—1. நன்றருளுதவு - பெரிதும் அருள்செயும். துணைவன் - சகோதரன். நனி - மிகுந்த. மன்றினுள்-சிற்சபையினுள்ளே. கன்று - பசுங்கன்று. குறுந்தடி - சிறுதடி. ஆவிள – விளாமரத்தை. 2. குலவிய - விளங்கிய. பிரமரசம்-பேரானந்தம். மரு - விளக்கும். நிமலகதி - நிர்மலமாய புகலிடம். 3. அலகால் நலியும் - இறகால் வருத்துகின்ற. இருநிதிசுதர் – பெருஞ்செல்வப் பிள்ளைகள். திக்கு - திசையை. எய்தேல் – அடையாதே. திவலை – துளி. பொருவரு – சமானமற்ற. காடு அணுகேல் - காட்டை அணுகாதே. தற்போதம் - (சீவபோதம்) உயிர் அறிவு. வாதம் – காற்றை. 4. கயவர்கள் – கீழ்மக்கள். நிது உயிர்-கொடியநகம். உடல் தைக்கும் – உடலை வருத்தும். அதுமதி-

அவ்வெண்ணம். பற்றும் – பிடித்துக்கொள்ளும். உயுநெறியினராம் – (உயிர்கள்) உய்யும் வழியையறிந்த அடியவராகிய. கிள்ளை – கிளிப்பிள்ளை. உயர்நூல் - மேலான நூல்களாகிய. குயின்மணி - இரத்தினங்கள் பதித்த. 5. பற்பல் – பலப்பல. ஏகச்சோலை – ஒரே சோலையில். எல்பெற – ஒளி உண்டாக. நாடாமே - பாராது. செப்பமதாய் – செவ்வையாய். கு – உலகம். 6. கண்ணி – வலை. மிகுபொறி - பெரிய ஐம்பொறிகள். பொறி – இயந்திரம். பஞ்சரம் – கூடு. மிடை–புதர். சித்திரப்புள் - படத்திலெழுதிய பறவை. 9. சாம்பூநதத் தங்கம் – உயர்ந்த பொன். பாவை – பொம்மை. கோவை– தலைவனே. 10. உரம் – மார்பு. துணிபட - வெட்டுப்பட. தார் - மாலை. தேர் – தேர்ந்த. துணைவா - சகோதரனே. கூர் - மிகுந்த.

22. கிளிப்பத்து :— 2. அன்னியம் இல்லாது - வேறுபாடற்று. மாடம் - வீடு. பன்னுதி - பேசுவாய். 3. மரகத முடி - பச்சைக்கல் (முடி) கிரீடம். ஆறுமுடி - ஆறு சிரங்களையுடைய. மாணிக்கக்கிரி - இரத்தினமலை. விசை-வேகமாக. விருது - கொடி. பரை - அம்பிகை. எழுதரும் - எழுதுவதற்கும் அருமையான. தரை - பூவுலகம். 4. உம்பர்-தேவர். பரகதி - மேலான மார்க்கம். சிலுகிடும் - துன்புறுத்தும். இலகிய - விளங்கிய. இசையாய் - சொல்வாய். 5. கலை - சப்திக்கின்ற. கன்னல் - கரும்பு. நலை - தேன். நசைதரும்– விருப்பங் கொடுக்கும். காட்டுமாங்கனி - ஒட்டுமாங்கனி. 8. சரோருகம் - தாமரை. பேறு - செல்வம். பதயுகன் – திருவடியுடையவன். தேறு - தெளிந்த. கோ - தலைவன். வீறு - விளக்கம். 9. சரண் - அடைக்கலம். முதிராவயது- இளவயது. நிமலா - மலமற்றவனே. மருகா - சுருங்காத. மருஆர் - வாசனை தங்கிய. 10. ஆர் - அருமையான. கொன் பெற்றுஉறும் - பெருமையுற்று விளங்கும். கோல - அழகிய.

23. வண்டுவிடு தூது :— 1. மாக்கா - பெருஞ்சோலை. மாத்தாள் - பேரடிகள். 2. கோமள - அழகிய. பாவையர் - தெய்வயானை வள்ளியாகிய பெண்கள். கேள்வனை-கணவனை. பிரசண்டன் - உக்கிரமானவன். பாமண - பாக்களால் வாசம் வீசுகின்ற. 4. சோபனம் - மங்களம். காரிகை - பெண். ஆலை - கரும்பாலை. மேதி - எருமை. அம்புயம் - தாமரை. நூபுரக்கஞ்சம் - சிலம்பணிந்த தாமரைபோன்ற திருவடி. 5. கோங்கு அலர்மாலை - கோங்குப் பூமாலை. மதாணி - மார் பதக்கம். குயின்ற - பதித்த. ஒளி வீடு - சோதி வீட்டை. ஓதுமின் - சொல்லுங்கள். 6. சாரல் - மலையடிவாரம். தண்டலை - சோலை. துளைந்து - கலந்து. எற்கு உறவால் - எனக்குச் சொந்தமா யிருத்தலால். 7. தாது அரித்து - மகரந்தத்தை வடித்து. வாரிசத்தேன் - தாமரையின் தேனை. வாய்கழி - வாய் கழுவி. அணை - படுக்கை. அல்லியல் நெஞ்சினன் - அஞ்ஞானமுடையவன். ஆனநெறி புரியாத வள் - நன்மார்க்க மில்லாதவள். புல்லியள் - அற்பமானவள். 8. ஊர்விண்டு - ஊரைவிட்டு. பண்டு - ஆதியில். பண்புறு - குணங்கள் தங்கிய. வாசனை - வசிப்பவனை. இனம் - இன் னும். காண - நன்கு தெரியுமாறு. 9. வாரமனை - உரியவீடு. கோமலர் - இன்பந் தங்கிய. காமுகசாலை - இன்பச்சாலை. கா - சோலை.

24. சிந்தோளி :— 1. உனி - நினைத்து. மரு - வாசனை. மன்னு - நிலைத்த. உரு இருந்து - உடலில் இருந்து. 2. கனவிடாய் - நீர் வேட்கை. ஆனநீர் - நல்ல நீரை. உவர்நீர் என - உப்புநீர் என்று. நாடுவதன்ன - நினைப்பதுபோல. வான நாடர் - தேவர். ஆரணம் - வேதம். தான - மதநீர். 3. பினையும் - திரும்பவும். ஆரியன் - ஞானாசிரியன். 4. பழுதை - கயிறு. வாதனை - வாசனை. மொய்த்த - கூடிய. பஞ்சரம் - கூடு. மறையுச்சி - உபநிடதம். சுதை-சுண்ணாம்பு. 5. அகர ஆதிய - அகரம் முதலான (எழுத்துக்கள்). பிறங்

குரூத - விளங்காத. பரிசு என - தன்மைபோல. பேதம்ஆம்- பேதம் என்கிற. முரண் — மாறுபாடு. அவித்த - போக்கிய. சொரூபம் விட்டு - ஆன்மாவையின்றி. உயிர்முதல - பிராண வாயு முதலியவை. இன்று - அல்ல. ஓதினோய் - சொன்ன வனே. அரண் - திரிபுரம். அவித்தை - அஞ்ஞானம். தரணி- சூரியன். 6. மூலத்தை - காரணத்தை. இயம்பி - சொல்லி. பந்தஞாலம் - பந்தப்படுத்துகின்ற உலகம். படிறேன்-பொய்ய னேன். கொந்து - கொத்து. சடாஅடவி - சடையாகிய காடு. சந்தனடவி - சந்தனக்காடு. விரை - வாசம். 7. ஒளிக்கும் - ஒளிவிடுகின்ற. வெளி - வெட்டவெளி. தளிர்க் கையார் - தளிர்போன்ற கைகளையுடைய பெண்கள். மாடம் ஆர் - வீடுகள் தங்கிய. இந்திர சாபம் – இந்திர (தனுசு) வில். வேணியர்-சடையை முடியாகவுடைய சிவபிரான். 10. கடா - எருமை. அஞ்சல் - பயப்படாதே. ஆலம் - விஷம். களத்தர்- கழுத்தை உடைய சிவபிரான். அரிவை - பார்வதி. தாலம் பாளை - பனையின் பாளை.

25. ஊசல்:— 1. சுந்தரம் - அழகிய. ஆகம் - ஆகாயம். ஊடே - மத்தியில். சுரர் தரு - கல்பகமரம். நாப்பண் - மத்தியில். குலிசப்பலகை - வைரப்பலகை. தந்திமுகற்கு - விநாயகருக்கு. 2. மார்த்தாண்டர் - சூரியர். 3. தாதை - பிதா (சிவபெருமான்). உவகைபூப்ப - சந்தோஷிக்க. புங்க- உயர்ந்த. இளவல் - தம்பி. மால் - திருமால். மைத்துனன்- பிரமன். அங்கை - அழகிய கை. 4. வேத்திரங்கொடு - பிரம்பைக் கொண்டு. சசி - சந்திரன். கவரி - சாமரை. மதன் - மன்மதன். உருக்கொண்டு-வடிவந்தாங்கி. அடைப்பை- வெற்றிலைப்பை. துணை — துணைவிமார். திசையவர் - திக்குப் பாலர். மிடற்று இசை - கழுத்திலிருந்து தோன்றும் மெல்லிய ஓசை. 6. நற்றாய் - பெற்றதாய் (பார்வதி). பெருந்தாய் - கங்கை. மாமி - இலக்குமி. கலைவாணி - சரஸ்வதி. சசி - இந்திராணி. அரம்பைமாதர் - தெய்வப்பெண்கள். தேவிமார்-

வள்ளி தெய்வயானையாகிய மனைவியர். 7. இருள் நைய-அஞ்ஞானங் குறைவதற்கு. இன்னியம் - இனிய வாத்தியம். சும்மை - முழக்கம். ஆர்ப்ப - ஒலிக்க. காராளர்-வேளாளர். தருணவளம் - இளமை. 8. குழல்மாலை - கூந்தலிலுள்ள மாலை. புகர் - குற்றம். நனி - மிகவும். இலைவேல் - இலை வடிவமாகிய வேல். வலி - பலம். அலகை - பேய்கள். அளகை-குபேரநகர். 9. விழுது - கொடி. தோகைக்குரகதம் - மயிலாகிய வாகனம். ஊழி அனல் - ஊழிகாலத் தீ. அறுத்த - ஒழித்த. ஆழி - கடல். தாழி - பானை.

26. சிற்சுகம்—(1) விருத்தக் கலித்துறை :—8. உனலரும்-நினைத்தற்கரிய. படிவம்-உடல். நினைவு கடந்தவர்-ஞானியர். தனபதி - குபேரன். 9. சாம்பூனத நூபுரம் - உயர்ந்த பொன்னால் செய்த காலணி. ஞானபரா அமுது - மேலான சிவஞான அமுதம். தானவர் - அசுரர். நூறிட - அழித்திட. 10. உயர்பரம் - மேலான பொருள். நிலவிய - கலந்த. சொருபமதலது - ஆன்ம சொரூபம் தவிர.

26. சிற்சுகம்—(2) அட்டகம் :— 1. திரு — இலக்குமி. வெளை முளரி - வெண்தாமரை. தேனும் - சரஸ்வதியும். மருவ - அடையுமாறு. மாகர் - தேவர். 3. ககனபதி - இந்திரன். தகைமை - குணங்கள். 4. அறிவொடு - ஞானத்தோடு. அறிபவன் - காண்போன். நெறிகொள் - நல்லவழியிலுள்ள. தறுகண் - அஞ்சாமை. 5. சொரிமுறை - பொழிவதுபோல. வாகன் - தோளுடையோன். இனன் - சூரியன். சனகன்மகள் பதி - சீதாபதியாகிய ஸ்ரீராமன். 6. உதய மயில் - தோன்றிய பார்வதி. சுதை - பால். திரிநயனவரை - சிவபிரான். கவி - தேவாரம். சிமய - சிகரத்தோடுகூடிய. சமர - சண்டை செய்யும்.

26. சிற்சுகம்—(3) பெருங்கழிநெடில் விருத்தம் :—1. நெக்கு-நெகிழ்ந்து. செருவயின் - யுத்தத்தில். திறல் - பலம். மக -

பெரிய. வலை - வருத்தம். தரு - கற்பகத்தரு. மணி - சிந்தாமணி. சததள - 100 இதழ்களையுடைய. கமலம் - தாமரை. 2. முரண் - வலிமை. பவம் - பிறவி. முடலைகொள் - கெட்ட நாற்றம் வீசும். விடயம் - விடயசுகங்கள். மகரம் - மகர மீன். அம்பி - தெப்பம். மிருக மதம் - கஸ்தூரி. படீரம் - பச்சைக் கற்பூரம். விரை - வாசனை. அசலம் - மலை. கதிர் - சூரியன். 3. குவடு - மலை. வெம் - கொடிய. புலமிலி - அறிவில்லாதவன். புனித - பரிசுத்தமான. நெறி - வழி. பதகர் - பாபிகள். நிருப - தலைவனே. தலமதில் - பூமியில். இரவி - சூரியன். 4. அழல் - அனல். அகநெக - மனம் உருக. கசடனை - குற்றமுடையவனை. விழலன் - விழல்போன்றவன். விரகன் - ஆசையுடையவன். மதுரம் - இனிய. முனிவு - கோபம். விறலன் - தந்திரமுடையவன். குறுகும் - சமீபிக்கும். புழை - துவாரம். கரமலை — யானை. பிடரில் - கழுத்தில். பொற்பினில் - அழகுபோல். தழுவு அரை - தழுவத்தக்க அடிப்பாகத்தையுடைய. மாலிகை - மாலை. 5. உததி - கடல். உடுநிரை - நட்சத்திர வரிசை. ஒலிகெழு - ஒலிபொருந்திய. புளினம் - மணல்மேடு. இதவகை - இவ்வகையில். மெலிவுறு - கஷ்டப்படுகின்ற. விகசித - மலர்ந்த. வெந்துயர் - கொடுந்துன்பத்தை. 6. சிகரியின் - மலைமேல். பரிதியின் - சூரியனைப்போல. திரள் - திரண்ட. உடுமதி - சந்திரன். 7. கசடு - குற்றம். கடவுளர் மகளிர் - தெய்வப் பெண்கள். கால் - காற்று. இரட்ட - அசைக்க. கெசமுகன் - தாருகன். கேழ் - நிறமுடைய. கேசரி - சிங்கம். தெய்வக் கம்மியன் - தெய்வதச்சன். தசமுகன் - இராவணன். 8. அவகதி - கெட்டவழி. புகுத நினைவுடன் - நுழையும் எண்ணத்துடன். திரிமலம் - மும்மலம். கதிர் - கிரணம். நந்தா - கெடாத.

26. சிற்சுகம்—(4) துறுங்கழிநேடில் விருத்தம் :—1. அகம் - மனம். மறி - மான். சுசி - நெருப்பு. வெறி - வாசனை.

தாரவ - மாலையுடையவனே. தறி - கட்டுத்தறி. அட்டு எழும் - முறித்து எழுகின்ற. தவளக் களிறுய் - வெள்ளை யானையை உடையவனே. 2. திமிரத்திரள் - இருளின் கூட்டம். தொடு - விடுகின்ற. சுகபாரணம் - நல்ல ஆகாரம். 3. அனவா - ஒத்தவனே. வான் - உயர்ந்த. வனசம் - தாமரை. 4. குல - சிலாக்கியமான. நிலர் - உலகிலுள்ளோர். அயில் - கூரிய. 5. நினைவிற்படி - எண்ணப்படி. மயல் - மயக்கம். இடர் – துன்பம். சிற்பரை – ஞானஅம்பிகை. சனரை — மக்களை.

26. சிற்சுகம்—(5) துறுங்கழிநெடில் :—2. மூபுரம் - திரிபுரம். நகை - சிரிப்பு. துணையடி - இரண்டு திருவடி. நோன்மை - காக்கின்ற. மாபுரம் மூவகை - மூவகை சரீரம் : தூலம், சூக்குமம், காரணம். ஒளி - சோதி. மன்னுவது - சேர்வது. நார்புரிநூல் - யக்ஞோபவீதம் (பூணூல்).

26. சிற்சுகம்—(6) துறுங்கழிநெடில்:—1. சகலம், கேவலம் - நினைப்பு, மறைப்பு. தாக்கறல் - மோதுவது ஒழிய. தகு - தக்க. 2. ஒருங்குடன் பூத்தவள் - ஒரே சமயத்தில் பெற்றவள். முதல்வன் - தலைவன். வனசன் - பிரமன். வினவு- சொல்லுகின்ற. 3. அறுவகைத் தாயர் - கிருத்திகைப் பெண்கள். மாமி - இலக்குமி. விறல் - பலம். 4. மண்ணவர் - பூவுலகத்தவர். பண்ணுறு - செய்கின்ற. ஈதரும் - கொடுக்கும். விண்ணகர் - தேவவுலகம். 5. இறந்த - கடந்த. கரையறு - கரையில்லாத. கடிகை - நாழிகை. விரகன் - நுண்ணறிவுடையோன். 6. ஓதியும் - கல்வி பயின்றும். உணர்ந்தும் - அனுபவித்தும். பெரியவர் - திருவள்ளுவர். இலக்கு - குறி. கோது - குற்றம். 7. அரணி - தீக்கடைக் கோல். அம் கை - அழகிய கை. உற்பவம் - பிறப்பு.

26. சிற்சுகம்—(7) துறுங்கழிநெடில் :—1. அருட்குழை - அருளாகிய தளிர். ஆடகம் - பொன். உரிஞ்சி - உராய்ந்து.

தெருள் - தெளிவை. கோட்டு - கொம்புடைய. கற்பகத் திளவல் - விநாயகரது தம்பி. மருள்திரை - மயக்கமாகிய அலை. உருள் - சக்கரம். தெருப்புனை - தெருக்கள் அலங் கரிக்கப்பட்ட. 2. குயின்ற - பதித்த. பருப்பதம் - மலை. நகை - விளக்கமுடைய. இவர்ந்து - ஏறி. கடவுளர் - தேவர். 3. புரி - செய்கின்ற. வெல்லும் - வெற்றிகொள் ளும். வீட்டிய - அழித்த. ஒல்லைவாம் - விரைவில் தாவு கின்ற. தகரப்பரி - ஆட்டு வாகனம். 8. அத்தனே - மூத் தோனே. அறன் - தருமம். நீபத்தொடை - கடப்ப மலர் மாலை. உறுதாய் - உற்றதாய். முத்தர் - சீவன்முத்தன். 9. தருசுகம் - சுகந்தரும். படிவார் — மூழ்கியிருப்பார்கள். உன்னத - உயர்ந்த. சிகரி - கோபுரம். மன்னிய - தங்கிய.

26. சிற்சுகம்—(14) சந்தக்கழிநெடில் விருத்தம் :— 1. பெரு நறவு - பெருந்தேனாகிய மதநீர். காரணமலை - (மூல) காரணமாகிய மலை (விநாயகர்) போன்ற. முரண் - பலம். 2. செந்துகிர் - சிவந்த பவளம்போன்ற ஆடை. பூரணி - பார்வதி. அவம் - பயனற்றது. கலை - வஸ்திரம் (ஆடை). 3. களவிற் கனி - களாப்பழம். களம் உற - கழுத்தில் பொருந்த. இறை- சிவபெருமான். கனக கிங்கிணி - பொன்னாலாகிய சதங்கை. நரல் - ஒலிக்கின்ற. விளவு - விளாமரம். விமலன்-திருமால். சுளகு - முறம். துகள்அற - குற்றம் நீங்க. உளமற - மனமும் நீங்க. தவளம் - முல்லை. கொந்தளம் - கூந்தலுடைய. வன மயில் - வள்ளிநாயகி. 4. கிரோததி-பாற்கடல். துயில்பவன் - திருமால்.

26. சிற்சுகம்—(15) கட்டளைக் கலித்துறை :— 1. மருள்- மயக்கத்தை. மதமா - யானை. தெருள் - தெளிவு. செழு மறையின் பொருள் - வேதத்தின் உட்பொருள். 2. கந்திக் களத்து உமை — பாக்குப் பாளை போன்ற கழுத்தையுடைய பார்வதி. புந்தி - அறிவினிடத்தே. 7. கவன - வேகத்தை.

எவன மதிக்கும் - எந்தவகையாலும் புகழும். உன - நினைக்க. முப்பால் புவனம் - (மேல், கீழ், நடு) ஆகியவை மூவகை உலகம்.

26. சிற்சுகம்—(16) நேரிசை வெண்பா :—1. முகங்கள் - முன்னிடங்கள். களிற்றிற்கு - விநாயகர்க்கு. இலைமுகம்-இலையி னுருவம். 4. அபினசத்தி - வேறுபடாத சத்தி. உன்னும் - நினைக்கும். பினசக்தி - வேறுபட்ட சத்தி. அதனில் - அந்த பின்ன சத்தியில். உலகுண்டு - உலகம் தோன்றியது. அதனை - அவ்வுலகை. உளம் - மனம். 10. தாபத்திரயம் - மூவகைத் துன்பம்: தெய்வீகம், ஆன்மீகம், பௌதிகம்.

27. அடைக்கலப்பத்து :—வேயேஅன - மூங்கிலை ஒத்த. நளினம் - தாமரை. ஆயே - தாயே. 6. காரின் - மேகம் போல. கூரும் - மிகுந்த. 8. தாதாய் - தகப்பனே. உயும் - உய்யும். நெறி - வழி.

27. அடைக்கலப் பந்து— (2) விருந்தக் கலித்துறை :— 1. பேறு - இலாபம். நீறு - திருநீறு. நீதன் - நீதியை உடையவன். தேறிலகும் - தேற்றாங்கொட்டை தங்கிய. 4. அறிவின்பம் - ஞான இன்பத்தை. எளிமேவும் - சுலபமாக (வந்து) அடையும். நரந்தம் - நாரத்தை மரமும். நீப சுகந்தன்-கடப்ப மலர் வாசனை விரும்பியவன். குயில்மா - குயில்கள் தங்கிய மாமரம். ஆலுறு - சப்திக்கின்ற. 5. சீலம் - நடையை. காரின்- மேகத்தைப்போல. இயங்கும் - திரியும். மேதியன் - எமன். சூர் - சூரனை. அடு – கொன்ற. துங்கன் - உயர்ந்தோன். நாரி இடன் - சிவபிரான். நாகம் - புன்னை மரங்கள். ஆரம்- முத்துப்போன்று. அரும்பும்-அரும்பை வெளியிடும். 7. பம்பும்- பெருகும். நுவல் - சொல்லுகின்ற. காய் - வருத்துகின்ற. புயங்கம் - பாம்பு. 8. புங்கம் - உயர்ந்த. மாடு - பொன். நீடுற - அதிகரிக்க. மதியோர்காள் - புத்தியுடையவர்களே. கொண்கன் - புருடன். 9. துரங்கம் - குதிரை. கலிங்கம் -

வஸ்திரம். மா - பெரிய. நாகபடங்கள் - ஆதிசேடன் படத்தால் தாங்கப்படுகின்ற. மாநிலம் - உலகம். நசையீர்காள் - விரும்பியவர்களே. ஏகமெனும்சொல் - பிரணவம். ஆகமம் விஞ்சம் - சாத்திரம் மிகுந்துள்ள. 10. ஓஅற - நீங்காத. ஓதுற - சொல்ல. தீவயின் அங்கம் - நெருப்பிலேயிட்ட உடலை. பாவையின் அங்கம் - பதுமைபோன்ற பெண் உடலாக. ஆ இறை - பசுவின்மீது ஏறும் தலைவன் (சிவபிரான்).

28. விடுபாட்டுகள்—கட்டளைக் கலித்துறை :— அகில் ஆவி - அகிற்புகை. இகலி - பகைத்து. புழுகறல் ஆடி - கருமணல் போல் விளங்கி. நணும் - பொருந்திய. குழலார் - கூந்தலையுடைய பெண்கள். தகிலேயெனாது - தக்கதென்று எண்ணாது. தாழ்ந்து - வணங்கி. இறைஞ்சு - துதிப்பாய். நேரிசை வெண்பா :— 4. வன் - கொடிய. பாசம் - கயிறு. ஓதில் - சொல்லுமிடத்து. விரகில்லை - உபாயமில்லை. 8. ஈராற்று - இரண்டு நதிகள் (காவேரி - கொள்ளிடம்). நாப்பண் - மத்தியில். இருந்தான் - பள்ளிகொண்ட திருமால். ஓர் ஆற்று - ஒப்பற்ற கங்கையை. ஈர் ஆற்றுகையற்கு - இரண்டு வழிகளையுடைய துதிக்கையுள்ள விநாயகர்க்கு. கிளையாது (அங்குமிங்கும்) ஓடாது. உறு - பொருந்தியிரு. 10. ஓம் ஆகும் - ஓம் என்ற பிரணவமாகும். சீர்த்த - சிறப்பினையுடைய. தேர்ந்த - தெளிந்த. மருப்போதன் - வாசனையுள்ள தாமரையில் வீற்றிருக்கும் பிரமன். கைப்படார் - கையில்பட்டுப் பிறவியுறார்.

---

# மதுரை மீனாட்சியம்மை கலிவெண்பா

[சென்னை, பச்சையப்பன் கல்லூரிப் பள்ளித் தலைமைத் தமிழ் ஆசிரியர்-வித்துவான் - அம்பை, இரா. சங்கரனார் எழுதியது.]

காப்பு :— அயன் - பிரமன். மால் - விஷ்ணு. இடம் - இடப்பாகம். கயல் - கயல் எனும் ஒருவகை மீன். கயம் - யானை. கோமான் - தலைவன். உகந்து - விரும்பி.

கலிவெண்பா :— கண்ணி :—1. சீர் - அழகு; சிறப்பு, தெள்ளமுதே, சேயிழையே என்பன அம்மையை விளிக்கும் விளிகள். கார் - கருமை. 2. ஆதி - முதன்மை வாய்ந்த. பராபரை - சிவசத்தி. 3. அண்டர் - தேவர். அணங்கு - தெய்வமகள். திரை-அலைகளோடு கூடிய கடல். 4. மாறாமல் - இடைவிடாமல். சிந்தை - மனம். அந்தம் - முடிவு. 5. மாயோன் - விஷ்ணு. இளையவல்லி - தங்கையான வல்லிக் கொடி போன்றவள். மயிலோன் - முருகன். சங்கரி-நன்மை செய்பவள். 6. பொன் அம் கிரி - பொன்போன்று பிரகாசிக்கும் மலை. 7. அட்டம் - எட்டு. குலம் - கூட்டம். வெற்பு - மலை. அமர்ந்தவள் - விரும்பியவள். எட்டெட்டும் - அறுபத்துநான்கு கலைகளுமாய். முட்ட - நிறைந்து. 8. 'அ' எழுத்தாய் - எழுத்துக்களுக்கெல்லாம் 'அ' முதல்போல உயிர்களுக்கெல்லாம் முதன்மையைப் பெற்று. 'உ' எழுத்தாய் - 'உ' என்கிற சக்தி எழுத்தாகி. 'அ'வைச் சிவ எழுத்தென்றும் 'உ' வைச் சத்தி எழுத்தென்றும் கூறல் மரபு. நின்ற - நிலைபெற்று. எவ்வெழுத்தும் - எல்லா மொழிகளிலுள்ள எல்லா எழுத்துக்களும். 9. தற்பரை - தானாய்த் தோன்றிய தலைவி. (சுயம்பு.) ஊண் - உடல். கோன் - தலைவன். 10. படி - பூமி. மால் - திருமால். பார் - உலகம். ஈடேற்றும் - வாழ்விக்கும். முடிவு - அழிவு. 11. ஓங்காரம் - ஓம் என்னும் பிரணவ மந்திரம். நவகோணச் சக்கரம் என்னும் இயந்திரத்தில் ரீங்காரம் என்

னும் பீஜ எழுத்தின் மந்திரப் பொருளாய் இருப்பவள் உமை. "ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே" (அபி ராமி அந்தாதி 19.) பாங்கு - பகுதி. 12. முக்கோண இயந் திரத்தில் உள்ள மந்திரத்தில் இருப்பவள் உமாதேவி. மூவி ரண்டு - ஆறு. ஆறுகோண இயந்திரத்தில் உள்ள மந்திரத்தில் இருக்கும் மீனாட்சியம்மை. 13. எண்ணிரண்டு - பதினாறு. கோடு - இயந்திரத்தின் எல்லைக்கோடு. இருப்பவள் - அக் கோணத்துள் பொருளாயிருப்பவள். பண் - இசை. பழம் பொருள் - பழைமையான அர்த்தமயமாயிருப்பவள். 14. மேற்பட்டு - மேலாக. ஊடுருவி - கழித்துச் சென்ற. நாற் பத்து மூன்று கோணங்கள் அமைந்த இயந்திரத்தின் தலைவி மீனாட்சியம்மையார். 15. பஞ்சகோணம் - ஐந்துகோண இயந் திரத்துள். 16. மறைச்சொல் - வேத மந்திரம். சுவை - ஒன்பது வகையான மெய்ப்பாடு. அறுசுவை - ஆறுவகையான உணவுச் சுவைகள். 17. தலை - முதல். எண் இல்-கணக்கற்ற. உறும் பொருள் - பொருந்தும் உடல். பயன் - ஆற்றல். 18. ஆறாறு தத்துவமாய் - முப்பத்தாறு தத்துவங்களாய். ஐயிரண்டு - பத்து. கூறு - அவ்வாயுப் பகுதி. திசைபத்து - நான்கு நேர்திசை, நான்கு கோணதிசை, மேல், கீழ்த்திசைகள் இரண்டு ஆகப் பத்து திசைகளாம். கூட்டம் - தொகுதி. பேறு - சிறந்தபயன். 19. அஞ்செழுத்து - பஞ்சாக்கரம் என்னும் மந்திரம். எட்டெழுத்து - "ஓம் நமோ நாராயணாய" என்னும் எட்டெழுத்து மந்திரம். ஐம்பத்தோர் அக்கரமாய் - ஐம்பத்தொரு எழுத்து வடிவாகி யிருப்பவள். பஞ்சவர்ணம - ஐந்து நிறங்கள். பஞ்ச தேவதை - ஐந்து சத்திகள். வஞ்சம்- கபடம். 20. ஆறாதாரம் - ஆறுசிறந்த இடங்கள். ஐயைந்தாய்- 25 தத்துவங்களாய். ஐம்மூன்று - ஐந்தும் மூன்றும் எட்டா மென்க. இது அட்ட மூர்த்தியைக் குறிக்கும். வீறு - மிகு பலம். சக்கரம் - யந்திரம். மின் - பிரகாசம். 21. கருவி- ஐம்புலன்கள். கரணம் - பூதங்கள். ஆதி - முதலிய பிற தத்துவங்கள். கைகலந்து - கூடி. பிரிவாய் - சுத்தம், அசுத்

தம், பிரகிருதி எனப் பிரிவுபட்டு. 22. சோத்திரம் - செவி. தொக்கு - உடம்பு. நேத்திரம் - புறக்கண். நாத்தலன் - நாவாகிய இடம். 23. இரதம் - சுவை. கந்தம் - வாசனை. மத்த - இன்பம். பிரமத்த - வீரம்பொருந்திய. வயிரவி - அச்சந் தருபவள். 24. துரியமதாய் - சாக்கிரம், சொப்பனம், சுழுத்திக்குமேலான துரிய நிலையிலுள்ளவளாய். துரியாதீதம் - அந்நான்குக்கு மேற்பட்ட துரியாதீதநிலை. சிலம்பொலி - காற்சிலம்பிலிருந்து எழும் ஓசை. 25. இரந்து-பிச்சையேற்று. பவுரி - பவுரி என்னும் ஒருவகைக் கூத்து. தொந்தம் - இருவரும் கலந்து, பார்ப்பதி - பார்வதி. 26. களங்கம்-குற்றம். புருவம் தன்னில் - புருவங்களுக்கிடையில். பளிங்கு-நிறமற்ற கண்ணாடி. பரம் - பராசக்தி. 27. கருணை - இரக்கம். வடிவு - அழகிய பெண். புண்ணியம் - புண்ணியப் பொருள். பூவை - நாகணவாய்ப் பறவை போன்றவள். பண் - செம்மை. 28. நடு - நடுவிடம். தீபம் - சுடர். உள்பொருள் - உள் இருக்கும் சக்தி. 29. அஞ்சுமுகம் - ஈசானம் முதலிய ஐந்து முகங்கள். அகண்ட - பிரிவின்றி. பரிபூரணம்-முழுநிறைவு. பைங்கிளி - பசுமையான கிளி போன்ற உமையம்மையார். கஞ்சமலர் - தாமரைப்பூ. 30. பச்சை நிறம் - மரகதம்போன்ற பச்சை நிறம். ஆதி முதல் - தனி முதன்மை. அம்பரமே - வானவெளி உருவாய் நின்ற தாயே. 31. நிட்களம் - குற்றமற்ற தன்மை. வெளி - சிதாகாசம். உத்தமி - சிறந்த இலக்கணமுடையவள். பத்தி - வரிசை. 32. ஒளி - சுடர். அந்தரம் - ஞானாகாசம். ரூபம் - வடிவு. மேகம் - மழை. விளைபொருள் - உண்டாகும் உயிர்ச்சத்து. வாகு - அழகு. 33. இடை - இடைகலை. பிங்கலை - பிங்கலையாய். கடை - இறுதியானது. சுழிமுனை - சுழிமுனை என்னும் நாடியாய். கால் - காற்று. மடல் - இதழ்கள். அவிழ்ந்த - மலர்ந்த. 34. மூலாதாரம் - ஆறாதாரங்களின் அடிப்படை. மும்மண்டலம் - சூரிய, சந்திர, அக்கினி எனும் மூன்று மண்டலங்கள். கடந்து - சென்று. மேல் ஆதாரம் - உச்சியிடத்துக்கும்

மேல்நிலை. வெண் மதி - வெள்ளைநிறச் சந்திரன். ஊறல் - சுரக்கும் அமுதம். 35. உத்தமி - சிறந்த தாயே. தவம் - தவ ஆற்றல் படைத்தவள். பழம்பொருள் - பழமையான உண்மைப்பொருளா யிருப்பவள். எண் - நினைத்தல். அரிய- முடியாத. 36. மெய்ஞ்ஞானம்-உண்மையறிவு. அஞ்ஞானம்- அறியாமை. பைந்நாகம் - படத்தைப்பெற்ற பாம்பு. 37. இடம் - இடப்பாகம். பாங்கு - முறை. தாண்டவம் - ஒரு வகைக் கூத்து. பவுரி - ஒருவகை வட்டமாக ஆடும் கூத்து. ஒத்தி - போட்டு. ஆண்டி - பிச்சாண்டி. 38. கூத்தாடிச்சி - கூத்தாடியின் பெண்பால். அம்மனை - எழாங்காய். பந் தாடிச்சி - பந்தாட்டக்காரி. மால் - திருமால். 39. வினை - நல்வினை தீவினைகள். அஞ்சல் - பயப்படாதே. தோற்றுதல் - தரிசனம் தருதல். துடி - உடுக்கை. இடைச்சி- இடுப்பை உடையவள். எத்து - துதித்தல். 40. நிறத்தி - நிறமுடையவள். கச்சு - இரவிக்கை. பொரு-முட்டுகின்ற. முலைச்சி - தனத்தையுடையவள். வளைச்சி - வளையல்களை யணிந்தவள். கொச்சை - மழலைப் பேச்சு. 41. மலையரையன்- பர்வதராசன். மலைச்சி - குறிஞ்சிநிலப் பெண். கலைச்சி - பல கலைகளையு மறிந்தவள், சிறந்த ஆடைகளையணிந்தவள், மேகலையென்னும் ஒட்டியாணத்தையணிந்தவள். (மேகலையென்னும் பொருள் தரின் கலைச்சி என்பது முதற்குறைந்து வந்தது எனக் கொள்க.) நிலை - உண்மைத் தன்மை. நிலைச்சி - நிலை பெற்றுள்ளவள். அலையாத - அசையாத. 42. நடைச்சி - நடையை உடையவள். மறைச்சி - வேதங்களால் புகழ்ந்து கூறப்படுபவள், வேதங்களில் மறைந்து காணப்பெறும் உட் பொருளாயுள்ளவள். ஆண்டிச்சி - எல்லாவற்றையும் ஆளும் தகுதிபெற்றவள். கன்னல் - கரும்பு. மொழிச்சி - இனிய சொற்களையுடையவள். கருணைச்சி - உயிர்கள் மாட்டு இரக்க முடையவள். பன்னுதமிழ் - செம்மைச்சொல் வாய்ந்த தமிழ். 43. வாய்ச்சி - இன்சொல்லுடையாள். சடைச்சி - சடையை யுடையவள். வடிவு - அழகு. மங்கைச்சி - இளம்பெண்.

பேய்ச்சி - பேய்களால் சூழப்பெற்றவள், அச்சந்தரத்தக்கவள். இளமுலைச்சி - பிறரால் உண்ணப் பெறாத இளமையான தனத்தையுடையவள். பேதைச்சி - ஒன்றும் அறியாப் பருவத்தையுடையவள். 44. மொழிச்சி - சொற்களையுடையவள். (வெண்ணெய்போன்று உருக்கம் வாய்ந்தது). வெளிச்சி - வெட்டவெளியை யிடமாக உடையவள், வஞ்சகமற்ற தன்மையுடையவள். வெளி இடைச்சி - வெட்டவெளியின் நடுவே தோன்றாது இருப்பவள். அண்ணுபுரம் - நெருங்கிய முப்புரம். படைச்சி-நகையாம் போர்க் கருவியையுடையவள். நண்ணில்-அடையமுடியாத. அரும் - விலையுயர்ந்த. 45. கொப்பு - மேல்காதில் அணியும் கொப்பு என்னும் அணி. குழைச்சி - கீழ்க்காதில் அணியும் குழை என்னும் அணியையுடையவள். பொரு - போன்ற; வென்ற. விழிச்சி - கண்ணையுடையவள். அப்பு - கங்கைநீர். சிவாகமச்சி - சைவ ஆகமத்தின் தலைவி. மெய்ப்பு ஆம் - உண்மை ஆகிய. 46. கருப்பு - கரும்பாகிய. சிலைச்சி - வில்லையுடையவள். கலைச்சி - எல்லாக் கலைகளுக்கும் தலைவி. வலைச்சி - செம்படவர் குலத்தில் பிறந்த உமையம்மை. (இறைவன் வலை வீசியதால் உமையம்மை வலைச்சியாயினள்.) மருப்பு - யானைக் கொம்பு. மவுனத்தி-மோன நிலையில் இருக்கும் பரமேசுவரி. பொருப்பு - இமயமலை. 47. தாமம் - மாலை. சமர்த்தி - சாமர்த்தியமானவள். தருமத்தி-அறம் வளர்த்த தலைவி. நாமம் - புகழ்வாய்ந்த. சிவபுரத்தி-மதுரையைத் தன்னிருப்பிடமாக உடையவள். நாரணத்தி-நாராயணன் தங்கையாகிய வைஷ்ணவி. தே - தெய்வீகத் தன்மை. 48. காரணத்தி - எல்லாவற்றிற்கும் மூலகாரணமாயுள்ள தாய். கணத்தி - கூட்டமாக உடையவள். வாரணத்தி-பெண் யானைபோன்ற நடையையுடையவள். மாரணத்தி - எல்லாவற்றிற்கும் இறுதி தரவல்ல பிராட்டி. ஆரணத்தி எனவும் பிரித்து வேதங்களுக்குத் தலைவியானவளே எனவும் பொருள் கொள்ளலாம். பூரணத்தி - எங்கும் நிறைந்தவள். 49. பரிபுரத்தி - பரிபுரம் என்ற சிலம்பினை அணிந்த

வள். பங்கயத்தி - அடியார்கள் இருதய கமலத்தில் வீற்றிருப்பவள். செங்கரத்தி-செம்மைவாய்ந்த கைத்தலங்களையுடையவள். சொப்பனத்தி - கனவிலும் வந்து அருள் சுரப்பவள். பாதிமதி - பிறைச்சந்திரன். 50. தூய்ய - தூய்மையான. காரணி - உலக மூலகாரணமாய தலைவி. 51. சேணிச்சி - நினையாதார்க்குத் தூரத்திலிருப்பவள், ஆடை நெய்யும் குலத்தில் பிறந்தவள், சொர்க்கத்தை விரும்பும் அடியார்க்குக் கொடுக்க ஆயத்தமாயிருப்பவள். ஊணிச்சி - உணவை விரும்பியவள். ஊணிச்சி - உண்டவள். பாணிச்சி - செங்கரங்களையுடையவள்; பாணர் குடியில் பிறந்தவள் (விறகு விற்ற படலத்தில் பெருமான் பாணனாய் வந்ததால் தலைவி பாணிச்சியாயினள்). 52. பாசம் - பாசக்கயிறு. அங்குசம்-அங்குசம் என்னும் ஈட்டியையும் கையிலுடையவள். பரத்தி-மேலான பிராட்டி, பரதர்-குலத்தில்பிறந்த பெண்ணே. பருப்பதத்தி - மலைநாட்டில் பிறந்தவளே, மேலான பதத்தைத் தரவல்ல தலைவியே. காசாம்பூ - நீலோற்பல மலர். 53. அம்பரத்தி - குற்றமற்ற சேலையை உடுத்தியவள், ஆகாயத்தை உருவாகயுடையவள். ஐம்புலத்தி - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலங்களின் ஆதாரமாயிருப்பவள்; குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐவகை நிலங்களுக்கும் உரிய தலைவி. ஒரு - ஒப்பற்ற. உம்பர் - தேவர். உத்தமத்தி - மேலான இலக்கணங்களையுடைய செல்வி. 54. செட்டிச்சி - செட்டிகுலப் பெண். ஒட்டச்சி - மண்வேலை செய்பவள். பூதி - திருநீறு. உத்தளத்தி - உடல் முழுவதும் பூசியிருப்பவள். 55. மின் - மின்னல்போல பிரகாசிக்கும் இயல்பினள். விளக்கு - அஞ்ஞான இருளைப் போக்கும் பிரகாசம் போன்றவள். சிவரத்தினம் - ஐந்தலை நாகத்தின் மணி போன்ற. பொன் - அழகிய இலக்ஷ்மி. 56. பணி - ஆபரணங்கள் அணிந்தவள். ஆணிக்கனகம் - உரையாணியாம் பொன். மாண் - சிறப்பு. 57. சிங்காரம் - அலங்காரம். சிலை - மலை. கங்காளர் - -என்பு மாலை யணிந்த சிவபிரான். மங்காத -

ஒளி குறையாத. 58. கொழுந்து - இளந்தளிர் போன்றவள். திரு - தெய்வத்தன்மை நிறைந்தவள். ஐவர் - பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய ஐந்து கடவுளர். தாய் - ஆதி சக்தி. மெய்யர் - உண்மை அடியார்கள். 59. சிவானந்தி - சிவானுபவம் பெற்றருளிரும் பிராட்டி. மூர்த்தி - தலைவி. 60. தாயகம் - பிறப்பிடம். தாவரம் - நிலைபொருள். சங்கமம் - இயங்குபொருள். சுடர் மூன்று - தீபச்சுடர்கள் மூன்று. (சந்திர, சூரிய, அக்கினி). சூக்குமம் - நுண்ணிய பொருள். வேய் - மூங்கில். 61. நித்திலம் - முத்து. நின்மலம் - குற்றமற்றவள். பரிபூரணி - எங்கும் நிறைந்தவள். அத்தர் - தலைவர். 62. வாதாடும் - வாதிக்கும், தர்க்கம் செய்யும். மந்த்ர ரூபி - மந்திரங்களையே வடிவாகக் கொண்டவள். வேதாந்தி - வேத முடிவிலுள்ளவள். நாதாந்த - நாத தத்துவத்தின் முடிவிடமாய. 63. மாயேஸ்வரி - பெரிய நாயகி. 64. ரசம் - சுவை. முழுத்த-நிறைந்த. பரானந்தம்-சிவானந்தம். முதல் - அடிப்படை. எழுத்து முதல் - முதல் எழுத்தாய அகரம் போன்றவள். 65. அவ்வவர் - அந்தந்த மதத்தினர். வெவ்வேறு - வேறுபட்ட தெய்வங்கள். வேறு-ஏனைய. விகற்பம் - மாறுபட்ட புன் சிறு தெய்வங்கள். 66. திங்கள் - சந்திரன். நுதல் - நெற்றி. 67. அஞ்சுகம்-அழகிய சிறந்த கிளி. அணங்கு - தெய்வப்பெண். கிஞ்சுகம்-கோவைக் கனி போன்ற சிவந்த வாயையுடையவள். பிஞ்சுமதி-பிறைச் சந்திரன். கொஞ்சு - பிரியமாகப் பாடவல்ல. 68. கன்னி - என்றும் இளமையுள்ளவள். திரிசூலி - முத்தலைச் சூலமுடையவள். கபாலி - மண்டையோட்டினைக் கையில் ஏந்தியவள். மன்னு - நிலைபெற்ற. மகமாயி - சிறந்த மாயங்களில் வல்லவள். 69. தாளி - கால்களை யுடையவள். சதுரி - சாமர்த்தியம் வாய்ந்தவள். பகவதி - சிறந்த பிராட்டி. சங்காளி - எலும்பு மாலை யணிந்தவள். தூளியா - தூளாகும்படி. 70. தத்துவத்தி - தத்துவங்களின் முடிவிடமாக வுடையவள். தற்பரத்தி - தானாகத்தோன்றிய மேன்மை பொருந்திய

தனக்கு ஒப்பில்லாதவள். ஈர்ந்த – அகப்படுத்திய. 71. பார சத்தி - மேலான ஆற்றல் பொருந்தியவள். தாரணி - பூமி. 72. கார் – மேகம். குந்தளத்தி - கருமையான கூந்தலை யுடையவள். சண்டை காரிச்சி – எதிர்த்துப் போரிடும் காம ரூபம் பொருந்தியவள். சகளத்தி - எல்லா உருவமும் பெற் றவன். சகலத்தி - எல்லாத் தன்மைகளையும் தன்னிடம் இயல்பாய்ப் பெற்றவள். துண்ட மதி - பிறைச் சந்திரன். 73. கஞ்சுளிச்சி - சட்டை அணிந்தவள். கங்கணத்தி – நாக மாகிய காப்பை அணிந்தவள். பஞ்ச சத்தி - ஐந்து சக்தி களாகவும் உள்ளவள். கொந்தளத்தி - சிறந்த குழலையுடைய வள். பைம்பணத்தி – பசுமையான பாம்பின் படம் போன்ற அல்குலையுடையவள். அஞ்சனத்தி – மை பூசப்பெற்ற கண்ணை யுடையவள். 74. முத்துவடம் - முத்துமாலை. கொங்கை – தனம். நகைச்சி - சிரிப்பினையுடையவள். பத்தர் - அடியார் கள். நெஞ்சகத்தி - மனத்திலிருப்பவள். பார் இடத்தி-பூமியை இருப்பிடமாக வுடையவள். 75. அக்குவடம் - சங்குமாலை. வளர்த்தி – வளர்த்தவள். செக்கர் - சிவந்த. பிறைச்சி - சந்திரனைத் தரித்தவள். 76. ஓலை - காதணி. குழைச்சி - குண்டலத்தையுடையவள். குண்டலச்சி - ஆகாய வழியே செல்லுந் தன்மை வாய்ந்தவள். மாலை - சிறந்த மங்கலமாலை. ஞாலம் - பூமி. 77. அக்கரத்தி – மந்திர எழுத்தே உருவ மாக உடையவள். பொக்கணத்தி - திருநீற்றுப் பையை உடையவள். அண்டம் – வானுலகம். பகிர் அண்டம் – வானுலகின் வேறான பல உலகங்கள். முக்குணத்தி - சத்துவ, ராஜஸ, தமோ குணங்களையுடையவள். நிஷ்களத்தி - உருவ மில்லாதவள்; குற்றமில்லாதவள். மோட்சத்தி – முத்தி தரு பவள். 78. ஏகாக்கரத்தி – ஓம் என்னும் பிரணவ ரூபமா யுடையவள்; நீங்காத கையையுடையவள் எனினுமாம். நாகாதி பூண்ட - நாகம், எலும்பு முதலியவற்றை ஆபரணங்களாக அணிந்த. நாதத்தி – வீரமுழக்கம் செய்பவள். வாகு – அழகு. 79. பரிமளம் - வாசனை. அணைத்தி - படுக்கையாக வுடைய

வள். கற்பாந்தரத்தி — ஊழிக்காலத்திறுதியிலுமிருப்பவள். 80. வேடிச்சி - வேடுவர் குலப் பெண். மீனவன் - சோமசுந்தர பாண்டியன். சூடிச்சி - சூட்டியவள். நாடி — தேடி. 81. வேதன் - பிரமன். பங்கயம் — விஷ்ணுவின் உந்திக்கமலம். வித்தகத்தி - மேலான தன்மையுடையவள். 82. பாடகத்தி- பாடகம் என்ற காலணி அணிந்தவள். கீதம் - இசைப்பாடல். ப்ரபந்தத்தி - நூல்களுக்குத் தலைவி. ஆடகத்தி — கால்மாறி யாடியவள். ஆதி — ஆதிசத்தியாய் அமைந்தவள். 83. மறை வித்தகி - வேத விழுப்பொருள். 84. கோமளம் - பேரழகு. யாமளை - காளி. தாமரைத் திரு - தாமரைபோன்ற முக முடைய பார்வதி. தையல் — பேரழகு வாய்ந்த பெண். 85. நின்று - நிலைபெற்று. துங்க - தூய்மையான. 86. ஓதிமம் — அன்னம்போன்ற நடையுடையவள். உண்மை வெளி - சத்து ஆகாயமாய் இருப்பவள். பரப்பிரமம்-மேலான பொருள். வித்து - அடிப்படையாயிருப்பவள். அளி-வண்டு. 87. கொந்து — கொத்துபோன்று திரண்ட. அளகம் — கூந் தல். பந்திக்குயில் — வரிசையான குயில்கள் கூவுவதுபோன்ற இனிய குரலையுடையவள். ஐந்தரு — (அரிசந்தானம், கற் பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்னும்) தேவலோகத் துள்ள சிறந்த ஐவகை மரங்கள். மூவருக்கும் - மும்மூர்த்தி களுக்கும். 88. இடர் - சிறு துன்பம். அல்லல் - பெருந் துன்பம். வினை — பிறப்புக்கு ஏதுவாய நல்வினை தீவினை. அஞ்சல் — பயப்படாதே. சவுபாக்கியம் - சிறந்த பேறுகள். வல்லபம் — ஆற்றல். 89. ஆசு — உடனே பாடப்பெறும் பாடல். மதுரம் - இன்னிசைப்பாடல். சித்திரம் - ஓவியத்தில் பொருந் தும்படிப் பாடத்தக்க பாடல். வித்தாரம் - விளக்கமாகப் பாடும் பாடல்கள். பெருவாக்கு - சிறந்த புகழ்வார்த்தைகள். 90. அகம் - மனம். புத்திமதி - பேரறிவு. சந்ததம் — எப் பொழுதும். 91. நீயே - நீ ஒருத்தியே. நின்று - நிலையாக. இரட்சி - பாதுகாப்பாயாக. சரணம் - பாதம். சரண் - அடைக்கலம்.

---

## திருக்கழுக்குன்றம்

# வேதகிரீசுரர் பதிகம்

1. அரவு - வாசுகி என்ற பாம்பு. மால் அரி - சிறந்த விஷ்ணு. சகடு - சக்கரம். இருசுடர் - சந்திர சூரியர். பரி- குதிரை. அம்புயன் - பிரமன். இகல் - பகைமை. அழியா - அழித்து. அட்டிடும் - அழித்திட முற்படும். மூவர்கள் - பரம விரதன், பரமயோகன், பரமகுணன் என்னும் மூவர் மாத்திரம், திருமால் திரிபுராதிகளை அழிக்க முற்பட்டபோது எல்லாரும் சிவபத்தியிற் பிறழவும், தாங்கள் பிறழாதிருந்தமையால் பெருமானுலருளப்பெற்றுப் பிழைத்துச் சிவகணங்களாகித் திருக்கயிலை வாயிற் காவற் பணியைப் பெற்றனர். இம்மூவர் சுசீலன், சுதன்மன், சுபுத்தி என்னும் பெயர்களைப் பின்னர்ப் பெற்றனர். தெறுவார் - அழிப்பவர். வேரி - தேன். பவரோகம் - பிறப்பாகிய பிணி. வேணி - சடை.

2. உதரம் - வயிறு. அகிலம் - உலகம். குமாரத்து - குமரப்பருவத்து. சுதர் - குழந்தைகள். இலதாம் - இன்மையாகிய. மிடி - வறுமை. சுகவேலை - இன்பக்கடல்.

3. களபப்படிரம் - கலவைச் சந்தனம். புளகம் - மயிர்க்கூச்செறிதல். இருள் - அறியாமை. முளரி நிகர்த்திடு கண்ணன் - தாமரைபோன்ற கண்ணையுடைய திருமால். முண்டகன் - தாமரையிலிருக்கும் பிரமன். விளரி - ஒரு வகைப் பண். அளி - வண்டு. முரன்று - ஒலிக்கும். வெறி- வாசனை.

4. அளி - இரக்கம். ஆகம் - உடல். உவர்ப்பு-வெறுப்பு. நின்றிடும் - நிலைபெற்றிடும். புரை - குற்றம். போதம் - அறிவு. கார் - மேகம் போன்ற கொடையாளி. சீர்-சிறப்பு ஆகக் கூறப்பெறும் பெருமான்.

5. மறை - வேதம். தருமம் ஆதிய - அறம், பொருள், இன்பம், வீடு. பின் இரண்டு - இன்பம், வீடு. (இன்பம் விடயானந்தம் வீடு போதானந்தமாகும்.) நிரதிசயம் - மிக உயர்ந்த நிலை. சரோருகம் - தாமரை.

6. மூரி - வலிமை. மீகாமன் - கப்பலோட்டி.

7. சடம் - அறிவில்லாதது. கரணம் - அந்தக்கரணங்கள். பொறி - ஐம்பொறிகள். சிறுவிடயம் - நிலையற்ற அற்பப் பொருள்கள். ஊண் - அனுபவம். உய்ப்பது-செலுத்துவது. போகம் - இன்பம். ஏகம் - ஒன்று. பரி - குதிரை. சொரூபம் - உண்மை நிலை. ஆரியன் - குரு.

8. சரம் - அசையும் பொருள். அசரம் - அசையாப் பொருள். திரோதம் - மறைப்பு; அஞ்ஞானம். கங்கம் - கழுகுகள்.

9. மின்னார் - பெண்கள்; மனைவியர். இகந்து - நீங்கி. ஆமையின் - ஆமையைப் போல. ஐந்து - ஐந்து பொறிகள். உட்கொண்டு - உள்ளடக்கி. சமாதி - மோன நிலை. இருள் - அஞ்ஞானம்.

10. வீக்குண்டோன் - யமன். கட்டு - பாசம். சடம் - அறிவற்றது. பிணிபட்டோன் - பாசத்தாற் கட்டுப்பட்டவன். அசுதந்தரன் — உரிமையில்லாதவன். ஏது - காரணம். வேள் - மன்மதன்.

---

## விருத்தாசலம்

# குமாரதேவர் நெஞ்சுவிடுதூது

காப்பு :—தஞ்சம் - அடைக்கலம். விஞ்சும் - மேலான பாழி - பெருத்த. வாரீசம் - தாமரை.

கண்ணி :— 1. பொங்கர் - சோலை. சிறந்தோன் - இந்திரன். தூ - தூய்மை. இருந்தோன் - பிரமன். மா -

இலக்குமி. 2. மார்பகத்தோன் - திருமால். காயம் - உடல். ஏர் - அழகு. 3. பை - பாம்பின் படம். உரகர் - நாகர். 4. தெருள் - தெளிவு. 5. பேர் - பெயர். நயந்து-விரும்பி. தீர்த்தன் - தூய்மையானவன். 6. மலதிமிரம் - குற்றமாகிய இருள். 7. அதிகர் - செல்வர்; மேலானவர். வன்பர்-அன்பற்றவர். மன்புக்க - நிலைபெற்ற. 9. வன்பு - வலிமை. 10. திரையாழி - அலைகளோடு கூடிய கடல். 11. மாகம் - மேலுலகம். பிரபஞ்சம் - உலகம். சுரர்-தேவர். 12. ஏமாக்க-ஏமாந்துபோக. கோமா - மிகப்பெரிய. 14. அகந்தை - கர்வம். பிறங்காது - விளங்காது. பரமஒளி - சிறந்த சோதி. 15. குலவு - விளங்குகின்ற. முதுகிரி - விருத்தாசலம். 16. மறிந்து - எதிர்த்தும் ஆற்ருது. 17. உந்தி - அரித்து எடுத்து. சிகி - நெருப்பு. 18. முடைகெழுமு - தீ நாற்றம் மிகுந்த. முல்லை - முல்லைப்பூ. ஒல்லை - விரைவாக. 19. மருதம் - வயலும் வயல்சார்ந்த இடமும். புடைகள் - பக்கங்கள். 21. படவு - படகு. நிலவலையம் - பூமியின் பரப்பு. 24. நாட்டும் - வைக்கும்; சாதனமாயிருக்கும். 25. கடம்-உடல். அதிட்டானம் - நிலைக்களம். 27. வத்திக்க - வந்திக்க என்பதன் விகாரம். 28. ஏர் - அழகு. 29. உக்காத - அழியாத. 30. தானம் - மதநீர். 32. தெருண்ட-தெளிந்த. 33. சாலம்-கூட்டம். 39. வேள் - மன்மதன். 41. சம்பத்து-செல்வம். 42. கள்ளம் - வஞ்சனை. 43. தோம் - குற்றம். 45. கூறை - துணி. விருது - கொடி. செக்கர் - சிவந்த. 46. தாவிலா-அழிவில்லாத. 47. எச்சம் - குறைவு. 50. மருமம்-மார்பு. துரிசு - குற்றம். 53. சத் - உண்மை. சித் - அறிவு. 54. ஏயுற்ற - பொருந்திய. 55. மறி - ஆடு. 59. பழுதை-கயிறு. 61. எனை - எவ்வாறு. 64. நானாவாய் - பலவிதமாய். 70. கவற்றும் - கவலைதரும். 73. லீலை - விளையாட்டு. 74. மன்னு-நிலையற்ற. 75. கனதை - சிறப்பு. 81. மதுரம் - இனிமை. சதுரங்கம் – நால்வகைச் சேனை உறுப்புக்கள். 84. செயிர்-குற்றம். 85. மொக்குள் - நீர்க்குமிழி. 92. ஆனு-நீங்காத,

குறையாத. 93. ஏது - காரணம். 97. சூர் - பயம். 98. மிடி - வறுமை. 106. ஆலவட்டம் - விசிறி. 107. இந்து - சந்திரன். 112. க்ஷீரோததி - பாற்கடல். 114. திமிரதிவாகரன் - இருளைப் போக்கும் சூரியன். 115. வந்திகர் — புகழ் பாடுவோர். 116. போதகம் - யானை. 124. நள்ள - சேர. 125. தென் - அழகு. 127. வாகு - தோள். 128. அஞ்சம்-அன்னம். 129. பானு - சூரியன். 135. மின் - மின்னல். 138. ஆனி-கேடு. 140. மால்-மயக்கம். 145. சூது-வஞ்சகம். 147. ஆரணம் - வேதம். 155. மௌவல் - முல்லை. 157. கமை - பொறுமை; அழகு. 159. மத்தமா - யானை. 160. பங்கம் - சேறு. 164. உடு - நட்சத்திரம். 167. உபயபாரிசம் - இருபக்கம். திவள்-விளங்குகின்ற. 172. பதியா-விளங்கி. 175. தீர்த்தனே - தூய்மையானவனே. 177. அவித்தை - அஞ்ஞானம். 178. பவ்வம் - கடல். 181. ஆத்தன்-தலைவன். 185. இல் - வீடு.

அவ்வியம் - பொறாமை. செஞ்சவே - மேன்மைபெற.

---

## விருத்தாசலம்
# குமாரதேவர் பதிகம்

1. பாலம் - மழு. கடுக்கை - கொன்றை. பனிப்பு - தளர்ச்சி; வருந்துதல். பிரமசாகரம் - பிரமானந்தக்கடல்.

2. எண்ணிடை - நினைக்குமிடத்து. குமுற - ஒலிக்க.

3. வீக்கும் - கட்டும். திடர் - மேடு.

4. ஆம்பல் - அல்லிமலர். கொட்புறல் - சுற்றித்திரிதல். கலினம் - கடிவாளம். சிலுகு - கூச்சல். தொடக்கு-குற்றம்.

5. கந்து - கட்டுத்தறி. கனகமந்தரம் - மேருமலை. கடுக்கும் - ஒத்திருக்கும். கலம் - கப்பல். இவர்வித்து - ஏற்றி.

6. காமியம் - காமம். வடவை-வடவைத்தீ. இயல்பு - தன்மை. குரு - நிறம் அமைந்த.

7. மேதை - சிறப்பு. இலவணநீர் - உப்புநீர். அலவு - கெடு. இனன் - சூரியன்.

8. கமடம் - ஆமை. (ஆமை நினைத்தால் கரு உயிர்ப்பது; மீன் நோக்கால் கரு உயிர்ப்பது; கோழி தொட்டால் கருவுயிர்ப்பது.) பரிசம் - தொடுதல். சரோருகம் - தாமரை. கறிக்க-கடிக்க. கொங்கு-தேன். உயிர்-வெளிவிடும். பண்ணை-வயல்.

9. மத்தியம் - நடு. குரம்-குளம்பு. இலஞ்சி-பொய்கை.

10. சுரபி - பசு. கன்னல் - கரும்பு. தோம் - குற்றம். பூகம் - கமுகு. துருமம் - கூட்டம்.



## பஞ்சதிகார விளக்கம்

பாயிரம் :— கடு - விஷம். களம் - கழுத்து. வளை - சங்கு. உத்தரியம் - மேல்வேட்டி. முகபடாம் - முகத்தில் மூடும் துணி. புகர் - புள்ளி. பரை - உமாதேவி. உகலரும் - சிந்தாத.

1. ஆசான் - குரு. தநு - உடல்.

2. தேசு - ஒளி. நிட்களம்-உருவமற்ற சிவபிரான் நிலை. சகளம் - உருவமுள்ள பெருமான் தோற்றம்.

3. நசை - ஆசை. அவம் - வீண். போகம் - இன்பம்.

4. துரகம் - குதிரை. பூரணவாரி - நிறைகடல். நீபம் - கடப்பம்பூ. நூபுரம் - சிலம்பு.

5. தீவகம் - விளக்கு; ஞானம். திரிமலம் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள். நந்து - சங்கு.

6. மன்னறிவு - நிலைபெற்ற அறிவு. பரவுரவோர் - மேலான பெரியோர்கள்.

7. நிருமலன் - குற்றமற்றவனாகிய கடவுள். அவப்பயன் - வீண் பயன்.

8. மலரகிதன் - பாசமற்றவன். நேர்தர - பெற.

9. துகள் - குற்றம். திட்டாந்தம் - சான்று.

10. மருளன் - மயக்கமுற்றோன். ஆவாரகம் — மறைப்பு. மாதொழில் - சிறந்த தொழில்.

11. பக்க பாதமிலி - ஒருசார்பற்றவன்.

12. திரோபாவம் - மறைப்பு. நந்தும் - மிக்க.

13. ஓவறு - இடைவிடாது. கறங்கு - காற்றாடி.

14. சடுரசம் - அறுவகைச்சுவை. வனிதை-பெண். கீதம்-இசை.

15. திதி - காத்தல். ருசிப்பித்தல் -விருப்பூட்டல்.

16. விரகு - உபாயம். தவ்வலரும் - கெடுதல் இல்லாத. பேதம் - வேறுபாடு. ஒவ்வலுறாது - ஒற்றுமையில்லாத.

17. அந்தரம்-ஆகாயம். கொட்புறுதல்-திரிதல். கந்தரம்-மேகம். செறியாமை - நெருங்காமை.

18. திங்கள் - மாதந்தோறும். கடம் - குடம்.

19. தீனம் இல் - குறையில்லாத. பங்கர் - கேடுற்றோர்.

20. தென் - இனிமை; அழகு. சிகண்டி - அலி.

21. பரிந்து - ஆசையோடு.

22. கம்மியன் - பொன் செய் கொல்லன். கைக்கோளன்-நெசவாளி. தேகஆரம் - உடம்புக்கு அணியும் ஆபரணமாம் மாலைகள். கடம் - பானை. படம் - துணி. இது நிரல்நிறையணி.

23. சேவிதர் - வணங்குவோர். தேன்+தார் - தேன்றார் என்பது தென்றார் எனக் குறுகல் விகாரமாயிற்று.

24. நந்துறு - நிறைந்த. நாள்காறும் - தினந்தோறும். அருத்தும் - புசிக்கச் செய்யும்.

25. சடம் - உயிரல்பொருள். சித்து - அறிவுடை உயிர்ப் பொருள்.

26. படிதரு - பொருந்திய. கடிதல் இல் - நீக்கமுடியாத.

27. படிறு - பொய். பாண்டில் - வண்டி.

28. ருசிப்பித்திடுதல் - துய்க்கச்செய்தல்.

29. காரணன் - முதற்காரணனாய இறைவன்.

30. அவத்தை - துன்பம். ஏலுறும் - பொருந்திய.

31. பஞ்சகிருத்தியம் - ஐந்தொழில்.

32. செவ்வே - சிறப்பாக. கொன்று - வருத்தி. ஏகாக்கிர சித்தம் - ஒன்றுபட்ட மனம்.

33. நியதி - முறை.

34. நின்று-நிலைபெற்று. ஒருவுதல்-நீங்குதல். ஒருவ-நீங்க.

35. இவணம் - இவ்வண்ணம் என்பதன் தொகுத்தல் விகாரம்.

36. பித்திகை - சுவர்.

38. வர்த்திக்கும் - பெருகும். நிர்வயம் - சார்பற்றது.

39. தணந்து - நீங்கி. தேசு-விளக்கம். பிறிபட-வேறுபட.

40. அயிக்கம் - ஒன்றுபடுதல்.

41. மன்னுயிர் - நிலைபெற்ற உயிர்.

42. பரிபாகம் - பக்குவம். திட்டம் - ஒழுங்கு.

43. சுகாதீதம் - பேரின்பநிலை.

44. களவினன் - வஞ்சகன். நறை - தேன்.

45. புங்கம் - தூய்மை.

46. தாணு - நிலைபெற்ற சிவன். மன்னுறவு - நிலை பெற்ற உறவு.

47. காமுறு - விருப்புள்ள.

48. உளைவுறும் - வருந்தத்தக்க. தளை - முறுக்கு.

49. அசம் - ஆடு. பாடாணம் - கல். படம் - துணி. சிகரி - தூபி. புற்புதம் - நீர்க்குமிழி. சுகவாரி-இன்பக்கடல்.

50. லோபம் - கருமித்தனம். பூரணர்-நிறைவுடையோர்.

51. நெய்யிழுது - நெய்த்தாரை. புணரி - கடல்.

# பாட்டு முதற்குறிப்பு

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை

## மீனாட்சியம்மை கலிவெண்பா, வேதகிரீசுரர் பதிகம், குமாரதேவர் நெஞ்சுவிடு தூது, குமாரதேவர் பதிகம், பஞ்சதிகார விளக்கம்




